என்றும் உங்களுடன் புத்தகம்-1

# மங்கையர் மலர்

நவம்பர் 2009 MANGAYAR MALAR 258 பக்கங்கள் ரூ.20/-

அழகுக்கு அழகு சேர்க்க...



இணைப்பு
வெளிநாட்டுப் பயணம் 64!

3 ...த்தகங்கள்

ஃபேப்ரிக் பெயிண்டிங் கற்கலாமே!

...காரிருள் நீக்கும் கார்த்திகை!

வாவ்... வெளவால் ராணி!

நோ சமரசம்! ஒன்லி சூப்பர் ரசம்...

Now with 10 years warranty

# ஆனந்தா

விழாக்கால சிறப்புச்சலுகை

## 30% வரை தள்ளுபடி






www.anantha.info



20% Off

### PERFECT / INNER LID

| LTR | MRP | OFFER PRICE |
|---|---|---|
| 3 | 729 | 583 |
| 5 | 1034 | 827 |
| 7.5 | 1440 | 1152 |
| 10 | 1579 | 1263 |
| Sr. Ex. WL | 1225 | 980 |



20% Off

### GRAPHITE (Black Cooker)

| LTR | MRP | OFFER PRICE |
|---|---|---|
| 3 | 1270 | 1016 |
| 5 | 1770 | 1416 |
| 7.5 | 2130 | 1704 |



25% Off

### CURRY 'N' BIRYANI COOKER

| LTR | MRP | OFFER PRICE |
|---|---|---|
| 4 (White) | 1455 | 1091 |
| 4 (Black) | 1965 | 1474 |



30% Off

### GAS STOVE

| LTR | MRP | OFFER PRICE |
|---|---|---|
| Double Burner | 1975 | 1383 |



3 Ltr Cooker Free! & Spl. Price

### FAMILY PACK

| LTR | MRP | OFFER PRICE |
|---|---|---|
| 7.5 | 2115 | 2050 |
| 10 | 2255 | 2188 |
| 12 | 2365 | 2294 |



Special Price

### WINNING COMBO

| LTR | MRP | OFFER PRICE |
|---|---|---|
| 3 ltr + Pressure Pan | 870 | 820 |
| 5 ltr + 3 ltr + Jr Pan without lid | 1940 | 1750 |
















முதலில் படிக்க...


ஒரு வார்த்தை - 5

அன்பு வட்டம் - 86


குஷி பக்கங்கள்


சொல்ல விரும்புகிறோம் - 8

கோலங்கள் - 28

என் செல்லமே - 166

குட்டீஸ் ஜூட்டி - 192


மனத்தில் நிற்கும் தொடர்கள்


பகவான் பாபா - 30

சிலிர்க்க வைக்கும் சித்தர் வரலாறு - 104

சாரதா பேசுகிறேன் - 134


சமையல்


ஆல் இன் ஒன் சமையல் - 97

















குக்கரி க்வீன் போட்டி முடிவுகள் - 138

**சிறுகதைகள்**

மீண்டும்... - 56

கூட்டாஞ்சோறு - 82

ஆஃப்டர் ஆல் ஒரு பெண் - 108

இன்னாசெய்தாரை (மினி தொடர் 2) - 142

**மருத்துவம்**

மெடிக்கல் கிட் - 20


அட்டையில் : நீலிமா

வண்ணப்படம் : 'ஜேடி ஜெர்ரி' மீடியா பார்க்

நன்றி: ராஜ்மஹால், மதுரை


**ரூ.5,000 பரிசு ஆன்மிகப் போட்டி 127**



களிர் மாத இதழ்!

என்றும் உங்களுடன்

**மங்கையர் மலர்**

மலர் 29 இதழ் 10 நவம்பர் 2009

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

அடுத்த இதழில்...

## கேளுங்க கீதாவை!



கை முறுக்குக்கு மாவுப் பதம் என்ன?

அவியலுக்கு ஜீரகம் அரைச்சு விடணுமா, வேண்டாமா?

ரவா கேசரி கட்டித் தட்டாமல் வர என்ன செய்யணும்?

இது போல உங்களுக்கு எத்தனையோ சந்தேகங்கள் இருக்கலாம். அதையெல்லாம் மங்கையர் மலருக்கு எழுதி அனுப்புங்க. சுவையான கேள்விகளுக்கு விளக்கம் தருகிறார்

**ஆல் இன் ஒன் சமையல் ராணி கீதா பாலகிருஷ்ணன்**

அதோடு, பிரசுரமாகும் ஒவ்வொரு கேள்விக்கும் சர்வதேச கூர்மான்ட் விருது பெற்ற,

**ஒரு விரல் தொடு முனையில்**

என்ற தமது பிரபல சமையல் புத்தகத்தைப் பரிசளிக்கிறார்.



உங்கள் அபிமான குட்டி புக்கில்

## மார்கழி ஸ்பெஷல் 64!



**கோலம் + ஸ்ரீஹரி துதி கொண்ட பயனுள்ள கையேடு!**

('ஓதக்கடலில்' என்ற ஹரி ஹரி ஸ்தோத்திரம் அனுப்பிய வாசகியின் பெயர், முழு முகவரி தேவை)

மிகப் பெரிய நிலைக்கு வந்துவிட்ட, இளம் தொழிலதிபர் அவர். நாள் முழுக்க உழைத்தாலும், புன்னகை மாறாத முகத்தோடு, உற்சாகமாக வளையவரும் அவரைப் பார்த்து பலருக்கு ஆச்சரியம்.

''இவ்வளவு உயரமான இடத்துக்கு நீங்கள் வந்தது எப்படி சுதா மேடம்? பெரிய பொறுப்பில் இருந்தும் எப்போதும் மகிழ்ச்சியோடு இருக்கீங்க. எவ்வளவோ வேலைகள் செய்யறீங்க. ஆனா லும் டென்ஷன் இல்லாமல் இருக்கீங்களே. அதன் ரகசியம் என்ன?'' என்று ஒருசிலர் அவரைக் கேட்டார்கள்.

''ரொம்பப் பெரிய ரகசியம் எதுவுமில்லை! நான் சாப்பிடும்போது சாப்பிடறேன். உழைக்கும் போது உழைக்கிறேன். என் குழந்தைகளுடன் நேரம் செலவிடும் போது, 10 நிமிடங்கள்தான் என்று இருந்தாலும் அவர்களோடு அந்த நேரத்தை முழுமையாக அவர்களுக்காக மட்டுமே செலவிடு கிறேன். தூங்கும் போது தூங்கறேன்!''

கேட்பவர்களுக்கு 'சப்' என்றாகிவிட்டது.

''இதெல்லாம் ஒரு பதிலாங்க? நாங்களும் அப்படித்தானே செய்யறோம்...?'' என்றார்கள்.

''இல்லை! நல்லா யோசிச்சு பாருங்க... உங்கள்ல பலர், சாப்பிடறீங்க. ஆனா அப்ப உங்க சிந்தனையெல்லாம் வேற எங்கியோ இருக்கும். சாப்பிடற சாப்பாட்டைப் பற்றி எந்த விழிப்புணர்வும் இல்லாம, விழுங்கி வைக்கறீங்க. ஒவ்வொரு கவளத்தையும் ரசிச்சு, ருசிச்சு சாப்பிடறதேயில்ல. அதே போல அலுவல கத்துல வேலை செய்றீங்க. உங்க உடம்புதான் நாற்காலியில இருக்கும். உங்க எண்ணமெல் லாம் வேற எங்கியோ சிக்கிக்கிட்டுத் தவிக்கும். நீங்க எப்போதும், எந்த வேலை செய்றீங்களோ அதுல முழு மனசோட இருந்தா, அதில் வெற்றி யும், மகிழ்ச்சியும் தானா வந்து சேரும்'' என்றார் திருமதி சுதா.

சமீபத்துல நானும் என் தோழி சுஜாதாவும் ஒரு கல்யாணத்துக்குப் போயிருந்தோம். அவள் ஒரு பள்ளி ஆசிரியை. கல்யாணத்தில் அவளால் கலகலப்பாகவே இருக்க முடியவில்லை.

''இந்நேரம் ஸ்கூலில் இன்ஸ்பெக்ஷன் முடிஞ் சுருக்கும். என்னோட கிளாஸை யார் எடுத்தாங் களோ என்னவோ? எட்டாங்கிளாஸ் பசங் களுக்கு மத்யானம் ரிவிஷன் டெஸ்ட் இருக்கு...'' புலம்பிக் கொண்டிருந்தாள். இடையே சில ஆசிரியத் தோழிகளுக்கு செல்ஃபோன் விசாரிப்பு கள் வேறு!

சாப்பிட்டு முடித்துக் கிளம்பும்போது, ''கேசரி கீர் நல்லா இருந்ததில்லையா?'' என்று கேட்

# ஒரு வார்த்தை!







என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
ஆசிரியர் பொறுப்பேற்று
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

பொறுப்பாசிரியர் : அனுராதா சேகர்

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8877
mangayarmalar@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.mangayarmalaronline.com





சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.250/-
வெளிநாடு : ரூ.2,200/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32




டேன்.

"அடடா... அப்படியா..? நான் சாப்பிடவேயில்லையே!" என்றாள்.

"நான்தான் பெரிய தம்ளர்ல எடுத்து வந்து கொடுத்தேனே! நீ கூட குடிச்சியே?" என்றபோது...

"குடிச்சேனா? ஓ!" என்றாள்.

நேராக அவளது ஸ்கூலுக்குப் போனோம். சில விடைத்தாள்களைத் திருத்த வேண்டியிருந்தது. விடைத்தாள்களைத் திருத்திக் கொண்டே, அவளது அம்மாவுக்கு ஃபோன் செய்தாள்.

"அம்மா... அனிதாவோட டான்ஸ் டிரஸ் ரெடி ஆச்சா? பூ வாங்கிட்டியா? ஒருதடவை ரிகர்ஸல் பண்ணச் சொல்லு. சிவப்புக் குஞ்சலம் கிடைச்சுதா?"

அருகிலிருந்த நான் சில தாள்களை விளையாட்டாக எடுத்தபோது, கூட்டலில் தவறு நேர்ந்திருந்ததை கவனித்துச் சொன்னேன்.

"அடடா! எவ்ளோ வேலை? டென்ஷனால தப்பாயிடுது!" என்றாள்.

சாயங்காலம் அனிதாவின் ஸ்கூலுக்குப் போகும்போது ஏதோ பரபரப்பில் ஆட்டோவில் செல்ஃபோனைத் தொலைத்து விட்டதால் அனிதாவின் பள்ளி நாடகத்திலும் அவள் மனம் லயிக்கவில்லை எனச் சொன்னாள்.

மகிழ்ச்சி, வெற்றி எல்லாம் அந்தந்த கணங்களில் வாழ்வதில் உள்ளது. ஒரு சமயத்தில் ஒரு செயலை மட்டுமே உணர்ந்து செய்வதை நாம் பழக வேண்டும். கொடுக்கப்பட்ட நேரத்தில் நீங்கள் எதை செய்து கொண்டிருந்தாலும், அதை மனம் ஊன்றி, முழு கவனத்தோடு செய்தால், அது தவறின்றியும், சிறந்ததாயும் அமையும். சிந்தனை ஒருமுகப்படும்போது, மன இறுக்கம் இருக்காது; வேலையும் சுலபமாகும்! நேரம் மிச்சமாகும்! செய்து முடித்த காரியத்தில் சிறந்த பலன் மட்டுமல்லாது முழு மனதிருப்தியும் கிடைக்கும். வண்ணத்துப்பூச்சி போல உற்சாகமாய், மனநிறைவோடு வளையவரலாம்.

இதை உணராது போனால், சுஜாவைப் போல நாள் முழுக்க தலைவலி தைலத்தோடு திரிய வேண்டியதுதான்!

அனுராதா நடராஜன்

**ச**வால்கள்தான் நம்மை எப்போதும் சுறுசுறுப்பாகவும், உத்வேகத்துடனும் வைத்திருக்கின்றன என்று 'ஒரு வார்த்தை' சுறாக்குட்டி கதை மூலம் விளக்கிய அனுஷாவை ஜீராக்குட்டி என்று அழைக்க லாமா? - **ஸ்ரீசெல்வ அரசி, வாழப்பாடி.**

**சி**றியோர் செயற்கரிய செயலினால் வளர்ந்து நிற்பர், என்பதனை டி.வள்ளி யம்மையின் 'ஒரு அடி நிலம்' சிறுகதை, சிறப்புடன் சித்திரித் திருந்தது.

**-சாந்தி சுந்தர், நெய்வேலி**

"**எ**ப்ப ரொம்ப உற்சாகமா இருப் பீங்க?" என்ற கேள் விக்கு, 24x7x30x12 என்ற ஒற்றை வரிக் (கணக்கு) கவிதை யாய் பதில் கூறி யிருந்த அனுஷாவை, 'உற்சாக ஊற்று'னு சொல்லலாமா!

**சி.விஜயாம்பாள், கிருஷ்ணகிரி**

**அ**ன்பு வட்டத் தில் உற்சாகமாக இருக்கும் நாட் கள் 24x7x30x12 என்று சொல்லியிருக்கிறீர்களே 24 (மணித்துளிகள்) x 7 (வார நாட்கள்) 30 (மாத நாட்கள்) x 12 (மாதங்கள்) சரியா? கணக்கின் விடை தவறுகிறதே. அதற்குப் பதில் 365 (நாட்கள்) x 24 மணி 8760 மணிகள் என்று கூறியிருக்கலாமே! மீதமுள்ள உற் சாக நாட்களைத் தவிர்த்து விட்டீர்களே!

**- கே.என்.சந்துருமதி, திண்டுக்கல்.**

**'நி**யூஸ்மார்ட்'டை இன்னமும் சற்று விரிவுபடுத்தலாமே. வெகு உபயோகம். காரசாரமான 'பெப்பர் பாப்கார்ன்' அவ் வளவுதானா? ஏக்கம் வலுக்கிறது.

**-ஸ்ரீதேவிராஜன், திருவிடைமருதூர்**

**'பெ**ப்பர் பாப்கார்னில்' செய்தி




# சச்சு••நச்சு•••

வாசிப்பாளர் ஜெயஸ்ரீயின் பதில்கள் ஒவ் வொன்றும் யதார்த்தமாக இருந்தது.

**- டி.சாந்தி, அம்மையப்பன்**

**'ஆ**ஹா 50'-ல் என்னுடைய குறிப்பு இடம்பெற்றதில் என் கணவர் உட்பட அனைவருக்கும் மகிழ்ச்சி. நீங்கள் அனுப்

பிய பரிசு எனக்கு எழுதும் ஆர்வத்தைத் தூண்டியிருக்கிறது.

- ஆர்.செல்விராம்குமார், திருச்சி.

பேபி சச்சுவின் முதல் தொடரே பிச்சு உதறிவிட்டது. அச்சு வெல்லம் நச்செவ மெச்சும்படி தொடர வாழ்த்து!

-எம்.அம்புஜம் முராரி, சேலம்.

கலகலப்பாகத் தொடங்கிய சச்சுவின் தொடர், ஓரிடத்தில் சட்டென இழை அறுந் தது. ''ஆம்... பதின்மூன்று பேர் இருந்த இடத்தில் இப்போது நானும் என் தாயும் தான்...'' என்று கூறும்போது மனம் ரொம் பவே கனத்தது. படித்து ஒரு வாரம் கடந் தும், அந்த வார்த்தை மட்டும் மனத்தை அழுத்திக் கொண்டேயிருந்தது.

-எஸ்.மோகனா செல்வகணேசன், சோழிங்கநல்லூர்

கல்கி தீபாவளி மலர் வெளியாகாத ஏமாற்றத்தை மங்கையர் மலர் தீர்த்து விட் டதே! பல்வகை பகுதிகளோடு தீபாவளி பலகாரங்கள் போலத் திறைறடித்து விட்டது. பலே!

-மல்லிகா அன்பழகன், சென்னை.

மெச்சு!

பூஞ்சாரல் பக்கங்களில் 'அமர்க்களம்' படப் பாடலை ரீமேக் செய்த பாடல் அமர்க்களம்தான். கோமதிப்ரியாவுக்குப் பாராட்டு!

- அய்யாறு எஸ்.வாசுதேவன், சென்னை.

'காக்கைகள்' என்ற தலைப்பில் வெளி யான உண்மை நிகழ்ச்சி மனதைத்

## சொல்ல விரும்புகிறோம்

தொட்டது.

-மறைமுதல்வன், வடமாதிமங்கலம்.

கேஸ் கனெக்ஷன் வாங்குவது, வேறு ஊருக்கு மாற்றுவது போன்ற சந்தேகங் களுக்கு சீனிவாசன் கொடுத்த விளக்கம் மிகவும் உபயோகமானதாக இருந்தது.

- எஸ்.மதுரம் ராம்குமார், ஸ்ரீரங்கம்

கேஸ் கனெக்ஷன் மாற்றுவது எப் படி? என்ற பயனுள்ள பகுதிக்கு கூடுத லாக ஒரு தகவல். டெபாசிட் ரசீது தொடர் பான டிரான்ஸ்பர் வவுச்சரில், காஸ் கனெக் டரின் வரிசை எண்; தயாரிப்பு விவரங் களைச் சரிபார்க்க இரண்டு விநியோகஸ் தர்களிடம் செல்லும் போதும் ''கனெக் டரை'' எடுத்துச் சென்று காண்பித்து வரவேண்டும்! விடுபட்டுப் போன இந்தச் செய்தியையும் வெளியிட வேண்டுகிறேன்.

- பார்வதி ராமச்சந்திரன், சென்னை.

அன்பு வாசகியரே...
உங்கள் படைப்புகள் எதுவானாலும் சொந்தமாக எழுதி அனுப்புங்கள். பிற பத்திரிகையில் வந்தவற்றை 'சுட்டு' எழுதுவது உங்களுக்கும், நமது மங்கையர் மலருக்கும் பெருமைசேர்க்காது. மொழிபெயர்ப்புகள் அல்லது தொகுப்புகளாக இருக்கும்பட்சத்தில், தகுந்த ஆதாரங்களோடு அனுப்பி வையுங்க. சென்ற இதழில் வந்த ஒரு பாடல் பற்றிய புகார்கள் நிறைய வந்துள்ளன. இது மறுபடி நிகழாமலிருக்க வாசகியரைக் கோருகிறோம். (-ஆர்)

'முதியோர் நலம்' என்ற தலைப்பில் அன்பு மகனுக்கும், ஆசை மகளுக்கும் சுபா சந்துரு, ஒரு வேண்டுகோள் விடுத்துள்ளார். படித்து முடித்ததும், கண்ணீர் பெருகியது.

-ஜி.கீதா, சேலம்

# தயாராகுது பட்டுப் புடவை!



"வாவ்! உன் பட்டுப் புடைவை டிஸைன்... கலர்... ஜரிகைன்னு எதுலயுமே குறையில்லாம இருக்கே, சூப்பரா செலக்ட் பண்ணியிருக்கியே!"ன்னு உங்களைப் பார்த்து சொன்னதுமே நீங்க பெருமைப்படு வீங்கதானே? அந்தப் பெருமைக்குப் பின்னாடி பெரிய பெரிய வேலையும் இருக்குங்க. அதைப் பத்தியும் நீங்க தெரிஞ்சுக்கங்கன்னு சொல்றாங்க பாலம் சில்க்ஸ் உரிமையாளர், ஜெயஸ்ரீ ரவி.

* கர்நாடக மாநிலத்தில்தான் 90% பட்டு நூல் உற்பத்தி செய்யப்படுகிறது.

* ஆரம்பக் காலத்தில் பட்டு நூலில், இயற்கைச் சாயங்களைத்தான் பயன்படுத்தினார்கள். தற்போது செயற்கை சாயங்கள் ஏற்றப்படுகிறது. இயற்கைச் சாயங்களை விட செயற்கை சாயங்களின் மூலம் அதிக நிறங்கள் கிடைப்பதும் ஒரு காரணம்.

* பட்டு நூலை பாவு (Warp) கட்டும் பணியைத் தொடர்ந்து, நெசவாளர்கள் பட்டு நூலை இழைகளாக நெய்வார்கள். நூல் 'மொத்து'ப்பட்டிருந்தால் அதை நீக்கி மெலிதாக்கி... என்று மிகப் பெரிய வேலை இது.




* பட்டுப் புடைவையில் வைக்கப்படும் டிஸைன் வாடிக்கையாளர்களுக்குப் பிடிக்கும் வகையில் தேர்ந்தெடுத்தாலே மிகப் பெரிய சக்ஸஸ்தான். அதிலும், பல்லூவில்தான் வேலை அதிகமிருக்கும். (இந்தப் பல்லூவையும், அந்த பார்டரையும் சேர்த்து ஒரு புடைவையா பண்ணிக் கொடுத்திருங்களேன்னு கேட்கிறவங்க கவனிச்சுக்கங்க).

* நெசவாளர்கள் டிஸைன், இயற்கைச் சாயம் ஏற்றிய பட்டு நூலை கலர் காம்பினேஷனோடு தேர்ந்தெடுத்து தறியில் புடைவையாக நெய்யத் தொடங்குவார்கள். ஒரு மீட்டர் துணி செய்ய நெசவாளர்கள் 1200 முறை பெடலில் கை கால்களை மேலும், கீழும் இயக்கி ஏறி ஏறி இறங்க வேண்டும். தற்போது ஜாக்கார்ட் அட்டை இவர்கள் வேலையை கொஞ்சம் எளிமையாக்கியிருக்கிறது. மற்றபடி பெரி.....ய வேலைதான்.

* இப்ப சொல்லுங்க பட்டுப் புடைவை அழகாயிருக்குங்கிற பெருமை நெசவாளர்களுக்குத்தானே போகணும்!

– லக்ஷ்மி






**கி**ரெடிட் கார்டின் ரகசிய குறியீட்டு எ ண் ணை , மொ பைல் ஃபோனில் பதிவுசெய் யாதீங்க. ஃபோன் தவறிப் போய் விரும்பத்தகாதவர்கள் கையில் சிக்கினால், ஆன் லைன் ஷாப்பிங் செய்து பிரச்னையில் மாட்டிக் கொள்வீர்கள்.

**- வெ.சியாமளா ரமணி, செகந்திராபாத்-9.**

**வீ**ட்டில் அதிகப்படியான சமையல் செய்யும்போது பாத்திரங்கள் நிறைய ஆகும். சமைக்கும் போது உடனே தேய்த்து விட்டால் வேலை குறையும். வேலைக்காரி யிடமும் நல்ல பெயர் வாங்கலாம்.

**- ஆர்.ரங்கநாயகி, கொல்கத்தா-40.**

**ரே**ஷனில் வழங்கும் இருபது கிலோ அரிசியை முழுமையாகப் பயன்படுத்தாத வர்கள், அருகிலுள்ள முதியோர் இல்லங் களுக்கோ, அனாதைக் காப்பகங்களுக்கோ வாங்கிக் கொடுக்கலாம். இதனால் உதவி செய்த மனநிறைவோடு அரிசி கடத்தலை யும் வெகுவாகத் தடுக்க முடியும்.

**-சுஜாதா, சென்னை.**

**தே**ங்காயைப் பல்லுப் பல்லாக நறுக்க, தேங்காய் மூடிகளைச் சிறிது நேரம் நெருப் பில் காட்டவும். ஓடு தனியாகவும், தேங் காய்ப் பருப்பு தனியாகவும் எளிதில் வந்துவிடும்.

**-என்.பி.சிவகாமி செல்வம், குஜராத்.**

**பு**ட்டுக்கு மாவை வறுப்பதை விட அரிசியை வறுத்து, மாவாக்கி புட்டு செய்யலாம். புட்டு உதிரி, உதிரியாக வரும். கட்டித் தட்டாது.

**- என்.விஜயலக்ஷ்மி, தபோவனம்.**

**ஐ**ந்நூறு, ஆயிரம் ரூபாய் தாள்களை செலவழிப்பதற்கு முன்பு, அதன் சீரியல் எண்களை எழுதி வைத்துக் கொள்ளுங்கள். நோட்டை மாற்றி வைத்துத் தகராறு செய் தால், இது உபயோகமாக இருக்கும்.

**- ஜெ.விஜயலக்ஷ்மி, சென்னை.**

**வ**லைதளத்தில் ரயில் பயணச் சீட்டுகளைப் பதிவுசெய்து கொள்வதால், நடுத்தர மக்களுக்கு ரயில் பயணச் சீட்டுகள் கிடைப்பதில்லை. வலைதளத்தில் பதிவு செய்பவர்களுக்கு இருபத்து ஐந்து சதவிகிதம் மட்டும் ஒதுக்கினால் மற்றவர்களுக்கும் பயணச்சீட்டு கிடைக்குமே!

**- வி.முத்துலக்ஷ்மி, கோவை.**

## இவை எல்லாமே ஆஹா 50 தான்!

# எஞ்சல்ஸ்®

அட்வான்ஸ்ட் க்ளினிக் (பி) லிட்

(Since 1991)

ஹேர், ஸ்கின் & பாடி கேர்

# Angels®

(Since 1991) Advanced Clinic Pvt. Ltd.

**HAIR, SKIN & BODY CARE**

## Before & After

## About the Treatment



### WEIGHT REDUCTION THRU CELLULITE THERAPY, BODY FORMER & PROTEIN THERAPY

சிலருக்கு வயிறு பகுதி சரியாக இருக்கும். ஆனால் காலின் தொடை பகுதி மிக பருமனாக இருக்கும். இவர்களுக்கு **Figure Correction** மூலம் அக்குறையை நிவர்த்தி செய்துவிடலாம்.



### GOOD BYE TO BALD HEAD WITHIN ONE HOUR THRU SILICON SYSTEM

பாதி வழுக்கை, பாரம்பரிய வழுக்கை, வியாதிகளால் உதிர்ந்த உங்கள் தலைமுடியை சிலிகான் சிஸ்டம் என்ற நவீன தொழில் நுட்பத்தின் மூலம் தலைமுடியை ஒழுங்கு படுத்திவிடலாம்.



### UNWANTED & EXCESS HAIR REMOVAL thru ND-YAG LASER

**(Ex. UpperLip, Chin, Cheeks, Abdomen, Chest, Ears)**

இச்சிகிச்சையின் மூலம் பெண்களுக்கு மேல் தாடை - கீழ் தாடை - அக்குள் - வயிறு - மார்பகம் போன்ற பகுதிகளிலும் தேவையற்ற ரோமங்களை குறைந்த சிட்டிங்கில் நிரந்தரமாக நீக்கி விடலாம்.



### COLOUR IMPROVEMENT & PIGMENTATION THRU IMPORTED INHIBITORS

உங்கள் சருமத்தில் ஓவர் ஆக்டிவேட் ஆன மெலனின் பிக்மெண்டுகளை லைட்டாக்கலாம். இதன் மூலம் நிறத்தை மேம்படுத்தலாம். இவ்வாறு ஏற்படும் முன்னேற்றம் நிரந்தரமானதென்பது எங்களின் சிறப்பம்சமாகும்.

**CHENNAI:** AA1, 1st Cross St., 3rd Main Road, RVR Towers, 2nd Floor, Annanagar, Chennai - 600040. Ph: 044-26212547 / 26213468, 42176679. Cell: 98400 46599. www.angelsgroup.co.in

**COIMBATORE:** RR Complex, V.O.C. Road, 117/B, West Sambandham Rd, R.S.Puram, Coimbatore. Ph: 0422 - 6547577, 2547889. Cell: 92444 15899

**Our New Branches Opening on 28th Oct**

**MADURAI:** 1st Floor, Veeyar Nilayam, No.171, KK Nagar, Opp. A.R. Hospital **Ph: 0452-4395859, 2583738**

**TRICHY:** Neptune Towers, No.B-11/1, 2nd Cross Road (West), Thillai Nagar, Trichy - 620018. **Ph: 0431-4311569, 2765859**

[illegible] VIJAY TV - [illegible] 10.30 [illegible] 11.00 [illegible]

- Hyderabad - (040)23222111, 66368999
- Bangalore - (080)41153995, 41153996, 09845566799

# குக்கரி க்வீன்!

**மிக்ஸ் அண்ட் மேட்ச் சமையல் போட்டி**

குக்கரி தர்பாரில் கலந்துக் கொள்ள சமையல் ராணிகளை அழைக்கிறோம். ஒரிஜினல் சமையல் குறிப்புகளைத் தெளிவாக எழுதி, கீழே உள்ள கூப்பனையும் நிரப்பி அனுப்புங்க: தேர்ந்தெடுக்கப்படும் ஐந்து ரெஸிபிகளுக்கு தலா ரூ. **250/-** பரிசு!

குக்கரி க்வீன் சமையல் போட்டி (நவம்பர்)

கண்டிப்பாகப் பயன்படுத்த வேண்டிய பொருள்கள்

**துவரம் பருப்பு + கீரை**

பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................

..............................................

கடைசித் தேதி : 25.11.2009

இந்த இதழில் 'ஆஹா 50'! என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ள டிப்ஸ்களைப் படியுங்கள். மிகச்சிறந்த ஒரே ஒரு குறிப்பைத் தேர்ந்தெடுத்து எழுதி அனுப்புங்கள். உங்கள் தேர்வும், ஆசிரியர் குழுவின் தேர்வும் பொருந்தினால் குலுக்கல் முறையில் **ரூ.150/- பரிசு!** தேர்ந்தெடுப்பவருக்கு மட்டுமல்ல, அந்தக் குறிப்பை எழுதியவருக்கும் **ரூ.150/- பரிசு!** 'நவம்பர் - ஆஹா பரிசு' என்று மறக்காமல் குறிப்பிட்டு பக்க எண், வாசகி பெயருடன் அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி அனுப்புங்கள்.

**கடைசித் தேதி 15.11.2009.**



## ஆஹா பரிசு!

## அடிச்சாங்க பரிசு!

ஆஹா பரிசு அக்டோபர் (2009) போட்டியில் "பெரும்பாலான அரசின் திட்டங்கள், சலுகைகள், பாமர மக்களுக்குத் தெரியாமலே போய்விடுகின்றன. அப்படியே தெரிந்தாலும் அதற்குரிய சரியான நடைமுறைகள் தெரிவதில்லை. இதைத் தொலைக்காட்சியில் ஒளிபரப்பினால் (ஏழை மாணவர்க்கு கட்டணச் சலுகை, சாதிச் சலுகை, பண உதவி போன்றவை) அனைவருக்கும் பயன்தரும் அல்லவா?" என்ற குறிப்பை எழுதி **ரூ.150/-** பரிசு பெறுகிறார் **ஜெகா, கும்பகோணம்.** அதே டிப்ஸை சிறந்ததாகத் தேர்வு செய்த பல வாசகியரில் குலுக்கல் முறையில் **ரூ.150/-** பரிசு பெறுகிறார் **பி.வேதவல்லி, சென்னை-102.**

# ஆப்பிள் மரத்தின் ஆனந்தம்!



**பெ**ரிய தோட்டம் ஒன்றில் உயர்ந்த ஆப்பிள் மரம் கனிகளுடன் இருந்தது. ஒருநாள் ராமு என்ற சிறுவன், ஆப்பிளைப் பறித்து சாப்பிட்டபடி, மரத்தைச் சுற்றிச் சுற்றி ஓடி விளையாடிக் கொண்டிருந்தான். இதனைக் கண்ட ஆப்பிள் மரம் மிகவும் மகிழ்ச்சி அடைந்தது. பின்பு, அவன் வெகு நாட்கள் இந்தப் பக்கமே வரவில்லை.

பல ஆண்டுகள் சென்ற பின், ஒருநாள் ராமு, மரத்திடம் வந்தான். ஆப்பிள் மரம், ''ஏனப்பா இவ்வளவு நாட்கள் வரவில்லை'' என்று வருத்தத்துடன் கேட்டது. ''நான் என்ன சின்ன பையனா, உன்னைச் சுற்றி ஓடி விளையாட. எனக்குச் சில பொருள்கள் வாங்க பணம் வேண்டும்'' என்றான்.

ஆப்பிள் மரமோ, ''அவ்வளவுதானே, எனது ஆப்பிள் பழங்களையெல்லாம் பறித்து விற்று, கிடைக்கும் பணத்தில் உனக்குத் தேவையானதை வாங்கிக் கொள்'' என்றது. அப்படியே செய்த ராமு மீண்டும் பல மாதங்கள் வராமல் இருந்தான்.

**ஒ**ருநாள் ஆப்பிள் மரத்திடம் வந்து, ''எனக்கு வீடு கட்டிக் கொள்ள ஆசையா இருக்கு'' என்றான். ''எனது கிளைகளையெல்லாம் வெட்டி வீடு கட்டிக் கொள்ளேன்'' என்றது மரம்.

இவனும் அப்படியே செய்து மீண்டும் பல மாதங்கள் இந்தப் பக்கம் திரும்பவில்லை. ஒரு நாள் மறுபடியும் வந்து, ''நான் ஜாலியாக படகு சவாரி செய்ய வேண்டும்'' என்றான்.

''எனது, நடுத்தண்டு பகுதி, ஒரு படகு செய்யப் போதுமானது'' என்று மரம் சொல்ல, ராமுவும் படகு செய்து, அதில் சவாரி செய்து மகிழ்ந்தான்.

ஒருநாள் மிகவும் சோகமாக வந்து நின்ற ராமுவை பார்த்து, ஆப்பிள் மரம், ''குழந்தாய், இப்போ என்னப்பா கவலை?'' என்றது.

''இப்போது பழம் சாப்பிட எனக்குப் பற்கள் இல்லை. நிறைய ஓய்வு தேவை. நான் சாய்ந்து கொள்ள ஓர் இடம் தேவை'' என்றான்.

''இதோ, எனது அடிமர வேரில் சாய்ந்து கொண்டு நிம்மதியாக ஓய்வு எடுத்துக் கொள்'' என்றது மரம். ஆப்பிள் மரத்தின் தியாகப் பண்பைக் கண்டு உருகி நின்றான் ராமு.

**அ**ந்த ஆப்பிள் மரம் போல்தான் நமது பெற்றோரும். பிள்ளைக்காகவே வாழ்ந்து, பிள்ளைக்கே எல்லாவற்றையும் கொடுத்து, பிள்ளையின் எதிர்காலத்தைப் பொற்காலமாக்கும் தியாக குணம் கொண்டவர்களை, அந்தப் பிள்ளைகள் முதியோர் இல்லத்தில் சேர்ப்பது எத்தனை கொடுமை? சிந்திப்போமா?

**- வசந்தா, சென்னை.**

**சிந்திக்க... சிறக்க...**

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர் – பாலம் சில்க்ஸ்




## இணைந்து வழங்கும்

# சேலை சேலஞ்ச்!

## க்விஸ் போட்டி - 3



ரூ.15,000 பரிசு!

கீழ்க்கண்ட கேள்விகளுக்கான விடைகளில் சரியானவற்றை ☑ செய்து அனுப்புங்க! குலுக்கல் முறையில் 10 பேருக்கு ரூ.1,500/- பெறுமானமுள்ள பரிசுக் கூப்பன்களை வழங்குகிறது பாலம் சில்க்ஸ். பெண்கள் சம்பந்தப்பட்ட போட்டி! அப்புறமென்ன? கட்டிக் கலக்குங்க!

1. எது சரி?

அ. பட்டுப் புடைவைகளை ட்ரை க்ளீனிங்கிற்குப் போடக் கூடாது.

ஆ. பட்டுப் புடைவைகளைத் துவைத்த பிறகு நேரடியாக சூரிய வெளிச்சத்தில் உலர்த்தக் கூடாது.

இ.அதிக ஜரிகை உள்ள பட்டுப் புடைவைகளை வாங்கக் கூடாது.

2. தறியில் புடைவையை நெய்யும்போது அதில் இடம்பெறும் இரு முக்கிய இழைகளில் ஒன்றை ஊடு என்று குறிப்பிடுவார்கள். மற்றொன்று எது?

அ) குழி ஆ) பாவு இ) சாயம்

3. பட்டுப் புழுக்கள் எந்த இலைகளைச் சாப்பிடும்?

அ) நெல்லி ஆ) செர்ரி இ) மல்பெர்ரி

4. பொதுவாக எந்தவகைக் காய்கறிகள் இயற்கைச் சாயம் ஏற்ற பயன்படுகின்றன?

அ) கேரட் ஆ. பூசணி, இ. கத்திரி, வெண்டை.

5. பட்டு ஜரிகைகள் எந்த நகரத்திலிருந்து வரவழைக்கப்படுகின்றன?

அ) சூரத் ஆ) ஆந்திரா இ) குஜராத்

- ஜி.எஸ்.எஸ்.

போட்டி விதிகள் :

*'சேலை சேலஞ்ச்-3' விடைகளை நிரப்பி, இந்தப் பக்கத்தைக் கத்தரித்து, மங்கையர் மலருக்கு அனுப்புங்க. ஒருவரே எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஜெராக்ஸ் கூடாது.*

கடைசித் தேதி : 5.12.2009

பெயர் : .............................................. விலாசம் : ..............................................

..............................................................................................................................

..............................................................................................................................

தொலைபேசி எண் : .............................. ஈ-மெயில் : ..............................................



எனக்கு வயது 52. பதினெட்டு வருடங்களாக ருமடாய்டு ஆர்த்ரைட்டீஸ் பிரச்னை இருக்கிறது. தைராய்டு மாத்திரை சாப்பிட்டு வருகிறேன். பற்கள் நல்ல நிலையில் இருந்தாலும், பற்களில் வலது மேல் பகுதியில் அதிக ரத்தக்கசிவு இருந்து கொண்டேயிருக்கிறது. இதற்கு என்ன காரணம்? இதைத் தவிர்க்க என்ன செய்ய வேண்டும்?

- சி.பூங்கோதை, சென்னை-78.

**பதில்: டாக்டர் எஸ்.ராமச்சந்திரன்,எம்.டி.எஸ்.,** *(பல் மருத்துவ நிபுணர்).*

ஒரே பல்லில் மட்டுமா அல்லது பல பற்களிலிருந்து ரத்தக் கசிவா என்று நீங்கள் குறிப்பிடவில்லை. நீங்கள் சொல்வதைப் பார்த்தால் உங்கள் ஈறுகளில் இன்ஃபெக்ஷன் ஏற்பட்டிருக்கும் என்று தோன்றுகிறது. உங்களுக்கு ருமடாய்டு ஆர்த்ரைட்டீஸ் இருப்பதாகவும் குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஒருவேளை இதன் ஆரம்பமே இந்த ஈறு பாதிப்பாகக் கூட இருக்கலாம்.

உங்கள் ரத்த அழுத்தம், மற்றும் சர்க்கரை அளவைப் பரிசோதித்தீர்களா? உங்கள் பற்கள், ஈறு இவற்றை எக்ஸ்ரே எடுத்து, ஈறு எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டு உள்ளது என்பதைப் பொறுத்தே பற்களை எடுப்பதா வேண்டாமா என முடிவு செய்ய வேண்டும். உடனடியாக, பல் மருத்துவரிடம் சென்று பரிசோதித்துக் கொள்ளுங்கள். ஈறுகளில் பாதிப்பு அதிகமிருந்தால் அறுவை சிகிச்சை கூட தேவைப்படலாம்.



எனக்கு வயது முப்பத்தைந்து. கடந்த ஐந்து வருடங்களாக சினைப் பையில் நீர்க்கட்டி இருக்கிறது. இக்கட்டியினால் உபாதையின்றி இருக்க என்ன செய்ய வேண்டும்? இந்தக் கட்டி மேலும் வளருமா?

-எஸ். உஷா, சென்னை.

**பதில்: டாக்டர் அமுதா ஹரி** *(மகப்பேறு மருத்துவர்)*



ஹார்மோனல் இம்பேலன்ஸ் எனப்படும் ஹார்மோன் குறைபாடுகளால்தான் உங்கள் சினைப்பையில் நீர்க்கட்டி உருவாகிறது. உங்கள் கேள்வியிலிருந்து இதுவரை நீர்க்கட்டியால் உபாதை எதுவும் இல்லை என்றே தோன்றுகிறது. அனாவசியமாக கர்ப்பப்பையைச் சோதித்து, வேறு பிரச்னைகளைச் சந்தித்து விடாதீர்கள். மகப்பேறு மருத்துவரின் ஆலோசனைப்படி சிகிச்சை பெறுங்கள்.

# மெடிக்கல் கிட்



**வாசகர்களின் சந்தேகங்களுக்கு பிரபல மருத்துவர்கள் பதிலளிக்கிறார்கள்... வாசகர்கள் தொடர்ந்து கேள்விகளை அனுப்பலாம்!**

**நான் இறந்த பிறகு, எனது உடலை மருத்துவக் கல்லூரிக்கு தானம் செய்ய விரும்புகிறேன். இதற்கு யாரை அணுக வேண்டும்? அதற்கான வழிமுறைகள் என்ன என்று சொல்லுங்களேன்?**

**- ராஜி சுவாமிநாதன், சீர்காழி.**



**பதில்: டாக்டர் ஜி.எஸ்.நடராஜன்** *(அனஸ்தீஷியா நிபுணர்)*

முதலில் உங்களுக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். உங்களது விருப்பம் மிக உயர்ந்தது. வருங்கால மருத்துவ மாணவர்களுக்கு மிகவும் பயன்தருவது. சென்னை கீழ்ப்பாக்கத்தில் இருக்கும் மருத்துவக் கல்வி இயக்குநரின் (Director of Medical Education) அலுவலகத்தில் இதற்கென விண்ணப்பப் படிவம் கிடைக்கும். அதை வாங்கிப் பூர்த்தி செய்தால், அவர்கள் உங்களது பெயரைப் பதிவுசெய்து கொள்வார்கள். உங்கள் காலத்துக்குப் பின் உங்கள் உறவினர்கள் அவர்களைத் தொடர்பு கொண்டால் முறைப்படி ஆவன செய்வார்கள்.



**எனது கணவர், மலச்சிக்கலால் மிகவும் சிரமப் படுகிறார். தினமும் வாழைப்பழம் சாப்பிட்டும் பெரிய பயன் தெரியவில்லை. ஏதாவது வழிகூறுங்களேன்?**

**- மலர்விழி கண்ணப்பன், தருமபுரி.**



**பதில்: எம்.கோலப்ப பிள்ளை, பி.எஸ்.எம்.எஸ்.,** *(சித்த மருத்துவர்)*

மலச்சிக்கலுக்கு வாழைப் பழத்தை விட கொய்யாப் பழம், பப்பாளிப்பழம்,

***இரண்டு மணி நேரத்துக்கு மேல் பேருந்தில் பயணம் செய்தாலோ, ஒரே இடத்தில் அதிக நேரம் உட்கார்ந்திருந்தாலோ முதுகுவலி, மூட்டுவலி ஏற்படுகிறது. என்ன செய்யலாம்?***

**ந. முராரி, சேலம்.**



**பதில்: டாக்டர். கே. கார்த்திக் கைலாஷ்,** *(எலும்பு மருத்துவ நிபுணர்)*

நீங்கள் உங்கள் வயதைக் குறிப்பிடவில்லையே! வயதானால் முதுகு எலும்பு, மூட்டு தேய்ந்து போவதால் வலி ஏற்படுகிறது. பேருந்தில் பயணம் செய்தால் மட்டுமில்லை. தொடர்ந்து ஒரு மணி நேரம் உட்கார்ந்தாலும் இந்த வலி வரும். ஐம்பது வயதுக்கு மேற்பட்டோருக்கு இது சகஜம். இந்த வலியை நீக்க முடியாது. குறைக்க முடியும். அரை மணிக்கு ஒருமுறை எழுந்து நின்று, நடப்பதன் மூலம் நிவாரணம் கிடைக்கும். மற்றபடி முதுகெலும்புக்கு, மூட்டுக்கு என்று தகுந்த உடற்பயிற்சிகளைச் செய்வதன் மூலம் வலியைக் குறைக்கலாம்.

கீரைகள், வாழைத்தண்டு போன்றவையே சிறந்தவை. மலச்சிக்கல் இருப்பவர்கள் நிறைய தண்ணீர் குடிக்க வேண்டும். தினமும் அரை டீஸ்பூன் கடுக்காய்த் தூளை வெந்நீரில் கலந்து இரவு நேரத்தில் குடிக்கலாம். திரிபலா சூரணம், அல்லது நிலவாகை சூரணமும் சாப்பிடலாம். தினமும் இரவில் சூடான பசும்பாலுடன், பத்து உலர்ந்த திராட்சைப் பழம் சேர்த்துச் சாப்பிட்டால் மலச்சிக்கல் தீரும்.

***எனது மகளுக்கு பதினான்கு வயதாகிறது. அவளது தலையில் நிறைய பொடுகு உள்ளது. தலைமுடியும் கொட்டுகிறது. அதற்கு என்ன செய்ய வேண்டும்?***

**- லலிதா துரைசாமி, வாலாஜா.**

பொடுகு என்பது நோய் அல்ல. உடலில் இயல்பாகவே தோன்றும் இயற்கையான செதில்கள்தான் பொடுகு. அது அளவுக்கு அதிகமாகத் தோன்றும்பொழுது தலையில் அரிப்பு, முடி உதிர்தல் ஏற்படுகிறது. சில நேரங்களில் புண்களையும் உண்டாக்கும். பொடுகு தீர பொடுதலை என்னும் மூலிகைக் கீரைச் சாற்றை, தேங்காய் எண்ணெயில் சேர்த்துக் காய்ச்சி, தலையில் தேய்த்து வர, தலை அரிப்பு நீங்கி முடியும் வளரும்.

முடி உதிர்வதற்கு பல காரணங்கள் உள்ளன. இரும்புச் சத்துள்ள கீரைகள், காய்கறிகள், கறிவேப்பிலை, வெங்காயம் போன்றவற்றை நிறையச் சாப்பிட கூந்தல் பலம்பெறும்.

தொகுப்பு: **பத்மினி பட்டாபிராமன்**

''நான் குழந்தை நட்சத்திரமா, நிலைச்சு நின்னதுக்குக் காரணம், பேபி சரோஜாதான். அவங்கதான் என்னோட இன்ஸ்பிரேஷன். அந்தக் காலத்துல அவங்களோட நடிப்புக்கும், பாட்டுக்கும் அப்படியொரு 'கிரேஸ்' இருந்தது. அந்தச் சமயத்துல பிறந்த நிறைய பெண் குழந்தைகளுக்கு பேபி சரோஜான்னே பெயர் வெச்சாங்க. பேபி சரோஜா வளையல், ரிப்பன், ப்ரோச்னு பாப்புலரா விற்குமாம்.

'' 'பேபி சரோஜாவைப் பாரு. எவ்ளோ சுட்டியா நடிக்கிறா. அவளை மாதிரி நீயும் வரணும்'னு சொல்லிச் சொல்லியே, பாட்டி




# ரோஜா மலரே




என்னை உற்சாகப்படுத்துவாங்க''னு சச்சு சொன்னதும், பேபி சரோஜாவையும், சச்சுவையும் சந்திக்க வைக்கும் எண்ணம் உருவானது.

சென்னை கலாக்ஷேத்ரா காலனி. 'டாண்' என்று சொன்ன நேரத்துக்குத் தயாராக இருந்தார் திருமதி சரோஜா. ''பிரைட்டா இருக்கேனாம்மா? ஃபோட்டோவுக்கு நல்லா இருக்குமில்லையா?'' என்று கேட்டபடி வரவேற்றார். எளிய பட்டுப் புடைவை, வைரத் தோடு, மூன்றிழை முத்துச்சரம்... உடையும், பேச்சும் அத்தனை நறுவிசு! இனி ஓவர் டு சச்சு!

**சந்திப்பு : அனுராதா சேகர்**

# ராஜகுமாரி!

''அமெரிக்கன் சினிமாவுல ஷெர்லி டெம்பிள்னு ஒரு பேபி ஆர்டிஸ்ட் ரொம்பப் பிரபலம். இங்க நம்ம பேபி சரோஜாவுக்கும் அப்படியொரு பாப்புலாரிடி இருந்ததால அவங்களை 'இந்தியன் ஷெர்லி டெம்பிள்'னு குறிப்பிடுவாங்க. அவங்க 'பாலயோகினி', 'தியாக பூமி', 'காமதேனு'ன்னு மூணே படங்கள்லதான் நடிச்சுருக்காங்க. ஆனா இன்னிக்கும் 'பேபி சரோஜா'ன்னா, பழைய தமிழ் ரசிகர்களுக்கு அப்படியொரு ஆசை!

அவங்களைப் பார்த்துப் பேசி, அவங்க அனுபவங்களையும் பதிவுசெய்யணும்னு நினைச்சேன். உடனே எஸ்.வி. ரமணன் அண்ணாகிட்டே பேசி, பேபி சரோஜாவோட தொலைபேசி எண்ணை வாங்கினேன்.

பேபி சரோஜா அம்மாவுக்கு என் குரலைக் கேட்டதிலே ரொம்பச் சந்தோஷம். எண்பத்தொரு வயதைத் தாண்டியிருந்தாலும், நல்ல ஞாபக சக்தியுடன் இருக்கிறார். காடராக்ட் ஆபரேஷன் செய்து கொள்ளவில்லை. பல் செட் இல்லை.. உற்சாகமாகப் பேசுகிறார்.''

**நாங்கள் பேசியதன் ஒரு சிறு தொகுப்பு:**

***சச்சு:*** *அக்கா, நீங்க பேபி ஆர்டிஸ்டா நடிக்க வந்தது எப்படி?*

**பேபி சரோஜா:** எங்கப்பா பேரு

## சச்சுவின் அச்சுவெல்லத் தொடர் - 2

கே.விஸ்வநாதன். அவ ரோட சொந்த அண்ணாதான் பிரபல டைரக்டர் கே.சுப்ரமணியம். அதாவது என்னோட பெரியப்பா. வீட்டுல எப்பவும் பாட்டு, வீணை, நாட்டியம்னு கலைச் சூழ்நிலையாவே இருக்கும். சின்னக் குழந்தையிலே நான் நல்லா திருத்தமா பேசுவேனாம். பாட்டோ, ஸ்லோகமோ ஏதாவது சொல்லிக் கொடுத்தா, 'சட்'னு பிடிச்சுக்குவேனாம். அதனால, பெரியப்பா, என்னை 'பாலயோகினி'ல நடிக்க வெச்சார்.



**சச்சு: 'பாலயோகினி' என்ன மாதிரியான சப்ஜெக்ட்?**

**பேபி சரோஜா:** சமூக சிந்தனையுள்ள படம்தான். கே.சுப்ரமணியம் படம்னாலே நல்ல கருத்துள்ள படமாதான் இருக்கும். அதுல பாலசரஸ்வதி, ப்ரகதாம்பாள், ருக்மணி (நடிகை லக்ஷ்மியின் தாயார்).. இவங்களோட நானும் நடிச்சேன். அவங்கள்லாம் என்னை விடக் கொஞ்சம் பெரியவங்க. எனக்கு ஏழு வயசு. அதனால 'சோட்டீ'ன்னே கூப்பிடுவாரு பெரியப்பா.

**சச்சு: நீங்க வசனம் பேசுறதோட, பாட்டும் பாடியிருக்கீங்க இல்லையா?**

**பேபி சரோஜா:** ஆமாமா. அந்தக் காலத்துல, டப்பிங், பின்னணிக் குரல் போன்ற சங்கதிகளே கிடையாதே. தலைக்கு மேலே பெரிய மைக் தொங்கும். டெப்ரி காமிரா ஓடும். ரொம்பக் கவனமா வசனம் பேசி நடிக்கணும். ரீடேக் வேண்டுமானால் எடுத்துக்கலாம். ஆனால் அதற்கெல்லாம் தேவையில்லாதபடி, அந்தக் காலத்து ஆர்டிஸ்ட்டுகள் முழு ஈடுபாட்டோட பாடி நடிச்சுடுவாங்க.

**சச்சு: நீங்க பாடின பாட்டு எல்லாம் சூப்பர் டூப்பர் ஹிட்டாகி, ரிகார்ட்ஸ் எல்லாம் படுபயங்கரமா விற்பனையாச்சாமே!**

**பேபி சரோஜா:** ''கண்ணே பாப்பா, மிட்டாயி வாங்கித் தருகிறேன்!'' - இது 'பாலயோகினி'யில நான் பாடினது. ''சொல்லு... காந்தித் தாத்தாவுக்கு ஜே... ஜே!'' இது 'தியாகபூமி' பாட்டு... இந்த இரண்டுமே எனக்கு ரொம்ப நல்ல பேர் வாங்கித் தந்தன.

**சச்சு: அப்புறம் அக்கா, உங்களை வெச்சு ''வாருக்குப் போறேன்'னு ஒரு பாட்டு, மக்களிடையே ரொம்பப் பிரபலமா இருந்ததாமே! எங்க வீட்டு சமையல் மாமி கூட பாடிக் காட்டினாங்க.**

**பேபி சரோஜா:** ஆமாம்மா! ''பேபி சரோஜா, வாருக்குப் போறேன். நீ கவலைப் படாதே!''னு தேசபக்திப் பாட்டு! அப்போ யுத்த சமயம் இல்லையா? யார் இயற்றினாங்கன்னு தெரியலை. ஜனங்க எல்லாம் பாடிக்கிட்டிருந்தாங்க.

**சச்சு: 1937-40 கிட்டத்தட்ட மூணே வருஷம்... அதற்கப்புறம் நீங்க நடிக்க வேயில்லையே.. ஏன்?**

**பேபி சரோஜா:** 1941ல இரண்டாவது உலக யுத்தம் ஆரம்பிச்சுடுச்ச. கடற்கரை ஓரமா இருந்த தன்னோட வீட்டை, மிலிட்

சின்ன குழந்தைகள் அரைகுறை டிரஸ்ஸைப் போட்டுகிட்டு, பெரியவங்க மாதிரி பாவனை

டெரி ஹவுஸா மாற்ற ஒப்பு தல் கொடுத்துட்டாரு எங்க பெரியப்பா. அப்புறம் குடும்பம் மொத்தமா கிளம்பி, சொந்த ஊரான பாபாநாசத்துக்கே போயிட்டோம். அங்கே சமஸ்கிருதம், பாட்டு, வீணை எல்லாம் கத்துக்கிட்டேன். அப்புறமா பெங்களூர் போனோம். எஸ்.எஸ்.எல்.சி. முடிச்சேன். சென்ட்ரல் காலேஜ் ஆஃப் மியூஸிக்கில் இசை, ஓவியம் கத்துக்கிட்டேன்.



1955ல் கல்யாணமாச்சு. என் கணவர் ராமாமிர்தம் மும்பையில இன்ஜினியரா இருந்தார். கிட்டத்தட்ட 35 வருஷம் அங்கேயே இருந்தோம். ரிடையர்ட் ஆனப்புறம் மறுபடி சென்னைக்கே வந்துட்டோம்.

**சச்சு: அக்கா, உங்களுக்கு மூன்று குழந்தைகள் இல்லையா?**

**பேபி சரோஜா:** பொண்ணு உஷா.. பி.எச்டி., மும்பையில இருக்கா. மூத்த மகன் பரத் ராமாமிர்தம் பிரபல ஃபோட்டோகிராபர். இரண்டாவது மகன் ரவி, லண்டனில் கம்ப்யூட்டர் பிசினஸ் செய்கிறான்.

**சச்சு: தொடர்ந்து நடிச்சு, பெரிய ஸ்டாராயிருக்கலாமேன்னு எப்பவாவது தோணியிருக்கா?**

**பேபி சரோஜா:** அந்த எண்ணமே வரலைம்மா!

**சச்சு: சினிமா, டீ.வி.எல்லாம் பார்க்கறதுண்டா? உங்களுக்குப் பிடிச்ச குழந்தை நட்சத்திரம் யார்?**

**பேபி சரோஜா:** ஸாரி... எனக்கு யாரையும் தனிப்பட்ட முறையில் குறிப்பிட்டுச் சொல்லத் தெரியலை. முன்னெல்லாம், குழந்தைகள், குழந்தைகளா நடிச்சாங்க. ஆனா, இப்ப குழந்தைகளை, பெரியவங்க போல இமிடேட் செய்ய வைக்கறாங்க. சின்னக் குழந்தைகள் அரைகுறை டிரஸ்ஸைப் போட்டுக்கிட்டு, பெரியவங்க மாதிரி பாவனைக் காட்டி, ஆபாசமா ஆடறதைப் பார்க்கும் போது, மனசுக்குக் கஷ்டமா இருக்கு. பை தி வே... உன்னோட 'வீட்டுக்கு வீடு லூட்டி' பார்த்திருக்கேன். ஓவர்டு பண்ணாம ரொம்ப நல்லா நடிச்சிருந்தே சச்சு!

**சச்சு : தாங்க்ஸ் அக்கா!**

**பேபி சரோஜா:** நாங்கள்லாம் சின்னக் குழந்தைகளா இருந்தப்போ, நாடும் சமுதாயமும் நல்லா இருந்தது. ஆனா இப்போ...? வீ ஷுட் லீவ் திஸ் வர்ல்ட் ஆஸ் எ பெட்டர் பிளேஸ் ஃபார் சில்ட்ரன் டு லிவ் இன்!

**சச்சு: நூத்துல ஒரு வார்த்தை! உங்க ஆசை பலிக்கட்டும். என்னை வாழ்த்துங்க அக்கா!**

**இ**ந்தத் தொடருக்காக, பேபி சரோஜா அக்காவை சந்திச்சதை மறக்கவே முடியாது. ரொம்பச் சந்தோஷமா இருக்கு தோழிகளே... அதே மனநிறைவோட பை சொல்லிக்கிறேன். அடுத்த மாதம் வரை.. சின்ன பிரேக்!

*(அச்சுவெல்லம் இனிக்கும்)*

**படங்கள் : வ.ரா.**

**காட்டி, ஆபாசமா ஆடறதைப் பார்க்கும்போது, மனசுக்குக் கஷ்டமா இருக்கு!**

# வண்ணக்



ரங்கோலி

- என். பாப்பா
நல்லபெருமாள்,
பாளையங்கோட்டை.



13 புள்ளி 3 வரிசை;
3 வரை. (நேர் புள்ளி)
-எஸ்.டி. தவமணிதேவி,
சூலூர்.



23 புள்ளி - 1 வரை
(நேர் புள்ளி)
- எம். ரேகா முருகானந்தம்,
வரகனேரி.

# கோலங்கள்!





11 புள்ளி 6 வரை
(இடைப்புள்ளி)
- டி.ராஜராஜேஸ்வரி,
சேலம்.



21 புள்ளி 11 வரை
(சந்துப் புள்ளி)
- சரண்யா வினோத்குமார்,
கிருஷ்ணகிரி.



13 புள்ளி 7ல் நிறுத்தவும்.
(இடைப்புள்ளி)
- எஸ்.பத்மாவதி சுப்பையன்,
பாபநாசம்.

# நவம்பர் 23, ஸ்ரீ பாபா பிறந்தநாள்

**ஒ**ரு பத்திரிகைப் பணிக்காக, நான் பேருந்தில் தனி ஆளாக மேற்கொண்ட பயணம் அது. அதற்கு முன்னால் நான் புட்டபர்த்திக்குப் போனதே இல்லை. அவ்வளவு ஏன், நினைத்ததுகூட இல்லை.

பேருந்தில் என்னுடன் வந்த சக பயணி ''நீங்க பகவான் பாபாவோட டிவோட்டியா?'' என்று கேட்டார்.

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. சும்மா பாத்துட்டு வரலாம்னு போறேன்'' என்றேன். எனக்கு நாக்கில் சனி என்று சொல்ல வேண்டும். அடுத்த இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் அந்தச் சனியைப் பொங்குசனியாக்கி, என்னை பகவான் பாபா நெறிப்படுத்துவார் என்று யாராவது சொல்லியிருந்தால் நான் அவர்களை ஒரு வழி பண்ணியிருப்பேன். எனக்கு அன்றைக்கிருந்த பக்குவம் அதுதான்.

**பி**ரசாந்தி நிலையத்துக்குள் அடியெடுத்து வைத்து, அங்கே என்னை அறிமுகப் படுத்திக் கொண்டேன். ஏதோ ராஜமரியாதை கிடைக்கப் போகிறது என்ற மிதப்பில் நான் தந்த அறிமுகக் கடிதங்களை, அந்த மனிதர் வாங்கி குப்பைக்கூடையில் போட்டு என்னை அதிர்ச்சிக்குள்ளாக்கினார்.

''இங்கே சிபாரிசு, அறிமுகம் எல்லாம் தேவையே இல்லை. சாதாரண டிவோட்டியா வந்து பாத்துட்டுப் போய் எழுதுங்கோ'' என்று அவர் சொன்னபோது முகத்தில் அறைந்த மாதிரி உணர்ந்தேன். இவ்வளவு தூரம் பயணப்பட்டு வந்து, குறைந்தபட்ச ஒத்துழைப்புக்கூடக் கிடைக்காத இடத்தைப் பற்றி அப்படி எழுதத்தான் வேண்டுமா என்கிற கோபம் கூட வந்தது. அதே வேகத்தில் திருவள்ளுவர் பேருந்து நிலையம் வந்து, சென்னைக்குத் திரும்பப் பேருந்து ஏதாவது இருக்கிறதா என்று விசாரித்தேன். இரண்டு நாட்களுக்கு புக் ஆகி விட்டது என்று, பயணச் சீட்டுப் பதிவாளர் சொன்னபோது என் மீதே எனக்குக் கோபம் வந்தது.



## சுப்ர.பாலன்



மறுபடியும் பிரசாந்தி வளாகத்துக்குள் வந்தேன். சரி வந்தது வந்தோம். ஏதாவது விஷயம் தேறுமா என்று பார்க்கலாம் என்கிற அரை குறை நம்பிக்கையோடு, எதிர்ப்பட்ட ஒரு பெரிய வரிடம் பாபாவைப் பற்றியும் அந்த அமைப்பைப் பற்றியும் படு பாமரத்தனமாகச் சில கேள்விகளைக் கேட்டபோது அவர் சிரித் தார்.

''அதோ பாருங்கோ, வைஸ் சான்ஸ்லர் வீடு இருக்கு. இப்போ அவர் அங்கேதான் இருக்கார். போய்ப் பாருங்கோ வேண்டியது கிடைக்கும்...'' என்று ஆறுதலாகச் சொன் னார் அவர்.

பெரியவர் கைகாட்டிய பக்கம் போனால் எல்லா வீடுகளும் ஒரே மாதிரி யாய் இருந்தன. தயங்கியபடியே அந்த வீடு களுக்கு முன்னால் நடப்பதைப் பார்த்து ஒருவர்,

''யாரைப் பார்க்கணும்?'' என்று கேட் டார்.

''இங்கே வைஸ் சான்ஸ்லர் வீடு எது? அவரைப் பார்க்க முடியுமா?'' என்று கேட் டேன். தும்பைப்பூ வெள்ளையில் ஒரு ஜிப்பாவும் வேட்டியும் அணிந்திருந்த அந்த மனிதர் கையை நீட்டினார். பற்றிக் கொண் டேன்.

''நான்தான் சம்பத் இங்கே வி.ஸி. என்ன வேணும்?'' என்று கேட்டபோது எனக்கு அதிர்ச்சிக்குமேல் அதிர்ச்சி. நிறை யத் தகவல்களைச் சொல்லித் திக்குமுக் காடச் செய்தார். தொடர்ந்து 'சனாதன சாரதி' இதழை நடத்தி வந்த வி.கே. நரசிம்மனை யும் பார்க்கச் சொன்னார். நானே அணுஅணுவாக அந்த வளாகத்தை அனுபவித்துப் பெற்ற விஷயங்களும், அவர் கள் இருவரும் சொன்ன தகவல்களும் என்னுடைய தேவைக்கு அதிகமாகவே கிடைத்தன. அவையெல்லாம், மூன்று மணி நேரத்துக்கு முன்னால் எனக்கு ஏற்பட்ட கசப்புகளை ஒரே நொடியில் துடைத்துப் போட்டன.

அன்று மாலை நிகழ்ச்சிகள், இரவு தங்கல், அதிகாலை ஐந்து மணிக்குத் தொடங்கும் ஓம்கார ஜபத்தில் மண்டபத் துக்கு உள்ளேயே போய் அமர்ந்து ஈடுபடக் கிடைத்த வாய்ப்பு, நகர சங்கீர்த்தனம் என்று கலந்து கொண்டது பிறவிகள் பல வற்றுக்கும் நிறைவளிக்கும் அனுபவம். அப்போது பகவான் பாபாவை எட்ட இருந்து தரிசிக்கும்பேறும் எனக்குக் கிடைத்தது.

மீண்டும் பேருந்து நிலையம் வந்தேன். பதிவுசெய்யும் இடத்திலிருந்தவர், ''ஸார் இப்போதுதான் நாலு டிக்கெட் கான்ஸ லாச்சு. மத்தியானம் இரண்டு மணி வண்டி தரவா?'' என்றபோது, எனக்கு ஒரே பிரமிப்பு!

உடனே பயணச்சீட்டை வாங்கிக் கொண்டு ஊர் திரும்பினேன். அந்த நிகழ்வு முதல் பகவான், 'யாமிருக்க பயமேன்?' என்று என் பக்கத்தில் எப்போதும் சிரித்துக் கொண்டே நிற்கிற மாதிரியான ஒரு பிரமை. அவரை நினைத்தால் எடுத்த காரியம் யாவிலும் வெற்றி' என்கிற எண்ணம் அப் போதே என்னுள் உண்டானது.

# "யாமிருக்க பயமேன்?"





**வீ**ட்டில் இணையதளம் உள்ள பெற்றோர், தங்கள் குழந்தைகள் தவறானவற்றைப் பார்க்கிறார்களா என்பதை, பிரவுசரில் உள்ள ஹிஸ்டரி மூலம் தெரிந்து கொள்ளலாம். வியூ ஹிஸ்டரி என்பதை கிளிக் செய்தால் எந்த நிமிடம் எந்த வெப்சைட்டை பயன்படுத்தி இருக்கின்றனர் என்பதைத் தெரிந்து உஷாராகலாம்.

**- சுபாஸ்ரீ, தஞ்சை.**

**கு**ழந்தைகள் உபயோகிக்கும் வாட்டர் கலரின் வில்லைகள், அதன் பெட்டியில் இருந்து கழண்டு விட நேரிடும். இதைத் தடுக்க ஃபெவிகாலைச் சிறிது தடவி வில்லைகளை அழுத்தி வைத்து விட்டால் போதும். **- கீதா ஹரிஹரன், கேரளா.**

**ரெ**டிமேட் ஆடைகளை வாங்கினால் அதை உபயோகிக்கும் முன்பு, டெய்லரிடம் கொடுத்து எக்ஸ்ட்ரா தையல் போட்டுக் கொண்டால், ஆடை நீண்ட நாள் உழைக்கும்.

**- எஸ்.மீனலோசினி, திருத்தங்கல்.**

**உ**டல் சூடுதணிந்து, நல்ல உறக்கம் வேண்டுமா? இரவு படுக்கச் செல்லும் முன் குதிகாலில் சிறிதளவு விளக்கெண்ணெயை வைத்து, சூடுபறக்கத் தேய்த்துப் படுத்தால் நல்ல உறக்கம் வரும். காலையில் உடல் சூடு தணிந்து கண்களும் குளிர்ச்சி அடையும்.

**- எஸ்.புவனாசாமா, சீர்காழி**

**செ**ன்னை மாநகரில், ஒரே நாளில பல நண்பர்கள், உறவினர்களைச் சந்திக்க பேருந்தில் செல்ல நேரிடும்போது முப்பது ரூபாய்க்கான பயணச் சீட்டை வாங்கிக் கொண்டால் ஒருநாள் முழுவதும் பயணம் செய்யலாம். வெவ்வேறு பேருந்தில் ஏறும்போது டிக்கெட் வாங்க வேண்டியதில்லை. பணமும் மிச்சம். நேரமும் மிச்சம்.

**- ஜி.லக்ஷ்மி வாசுதேவன், வேளச்சேரி.**

**வீ**டோ, மனையோ வாங்குபவர்கள் நெடுஞ்சாலை ரயில்வே லைன் உள்ள இடத்திற்கு மிக அருகில் வாங்காமல் ஒரு கிலோ மீட்டர் தள்ளி வாங்கினால் எதிர் காலத்தில் பிரச்னைகள் வராதிருக்கும்.

**-வி.எஸ்.மோகன், மதுரை-3.**

**ர**சம் வைக்கும் போது மிளகு, சீரகம், பூண்டு, தேங்காய், பச்சை மிளகாய் போன்றவற்றை அரைத்துக் கலந்தால் ரசம் திக்காகவும், சுவையாகவும் இருக்கும்.

**- என்.காளிதாஸ்,சிதம்பரம்.**

## இவை எல்லாமே ஆஹா 50 தான்!

# நான் என் சொந்தக் காலில் நிற்கிறேன். நீங்கள் நிற்கக்கூடாதா?

**மேலும் விவரங்களுக்கு KNEE என்று 57333 எண்ணிற்கு SMS செய்யவும்**

இளம் வயதில் நான் மிகவும் சுறுசுறுப்பாக இருந்தேன். லிஃப்ட்டில் ஏறாமல் படிகளில் ஏறிச் சென்றேன்.

வயது ஆக ஆக, ஆர்தரைடிஸ் என் மூட்டுக்களை பாதித்தது. என்னால் சுலபமாக படியேற முடியவில்லை. ஆரம்பத்தில் நான் வழக்கமான சிகிச்சையை செய்துகொண்டேன். பிரச்சினை தீவிரமானது. விட்டுக் கொடுத்து வாழ வேண்டியிருந்தது. அப்போதுதான் நான் மூட்டு மாற்று நிபுணர்களின் ஆலோசனையின் பேரில், மூட்டு மாற்று அறுவை சிகிச்சை செய்து கொள்ளத் தீர்மானித்தேன்.

இன்று என்னால் தன்னம்பிக்கையுடன் மாடிப்படி ஏற முடியும். சாதாரண வாழ்க்கை வாழ முடியும். இப்போது மீண்டும் சுதந்திரமாக செயல்படுகிறேன்.

உங்களுக்கு ஆர்தரைடிஸ் விளைவாக இடுப்பு அல்லது முழங்கால் வலி இருந்தால், மேலும் அவதிப்பட வேண்டியதில்லை.

ஆர்தரைடிஸிற்கான பல மருத்துவங்களில் மூட்டு மாற்றும் ஒன்று. இது அனைவருக்கும் ஏற்றதில்லாமல் இருக்கலாம். எனவே மூட்டு மாற்று நிபுணரிடம் பேசி உங்களுக்கு என்ன சிகிச்சை ஏற்றது என்று அறியவும்.



**தாமதிக்காதீர்கள்**



**Arthritis Foundation India Trust**

www.arthfound.org

வாழ்த்து

# நன்றி என் கண்ணே!

நவம்பர் 14
குழந்தைகள் தினம்!

முதல் ஒன்றரை வருடத்தில் குழந்தையின் சுகாதாரம்
காக்கும் போது ஹெல்த் ஆஃபீஸராகவும்,
அடுத்த மூன்று வயது வரை பிள்ளை மகிழ
கதை கூறும்போது கதாசிரியராகவும்,
ஆண் மைந்தனுடன் கிரிக்கெட், ஃபுட்பால்
விளையாடும்போது விளையாட்டு வீராங்கனையாகவும்,
பெண் மகவிற்கு சிகை அலங்காரம், முக
அலங்காரம் செய்யும்போது ப்யூட்டீஷியனாகவும்,
தன் குழந்தைகளுக்காக சுவைமிகு
பலகாரங்களையும், உணவையும் செய்யும்போது
ஹோட்டல் செஃபாகவும்,
குழந்தைகளின் மாறுவேடப் போட்டிக்கு
வசனம் எழுதும்போது வசனகர்த்தாவாகவும்,
குழந்தைகளின் நடனப் போட்டிக்கு முதல்
அடி முதல் அபிநயம் கற்றுக் கொடுக்கும்போது
கொரியோகிராஃபராகவும்,
சிறார்களின் ஆடைகளில் புது டிசைன்களை
வடிவமைக்கும்போது ஃபாஷன் டிசைனராகவும்,,
பிள்ளைகள் தன் நண்பர்களுடன் தங்களது இல்லத்தை
ஒப்பிடுவதால், வீட்டை அலங்கரிக்கும்போது
இன்டீரியர் டெகரேட்டராகவும்,
கூடவே தோட்டத்தை செப்பனிக்கும் கார்டனராகவும்,
நவீன கால விஷயங்களைக் குழந்தைகள் பகிர்ந்து
கொள்ளும்போது அப்டுடேட் அம்மாவாகவும்...
பல பாத்திரங்களை அன்னையர்களுக்காக உருவாக்கி
கொடுக்கும் குழந்தைகளுக்கு
குழந்தைகள் தினத்தன்று
நன்றி உரைப்போமே!
வாயார வாழ்த்துவோமே!

ஜெயஸ்ரீ.எம்.சாரி,
வர்தா., மகாராஷ்டிரா.



# "ஸனா...

**ஏ**ர்போர்ட் மிக வும் சிறியதாகவும், பழசாகவும் இருந் தது. எங்களை எந்தப் பரிசோதனையும் செய் யாமலே மாப்பிள்ளையின் ஏமனி டிரைவர், வெளியே அழைத்துக் கொண்டு வந்துவிட்டார். பிறகுதான் குறுக்கு வழியில் அங்கு எதையுமே சுலபமாக நடத்திக் கொள்ளலாமென்று தெரிந்தது.

சைனாக்காரர்கள் போட்ட சாலைகள் நன்றாக இருந்தன. எல்லா வீடுகளும் ஒரே நிறத்தில் கிட்டத்தட்ட மண்கலரி லேயே இருந்தன. வீடு, கடைக் கதவு கள், நீலம் அல்லது பச்சை நிறத்தில்தான் இருக்க வேண்டுமாம். கலர் கண்ணாடி யால் பூ வேலை செய்த 'கமாரியா' என்ற ஜன்னல்கள் எல்லா வீடுகளையும் அலங் கரித்தன.

எங்கள் மாப்பிள்ளைக்கு ஏமன் நாட்டின் தலைநகர் ஸனாவில் நல்ல வேலை கிடைத்திருப்பதாகவும் உடனே அங்கே செல்வதாகவும் ஃபோன் வந்தது. இணையதளத்தில் அந்த நாட்டைப் பற்றிப் படித்ததில் அது 'பின்லேடன்' பிறந்த நாடு, அங்கு மக்கட் தொகையைவிட ஆயுதங்கள் அதிகம் என்று தெரிந்ததும் எங்களுக்குக் கவலையாக இருந்தது. அவர்கள் ஸனா போய்ச் சேர்ந்து எங்களையும் அங்கு வருமாறு வற்புறுத்தியதால் நானும் எனது கணவரும் துபாய் வழியாக அங்கு போய்ச் சேர்ந்தோம்.

எனது மகளது இருப்பிடம், வெள்ளைக்காரர்கள் வசிக்கும் காலனி ஒன்றின் உள்ளே இருந்தது. அதனால் பாதுகாப்புக் கெடுபிடி தான்!

குழந்தைகள் முதல், பெரியவர்கள்வரை ஜாம்பியா என்று ஒருவித கத்தியை இடுப்பில் செருகி இருக்கிறார்கள். நிறைய பேரிடம் துப்பாக்கியும் இருக்குமாம். 'டுமீல்... டுமீல்' எனத் துப்பாக்கிச் சுடும் சப்தம் அடிக்கடி கேட்டது. கல்யாணம், கருமாதி எல்லாவற்றுக்கும் நம் ஊரில் பட்டாசு வெடித்துக்கொண்டு போவது போல் அங்கு துப்பாக்கியால் சுட்டுக் கொண்டே போகிறார்கள!

அங்கிருக்கும் மக்கள், சாதுவாகத்தான் தென்பட்டார்கள். மதியம் இரண்டு மணி யானால் எல்லோரும் காத் என்ற இலேசான போதை அளிக்கக்கூடிய இலைகளைச் சுவைத்துக்கொண்டு தண்ணீரைக் குடித்துக் குடித்து விழுங்கிவிட்டுச் சக்கையை கன்னத்தில் அடக்கி வைத்துக் கொள் கிறார்கள். கன்னத்தில் ஏதோ பெரிய கட்டி வந்ததுபோல் அவர்களைப் பார்க்கவே வேடிக்கையாக இருக்கிறது.

வீட்டு வேலைகளுக்குக்கூட எதோபியா நாட்டிலிருந்து வந்தவர்கள்தான் கிடைக்கிறார்கள். காலையிலேயே வந்து எல்லா வேலைகளையும் சுத்தமாகச் செய்கிறார்கள். அவர்கள் தலையிலிருந்து கால் வரை மூடிய, கறுப்பு அங்கி அணிந்து வந்து வீட்டுக்குள் வந்ததும் எடுத்து விடுகிறாகள். ஷேர் டாக்ஸியில் தான் வருகிறார்கள். டாக்ஸிகள் எல்லாம் மிகவும் பழையதாகவும், கதவுகளே இல்லாமல், குப்பையாகவும் இருக்கிறது.

# உன்னை மறப்பேனா?"



அந்நாட்டில் சுற்றிப் பார்க்க, அதிக இடம் இல்லை. அருங்காட்சியகம் ஒன்றில் பழங்காலத்து ஆயுதங்கள், படங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. ஷபான் கோகோபான் என்று மலை மேல் ஓர் இடம் பச்சைப் பசேல் என்று வெகு ரம்யமாக இருக்கிறது. அங்கு நிறைய காத் மரங்கள் நிறைந்திருந்தன. ஆனால், அங்கு செல்ல போலிஸ் பர்மிஷன் வேண்டும்.

பாபல் ஏமன் என்ற இடம் கோட்டைப் போல் இருக்கிறது. சந்தும், பொந்துமாக உள்ளதில் நிறைய கடைகளில் உயர் பழங்கள், துணிமணிகள், வெள்ளி நகைகள், ஜாம்பியாக்கள், பெயிண்டிங்குகள் என்று பலவிதமான பொருள்கள் கிடைக்கின்றன. பிச்சைக்காரர்கள் கண்ணில்

படவில்லை. சின்னச் சின்ன பைகளில், எலுமிச்சம் பழம் நிறைய கொண்டு வந்து விற்கிறார்கள். நாம் விசேஷ நாட்களில் மட்டும் பார்க்கும் தாழம்பூவை வீதி தோறும் விற்றுக் கொண்டிருந்ததைப் பார்த்து அசந்து விட்டேன். அரபு நாட்டவர் எலுமிச்சைச் சாறுடன் நிறைய தேன் சேர்த்து ஒருவித ஜூஸ் சாப்பிடுகிறார்கள். அதனால் தேன் விற்பதற்கு தனியாக பெரிய கடைகள் உள்ளன. இங்கு கிலோ நாலாயிரத்துக்குக்கூட தேன் விற்கிறார்கள்.

**ஸ**னர் மளிகைக் கடைகளில் கிடைக்காத பொருளே இல்லை. பாதாம், பிஸ்தா, பேரீச்சை, விதவிதமான காப்பிக் கொட்டைகள், பலவிதமான மூலிகைகள் எப்பொழுது சென்றாலும் கிடைக்கின்றன. வெளிநாட்டவருக்காக சில சூப்பர் மார்க்கெட்களும் இங்கு இருக்கின்றன.

பாதாம், பிஸ்தா, தேன் சேர்த்துச் செய்த இனிப்புகள் பிரசித்தம். நம்ப ஊர் சப்பாத்தி போல் செய்த கூப்ஸ் என்ற சப்பாத்திகள் மிகவும் மலிவாகக் கிடைக்கின்றன. காய்கறி வாங்கினால் பெரிய கட்டு கொத்துமல்லி, பச்சை மிளகாய் எல்லாம், இனாம், எடுத்துக்கோ என்று திணிக்கிறார்கள்.

எல்லாக் கடைகளையும் விட அங்கு பார்த்த கார்பெட் கடைகள்தான் பிரமிப்பாக இருந்தன. கலர் கலராக, பூப்பூவாக இருக்கும் பெரியப் பெரிய தரைவிரிப்புகளை டூரிஸ்ட்கள் விரும்பி வாங்குகின்றனர்.

**பெ**ண்கள் கிளப் ஒன்றுக்குப் போயிருந்தேன். கறுப்பு அங்கி இல்லாமல் பிரமாத ஆடைகள், பளபளக்கும் தங்க நகைகள் அணிந்திருந்தார்கள். பலவிதமான கல்யாண அலங்காரங்கள் செய்து காண்பித்தார்கள். எல்லா அரபு நாடுகளைப் போல் அங்கேயும் தங்க ஸுக்குகள் உள்ளன. ஸுக் என்பது தங்க நகைகள் விற்கும் கடைகள் உள்ள மார்க்கெட்.

எல்லாமே சந்தோஷமாக நடந்து கொண்டிருந்தபோது ஒருநாள் இரவு பெரிய வெடி சப்தம் கேட்டது. அருகிலிருந்த சூப்பர் மார்க்கெட்டை யாரோ வெடிகுண்டு வைத்துத் தகர்த்து விட்டார்கள். அது தரை மட்டமாகி விட்டது. யார் செய்தார்கள் என்றே தெரியவில்லை. அதற்குப் பிறகு கொஞ்ச நாட்கள் வெளியே போகவே பயமாக இருந்தது. ஆனால், அங்குள்ளவர்கள் அதைப் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை!

**- மாலதி கணேசன், சென்னை.**






**சி**ல பெற்றோர்கள், தங்களது பெண் குழந்தைகளுக்கு நகைகள் வாங்கிச் சேமிப்பர். குழந்தைகள் வளரும்போது நாம் வாங்கி வைக்கும் டிஸைன், அவர்களுக்குப் பிடிக்காமல் அந்த நகைகளைக் கொடுத்து விட்டு வேறு மாற்ற வேண்டியதாக இருக்கும். ஆதலால் நகைகளாக வாங்காமல் தங்கக் காசுகளாகவோ, பிஸ்கெட்டுகளாகவோ வாங்கிச் சேர்த்து வைத்தால் பிற்காலத்தில், குழந்தைகள் விரும்பும்வண்ணம் நகைகள் வாங்கிக் கொள்ளலாம்.

**- அனுராதா ரமேஷ், பாண்டிச்சேரி-4.**

**பெண்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காகக் கொண்டு வரப்பட்ட வரதட்சணைத் தடை சட்டம், பெண்கள் மீதான வன்முறைத் தடுப்புச் சட்டம் ஆகியவை பற்றி விரிவாக குறிப்பிட்டிருந்ததற்கு பலதரப்பினரிடமிருந்தும் பாராட்டுக்கள் வந்தன. இன்று சில பெண்கள் அந்தச் சட்டங்களை தவறாகப் பயன்படுத்தி, குடும்பங்களில் பிரச்னைகளை ஏற்படுத்தி விடுகின்றனர் என்பதையும் குறிப்பிட்டேயாக வேண்டும்.**

ஒரு சாஃப்ட்வேர் கம்பெனி அதிகாரியின் பெற்றோர்கள், ''என் மகனுக்கும், மருமகளுக்கும் இடையில் பிரச்னை. அடிக்கடி மருமகள், 'நான் நினைச்சா, வரதட்சணைக் கேட்டு என்னை கொடுமை பண்ணறதா ஒரு புகார் கொடுத்து, உங்க மொத்த

# பாதுகாக்கவா?

குடும்பத்தையும் கம்பி எண்ண வெச்சுடுவேன். ஜாக்கிரதை!' என்று மிரட்டுகிறாள். இதுவரைக்கும் நாங்க போலிஸ் ஸ்டேஷனுக்கு எல்லாம் போனதே இல்லை. எங்களுக்கு அப்படி ஏதாவது நடந்திடுமோன்னு பயமா இருக்கு'' என்று ஃபோனிலேயே அழுதுவிட்டார்கள். அந்த வயசான தம்பதிகளின் அழுகை இன்னும் கூட என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. ஆகவே, இதுபோன்ற பயத்தைப் போக்கும் நோக்கத்துடன் சில விஷயங்களை வாசகர்களுடன் நான் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்.

முதலில் நான் ஒரு விஷயத்தை தெளிவுபடுத்த விரும்புகிறேன். வரதட்சணைத் தடுப்புச் சட்டம் அல்லது பெண்கள் மீதான வன்முறை தடுப்புச் சட்டத்தைப் பயன்படுத்தி ஒரு மருமகள், தன் கணவர் அல்லது கணவரது குடும்ப உறுப்பினர்கள் மீது சப்-கோர்ட், மாவட்ட நீதிமன்றம், குடும்ப நீதிமன்றம் என்று எங்கே வழக்குப் போட்டாலும், உடனே கைது செய்து சிறையில் அடைத்துவிட கோர்ட் உத்தரவிடாது. போலிஸ் ஸ்டேஷனில் மருமகள் புகார் கொடுத்தாலும், உடனே காவலதிகாரிகள் வீட்டுக் கதவைத் தட்டி, கைது செய்து விட மாட்டார்கள். எனவே யாரும் மருமகள்களின் மிரட்



# திரட்டவா?

டல்களுக்குப் பயப்பட வேண்டியதில்லை.

ஒருசிலர் காவல் நிலையங்களில், குறிப்பாக அனைத்து மகளிர் காவல் நிலையங்களில் வரதட்சணைக் கேட்டுக் கொடுமைப்படுத்துவதாக தங்கள் கணவர் மற்றும் அவருடைய குடும்ப உறுப்பினர்கள் மீது புகார் கொடுப்பார்கள். போலிஸ் சம்பந்தப்பட்டவர்களின் வீட்டுக்குச் சென்ற அவர்களிடமும், அவசியமானால் அக்கம் பக்கத்தாரிடமும் அந்தப் புகார் உண்மைதானா? என்று விசாரணை நடத்துவார்கள். அல்லது சம்பந்தப்பட்டவர்களை ஸ்டேஷனுக்கு வரவழைத்து விசாரிப்பதும் உண்டு.




எனக்குத் தெரிந்த ஒரு வழக்கில் வரதட்சணைக் கேட்டு கணவரும், மாமியாரும் கொடுமைப்படுத்துவதாக ஒரு மருமகள் போலிஸில் புகார் செய்தார். போலிஸ் மருமகளையும், கணவர் மற்றும் அவரது குடும்பத்தினரையும், அக்கம் பக்கத்தினரையும் விசாரித்தது. கடைசியில், குடும்பத்தில் சில பிரச்னைகள் இருப்பது உண்மைதான் என்பதும், வரதட்சணைக் கேட்டு மருமகள் கொடுமைப்படுத்தப்படவில்லை என்பதும் தெரியவந்தது.

காவலதிகாரிகள் இரண்டு குடும்பத்தினரையும் வரவழைத்துப் பேசி, கணவனையும், மனைவியையும் குடும்ப நல ஆலோசகரிடம் செல்லும்படி அறிவுறுத்தி, அனுப்பி வைத்தார்கள். குடும்பநல ஆலோசகர் கணவன், மனைவி இருவரிடமும் பேசினார். இப்போது நிலைமை சுமுகமாகி அவர்கள் ஒற்றுமையாக வாழ்கிறார்கள்.

இன்னொரு வழக்கில் இதற்கு நேர் எதிரான முடிவு ஏற்பட்டது. கணவர் மீதும், அவரது பெற்றோர்கள் மீதும் ஒரு பெண் வரதட்சணைக் கொடுமை செய்வதாக புகார் கொடுத்தாள். விசாரணை நடத்திய அதிகாரி, ''வரதட்சணைக் கேட்டு மருமகளைக் கொடுமைப்படுத்தியதற்கான ஆதாரங்கள் எதுவும் இல்லை; மருமகளை நல்ல புத்தி சொல்லி, வழக்கை முடித்து விடலாம்'' என்று சொல்லிவிட்டார். ஆனால், அந்தப் பெண்ணின் கணவருக்கு இதில் உடன்பாடில்லை.

''என் அப்பா எண்பது வயது முதியவர். அம்மா ஒரு புற்றுநோய் நோயாளி. இந்தியக் குடும்பத்தில் ஒரு மாமியாரும், மாமனாரும் தங்களுடைய மருமகளிடம் எதிர்பார்க்கும் விஷயங்களுக்கு மேல் என் பெற்றோர் எதையும் எதிர்பார்க்கவில்லை;

பாலா நடராஜன்



குடும்ப வன்முறை தடுப்புச் சட்டப்படி கோர்ட்டில் புகார் அளித்தால், ஏற்கெனவே நான் அந்தச் சட்டம் பற்றிய அத்தியாயத்தில் குறிப்பிட்டது போல, அந்தப் புகாரை அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட 'புரொடெக்ஷன் ஆஃபீஸர்' எனப்படும் பாதுகாப்பு அதிகாரியிடம் புகாரை விசாரித்து அதுபற்றிய அறிக்கையைக் குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள் கோர்ட்டில் சமர்ப்பிக்கும்படி நீதிபதி, உத்தரவிடுவார்.

அந்த அதிகாரி அளிக்கும் விசாரணை அறிக்கையின் அடிப்படையில் கோர்ட் மேற்கொண்ட நடவடிக்கை எடுக்கும். அதே புகாரை போலிஸ் ஸ்டேஷனில் கொடுத்தாலும், அது பாதுகாப்பு அதிகாரியின் விசாரணைக்குத்தான் அனுப்பி வைக்கப்படும். வரதட்சணைக் கொடுமை பற்றிய புகார் என்றாலும், இதைப் போலவே தகுந்த ஆதாரமில்லாமல், உரிய விசாரணை நடத்தாமல் இருக்க மாட்டார்கள்.

ஒரு வழக்கறிஞர் என்ற முறையில் என் அனுபவத்திலிருந்து சொல்கிறேன். ஒரு மருமகள் உண்மையிலேயே கணவராலோ அல்லது அவரைச் சேர்ந்தவர்களாலோ கொடுமைப்படுத்தப்பட்டால், ஒரு கட்டம் வரை பொறுத்துக் கொண்டு போவாள். எல்லை மீறிப் போய்விட்டால் சட்டபூர்வமான நடவடிக்கையில் இறங்கி விடுவாள்.

ஆனால், குடும்பத்துக்குள்ளே ஏற்படும் சர்வசாதாரணமான பிரச்னைகளைக் கூட அனுசரித்து நடந்து கொள்ளாத பெண்களுக்கு, போலிஸில் [பொய்] புகார் கொடுத்தால் நிச்சயம் தன் எதிர்கால வாழ்க்கை என்ன ஆகும் என்பது நன்றாகத் தெரியும். ஆகவே, அவர் போலிஸுக்குப் போக மாட்டார். ஆனால் புகார் கொடுப்பேன்; போய்விடுவேன் என்று மிரட்டிக் கொண்டே இருப்பார்.

ஆனால் எங்கள் மீது அபாண்டமான பழி சுமத்தி போலிஸ், கோர்ட் என்று இழுத் தடித்துவிட்ட பெண்ணுடன் வாழ எனக்கு விருப்பமில்லை'' என்று திட்டவட்டமாக சொல்லி விட்டார். அப்புறம் என்ன? இரு தரப்பினரும் கருத்தொருமித்து விவாகரத்து செய்து கொண்டு விட்டார்கள்.

இது ஒரு யதார்த்தமான முடிவு என்று தான் சொல்ல வேண்டும். அப்பாவியான கணவர் மற்றும் அவரது குடும்ப உறுப் பினர்கள் மீது அபாண்டமாக பழி சுமத்தி, அவர்களை போலிஸ், வழக்கு என்று இழுத்தடித்தால், அந்தப் பெண்ணின் குற்றச்சாட்டு உண்மை இல்லை என்று கோர்ட் சொன்னாலும் கூட, அந்தக் கசப் பான அனுபவத்தை மறந்துவிட்டு, அந்தப் பெண்ணின் தவறை மன்னித்து, ஏற்றுக் கொள்ளும் மனப்போக்கு எத்தனை பேருக்கு இருக்கும்?

உண்மையிலேயே இன்று பாதிப்புக் குள்ளாகி சட்டப்படி நடவடிக்கையில் இறங்கி பாதுகாப்பு தேடிக்கொள்ளும் பெண்களை விட, கணவரையும் அவரது குடும்பத்தினரையும் சட்டத்தின் பெயரைச் சொல்லி மிரட்டும் பெண்கள்தான் அதிக மாக இருக்கிறார்கள். எனவே, வீண் பயம் வேண்டாம். மடியில் கனமில்லாவிட்டால், வழியில் எதற்காகப் பயப்பட வேண்டும்?

எழுத்து வடிவம்: **எஸ்.சந்திரமௌலி**

www.sowbaghya.com

சௌபாக்யா

# எங்கள் பெருமையின் அடையாளம்



ரைஸ் குக்கர்
Rs.1299/- முதல்



EASYCOOK



Annam



No whistling



No waiting




Sakthi

# SOWBAGHYA

அனைவருக்கும் பெருமை... அனுபவம் புதுமை...

| 32 A, North Usman Rd, T. Nagar, Chennai - 600 017. Ph: 044 28341760 / 28342908. | 13/1, Sri Devi Apartments, Lakshmikanthan Street, Pondy Bazaar, T. Nagar, Chennai - 600 017. Ph: 044 24350142. | 5, Hasthinapuram Main Rd, Chrompet, Chennai - 600 044. Ph: 044 22234420. | 314, Perundurai Rd, Erode - 638 011. Ph: 0424 2269965 / 2260245 | 1254, Mettur Rd, (E.V.N. Rd), Erode - 638 011. Ph: 0424 2224499 |
|---|---|---|---|---|

DUBAI: M/s Hadi Enterprises, PO Box No.: 5833, Dubai. Ph: 04 3470310
SINGAPORE: M/s Anacone Private Limited, 128 Dunlop Street, Singapore - 209447. Ph: 063341566
COLOMBO: M/s Good Value Distributors, 267 Sea St., Colombo - 1. Ph. 011 2435042
MALAYSIA: M/s Ajantha Textiles, 20,22, 24, 26 Jalan Tengku Kelana 41000 Klang, Selangor. Tel.: 03 3371 7571

admith.in

"இது 3500 ஆண்டுகளுக்கும் முந்தைய பழமையான 'இயற்கை சாயங்கள்' டெக்னிக்! அதை இப்ப ஆரெம்கேவியில் புதுசா கையாண்டு சக்ஸஸ் பண்ணியிருக்கோம். கிட்டத்தட்ட இரண்டு வருஷமா, முயற்சிப் பண்ணி, இப்ப 120 ஷேடுகளை உருவாக்கியுள்ளோம். நூறு சதவிகிதம் இயற்கை வண்ணங்களில், மென்மையான பட்டில் வடிவமைக்கப்பட்டவை என்பதால் 'நேச்சுரல்ஸ்'னே பேர் வெச்சுட்டோம்'' என்கிறார் ஆரெம்கேவி உரிமையாளர் சிவக்குமார்.



* சிவக்குமார்

மாதுளம்பழ ஷேட் புடைவையை எடுத்து விரிக்கிறார்கள். அடேயப்பா... மெல்லிய த்ரெட் வொர்க் செய்யப்பட்டு, கலை வண்ணத்தோடு கண்களைக் கவர்கிறது.

பலாப்பழச் சாறும், மஞ்சளும் பக்குவமாய்ச் சேர்ந்த பட்டுப் புடைவையைக் காட்டுகிறார்கள். உடல் முழுக்க அரக்கில் அமைந்த சின்னச் சின்னப் பூக்கள். அடடா... விலையைக்



மாதுளை, யூகலிப்டஸ், பாக்கு, சிறுகண்டால், கருவேலம், பீட்ரூட், முருங்கைக்காய்... நிஜம்தான்! நம்புங்க... நம்புங்க... 100% எல்லாமே இயற்கையான வண்ணங்கள்!

# RmKV யின் இயற்கைப் பரிசு!



கூடப் பார்க்காமல், "பில் போடுங்க!" என்று சொல்ல வைக்கிறது.

இண்டிகோ பூக்களின் சாற்றி லிருந்து உருவாக்கப்பட்ட, ட்ரெண்டியான மோட்டிஃப்கள் கொண்ட இன்னொரு பட்டுப் புடைவையைக் காட்டுகிறார் கள். அதில் 'Sold' என்ற குறிப்பு அட்டை பளிச்சிடுகிறது.

"வாழ்க ஈக்கோ ஃப்ரெண்ட்லி புடைவைகள்" என்று வாழ்த்தி விட்டுத் திரும்பினால், இன்னொரு கவித்துவ மான செக்ஷன் நம்மை சுண்டியிழுக் கிறது.

**வி**ழாக் காலம், திருமண வைபவம் இவற்றை என்றென்றும் மறக்க முடியாத இனிய தருணங்களாக்கும் மற்றுமொரு படைப்பு, ஆரெம்கேவியின் லினோ லைட்-வெயிட் சில்க்ஸ்.

"நிட்டிங் + வீவிங் என்ற புதுமை யான டெக்னிக்கில் உருவான ஃபேப்ரிக்கில் உருவானவை என்பது ஸ்பெஷல் அட்ராக்ஷன்!" என்று அந்தத் தளத்துக்கு அழைத்துச் சென்று காட்டினார்.

சாதா பெண்களைக் கூட பேரழகிகள் ஆக்கிவிடும் லினோ லைட் வெயிட் புடைவைகளைக் காணக் காண மோகம்தான் ஏற்பட்டது.

**ஆ**ரெம்கேவியின் அடுத்த ஆச்சரியம் ப்ரைடல் வேர் புடைவைகள்! நிச்சயதார்த்தமா? டார்க்காய்ஸ் ப்ளூவில், உடலெல்லாம் ஜரிகைப் பூக்கள் ஓடிய புடைவை, மாயஜாலம் செய்து கவர்கிறது. முகூர்த்தமா? ஆழ்ந்த அரக்கு நிறத்தில் 108 ஐஸ்வர்யப் பூக்கள் போட்ட புடைவை மங்களகரமாய் ஜொலிக்கிறது. ரிசப்ஷன்? ஜர்தோஸி வேலைப்பாடு செய்யப் பட்ட தக்காளிச் சிவப்பு நிறப் பட்டுப் புடைவைதான் பெஸ்ட் சாய்ஸ்!

"கல்யாணத்துக்கு வேண்டிய 7 விதமான புடைவைகளை நீங்களே ஒரு பேக்கேஜாகத் தந்து விடுகிறீர்களா?"

"அப்படியெல்லாம் இல்லை. விரும்பிக் கேட்பவர்களுக்கு, வித விதமான நிறங்களைக் காட்டி விளக்குவோம். மற்றபடி எல்லாமே வாடிக்கையாளர் தேர்வுதான்!" என்கிறார் சிவக்குமார்.

**இ**யற்கையான சாயங்களில் நெய்யப்பட்ட, லினோ-லைட் ரகத்தில், ஸ்பெஷல் ப்ரைடல் செவன் சாரீஸ் கேட்டால்...?"

"ஆஹா... தாராளமாகத் தருகிறோம். வர்லி ட்ரைபல் ஆர்ட், வள்ளுவர் கோட்டம் தேர், கற்பக விருட்சம், ராதா கிருஷ்ணர், உலக அதிசயங்கள் என எங்கள் ஸ்பெஷல் டிஸைனர் புடைவை களையும் நெய்து தருகிறோம்" என்றார்.

85 வருட பட்டுப் பாரம்பரியம்... எத்தனையோ எழில்மிக்க ரசனைகள்... தரமும் உன்னதமும் கைகோத்துக் கொள்ளும் போது, ஆரெம்கேவியின் புதிய படைப்புகள் பெண்களைக் கவர்வதில் ஆச்சரியமென்ன?

பேட்டி: **மங்களேஸ்வரி**



'கார்த்தியோ, கல்யாணமோ' என்று ஒரு பழமொழி உண்டு. கார்த்திகைப் பண்டிகை, கார்த்திகை மாத, கிருத்திகை நட்சத்திரத்தில், பௌர்ணமி தினத்தில் சம்பவிக்கும். கார்த்திகை மாதத்தில் என்னென்ன விசேஷங்கள் வரும் என்று தெரிந்து கொள்வோம்!



### முடவன் முழுக்கு

**கா**ர்த்திகை மாத முதல் தினத்தை, முடவன் முழுக்கு என்று கூறுவார்கள். ஐப்பசி மாத கடைசி நாள், கடமுழுக்கு எனப்படும். ஒரு முடவனுக்கு இறைவன் முக்தி அளித்தமையால் முடமுழுக்கு எனப்படுகின்றது. எனவே, கார்த்திகை முதல் நாள் கண்டிப்பாகத் தலைக்கு நீராடுவது மிகுந்த நன்மை நல்கும்.

### கார்த்திகை ரவிவாரம் (ஞாயிறு)

கார்த்திகை மாத ஞாயிற்றுக் கிழமைகள், ஸ்ரீலக்ஷ்மி நரசிங்கப் பெருமாளுக்கு, மிகவும் உகந்த தினம். எல்லா நரசிம்மர் ஆலயங்களிலும், அபிஷேகம், பானக நிவேதனம் நடைபெறும். அதிலும், குறிப்பாக, சோளிங்கபுரத்தில் உள்ள, ஸ்ரீயோகநரசிம்ம ஸ்வாமிக்கு, அற்புதமான, அபிஷேகம் அலங்காரம் எல்லாம் நடைபெறும்.

# காரிருள் நீக்கும்



அன்றைய தினங்களில், லட்சக்கணக்கான மக்கள், மிகவும் பக்தியுடன், சுமார் 1300 படிகள் ஏறி, ஸ்ரீ யோகநரசிம்ம ஸ்வாமியையும், ஸ்ரீ அமிர்தவல்லித் தாயாரையும் தரிசிப்பார்கள். சின்னமலையில் உள்ள, சங்கு சக்கரம் தாங்கிய, சின்னத் திருவடியாம், ஸ்ரீ ஆஞ்சநேயரையும் தரிசிப்பார்கள்.

கார்த்திகை ஞாயிறன்று, ஸ்ரீயோக நரசிம்ம ஸ்வாமியின் கண் திறந்த தரிசனம் கிடைக்கும். பகவானின் திருவருள் பெறுவதற்கு கூட்டம் அலைமோதும். மேலும், நகரத்தின் மையத்தில் உள்ள ஆலயத்திலும் ஸ்ரீலக்ஷ்மி நரசிம்ம ஸ்வாமியாகிய, ஸ்ரீபிரகலாத வரதனை தரிசித்து மகிழலாம்.

**கார்த்திகை சோமவாரம் (திங்கள்)**

கார்த்திகை மாத திங்கட் கிழமைகள், சிவாலயங்களில் மிகவும் விசேஷமாகக் கொண்டாடப்படும். சென்னை மயிலை கற்பகாம்பாள் ஆலய ஸ்ரீகபாலீஸ்வரருக்கு 1008 சங்காபிஷேகம், போரூர் ஸ்ரீ கைலாசநாதருக்கு நான்கு சோமவாரமும், 1008 சங்காபிஷேகம் நடைபெறும். திருச்சி, இராமேஸ்வரம் போன்ற மற்றைய பல ஆலயங்களில் 108 சங்காபிஷேகமும் நடைபெறும். சிவபெருமான் அபிஷேகப்ரியர் ஆயிற்றே. கார்த்திகை சோமவாரத்தில், விரதம் கடைபிடித்தால், வேண்டுவன கிடைக்கும். சோம வார அமாவாசை என்றால், அரசப் பிரதட்சணம் விசேஷம்.

**கார்த்திகை பஞ்சமி**

கார்த்திகை மாத பஞ்சமி திதியில், ஒரு சுக்ரவார சுபயோக தினத்தில், ஆயிரம் இதழ் தாமரை மலரில், திருமகளாம் ஸ்ரீஅலர்மேல் மங்கை ஆவிர்பவித்ததாக வரலாறு. எனவே, கார்த்திகை மாதத்தில், எல்லா விஷ்ணு ஆலயங்களிலும், தாயார் உற்சவம் கொண்டாடப்படுகின்றது.



கார்த்திகை மாத வெள்ளியும் 'ஸ்ரீ'க்கு உகந்த தினம். இதில் ஒரு விசேஷம் என்னவென்றால், தாயாரைத் தாங்கிவரும், வாகனங்களுக்கு, மூக்குத்தி, தோடு, சேலை அணிவித்து, பெண் இனத்தைச் சேர்ந்த வாகனங்களாக, சில ஆலயங்களில் அமைத்துள்ளனர். அதிலும், திருச்சானூர், ஸ்ரீபத்மாவதி ஆலயம், மற்றைய ஸ்ரீநிவாஸர் ஆலயங்களிலும், தாயார் உற்சவம் தடபுடல் படும்.

ஸ்ரீஸ்ரீனிவாஸப் பெருமாளின் பிரசாதமாக, திருமலையிலிருந்து, திருச்சானூர் ஆலயத்திற்கு, பட்டுப் புடைவை, மாலைகள், மஞ்சள், குங்குமம், பிரசாதம் எல்லாம், பரிசுகளாக அனுப்பி வைக்கப்படும். தாயார் மிகுந்த கருணை கொண்டவள். அவளை அண்டினால், நல்லதே நடக்கும்!



### திருக்கார்த்திகை:

பெண்கள், தலைக்கு நீராடிவிட்டு, இல்லம் முழுவதும் விளக்கேற்றி மகிழ்வார்கள். வெள்ளி, பித்தளை, மண் அகல் போன்றவற்றில்தான் விளக்கேற்ற வேண்டும். மெழுகு, எவர்சில்வர் விளக்குகள் சிலாக்கியம் கிடையாது. முக்கியமாக, ஐந்து முகம் கொண்ட குத்து விளக்கினை, நிறைய பூ சூட்டி அலங்கரித்து, பெருமாள் சன்னதியிலும் வீட்டு வாசலிலும் ஏற்ற வேண்டும்.

அன்று, நெல் பொரி, அவல் பொரி, அப்பம், மனோகரம், வேர்க்கடலை உருண்டைகள் செய்து, இறைவனுக்கு நிவேதனம் செய்வார்கள். விடெங்கும் அகல் விளக்குகள் ஏற்றிக் கொண்டாடுவார்கள்.

பணியாரக்காய்கள், பிறந்த தின ஏராக வரும். அஞ்ஞானம் என்னும் இருள் நீங்கி, அறிவு என்னும் ஒளி எல்லா இடங்களிலும் பரவுவதே, இருள் தாத்பர்யம் ஆகும். திருவண்ணாமலையில் மாலை சுமார் ஆறு மணிக்கு அகண்ட ஜோதி, ஏற்றுவார்கள். விஷ்ணு ஆலயங்கள் தோறும் பாஞ்ராத்ர, வைகான தீபங்கள் ஏற்றப்படும்.

### விளக்கு தானம்

சிறிய பெரிய பித்தளை, வெள்ளி விளக்குகளை வாங்கி, ஆலயங்களில் சமர்ப்பிக்கலாம். மற்றவர்களுக்குப் பரிசாகவும் கொடுக்கலாம். எப்போதும், இரண்டு விளக்குகள் கொடுப்பதே மிகவும் நல்லது. ஐந்து முகம் கொண்ட குத்து விளக்குகள், காமாட்சி விளக்குகள், மலையாள வாழைப்பூ விளக்குகள் என பலவகையில் விளக்குகள் கிடைக்கின்றன.

ஐந்து முகம் கொண்ட இரண்டு குத்து விளக்குளை வாங்கி, நிறைய பூ சூட்டி, பஞ்சுத் திரி போட்டு, நெய் அல்லது நல்லெண்ணெய் விட்டு, விளக்கேற்றி, ஆலயங்களில் சமர்ப்பிக்கலாம். முக்கியமாக, அம்பாள் சன்னதிகளில் சமர்ப்பித்தால், மங்களங்கள் நிறையும். திருமணம், புத்திர பாக்கியம், சொந்த வீடு என நம்முடைய எல்லா விருப்பங்களும் நிறைவேறும்.

**- வஸந்தா வேணுகோபால்,**
**சென்னை-24.**

கவிதை



# காத்திருப்பேன் மஞ்சளுடன்!

'பரு'வத்திலே
விதைக்கப்பட்டு
'பரு'வத்திலேயே
அறுவடை செய்யப்படும்
தானியக் களஞ்சியம்
நீதான்...
மாதத்தில் மூன்று நாட்கள்
அனைவரும் என்னைவிட்டு
விலகியிருக்க...
நீயோ என் முகத்துடனே
உரசி உறவாடி
ஒட்டிக் கொள்கிறாய்...
என் மூக்குத்திக்கு
அருகில் நீ இன்னொரு
மூக்குத்தியாய்...
என் நெற்றிப் பொட்டுக்கு
அருகே இன்னொரு
குட்டித்திலகமாய்த்
தோன்றுகிறாய்...
அனைவரும்
உன்னை ஆதரிக்காவிடிலும்
நான் ஒவ்வொரு மாதமும்
உன் வரவிற்காகக்
காத்திருப்பேன்...
கையில் கஸ்தூரி
மஞ்சளுடன்
உனக்கு மஞ்சள் பூசி
குளிப்பாட்டுவதற்காக
முகப்பருவே!

-ஆர்.பாரதி, தஞ்சாவூர்

# மனம் திறந்து பேசுகிறேன்!



என் பெயர் பத்மா. வயது 27. எனக்கு இரண்டு குழந்தைகள். முதல் குழந்தை பிறந்த போது யோனிக்குழாய்க்கும், ஆசன வாய்க்கும் இடையே போடப்பட்ட தையல் பிரிந்து விட்டது. இதனால் ஆசன வாய் பிளந்து, மலம் கட்டுப்படுத்த முடியாத நிலைமை ஏற்பட்டது. மருத்துவரிடம் சென்ற போது, ''இரண்டாவது பிரசவத்துக்குப் பின்னால் தையல் போட்டுக் கொள்ளலாம். இதற்கு Complete Perineal Tear என்று பெயர்'' என்று கூறிவிட்டார்.

ஆனால், இரண்டாவது குழந்தை அதே வழியில் பிறந்த பிறகு, அதே மருத்துவர், ''எங்களால் ஒன்றும் செய்ய இயலாது. இதற்கான சிகிச்சைக்கு நீங்கள், யூரோகைனகாலஜி நிபுணரைத்தான் பார்க்க வேண்டும்'' என்று கூறிவிட்டார்.

இந்தப் பிரச்னையால் என்னால் வெளியில் எங்கேயும் செல்ல முடியவில்லை. குடும்ப வாழ்க்கையும் பாதித்து, விரக்தியிலிருந்தேன். என் தோழி ஒருத்தி, மங்கையர் மலரின் நீண்ட நாள் வாசகி. அவள் மூலமாக சென்னை (Guna Associates in Urogynecology & Research for Incontinence) GAURI மையத்தைப் பற்றிக் கேள்விப்பட்டு, டாக்டர் கார்த்திக் குணசேகரனை சந்தித்தேன். என்னைப் பரிசோதித்து ஆறுதல் கூறி, அறுவை சிகிச்சை மூலம் இதைச் சரிசெய்து விடலாம் என்று தைரியம் அளித்தார்.

எனக்கு அறுவை சிகிச்சை செய்து மூன்று மாத காலமாகி விட்டது. இப்போது என் கணவருடனும், குழந்தைகளுடனும் சந்தோஷமாக இருக்கிறேன். டாக்டர் கார்த்திக் குணசேகரனுக்கும், அவரை அறிமுகப்படுத்திய மங்கையர் மலர் வாசகி, என் தோழிக்கும் மனமார நன்றி சொல்ல கடமைப்பட்டிருக்கிறேன்.

நன்றி,

ஓய். பத்மா, மட்றப்பள்ளி போஸ்ட்,
திருப்பத்தூர் தாலுகா, வேலூர் மாவட்டம்.

**இப்போது கோவையிலும்...**

## பாலா மெடிக்கல் சென்டர் அண்டு ஆஸ்பிட்டல்,

901, திருச்சி ரோடு, இராமநாதபுரம், கோயம்புத்தூர் 641045.
0422-2323456, 2323333

**தங்கள் பிரச்னையை மேற்படி மையத்திலுள்ள முறையான பயிற்சி பெற்ற நபரிடம் தொலைபேசியில் தெரிவித்து கவுன்சிலிங் அல்லது ஆலோசனை பெறலாம்.**
**ஆலோசனைக்குக் கட்டணம் எதுவும் கிடையாது!**

ADVT




## GUNA ASSOCIATES IN UROGYNECOLOGY & RESEARCH FOR INCONTINENCE (GAURI)

1, Crescent Park Street, T.Nagar, Chennai - 600 017. Ph : 24341055, 24322591
E-mail : gunasek@gmail.com Web : www.urogynecology.in

# ரம்மியமான பொம்மி டிசைன்!

புதிய பகுதி ஆரம்பம்!



துளசி கண்ணன்



துணி, எம்பிராய்டரி ரிங், பிரஷ் - 2 (Round & Flat)
ஒயிட் கார்பன், டிசைன் ஷீட், ஃபேப்ரிக் கலர்ஸ், 3டி கிளிட்டர்ஸ், பென்சில்.

**செய்முறை:**

டிசைன் போடுவதற்கு முன்பு துணியை அயர்ன் செய்து கொள்ளுங்கள்.

டிசைன் தேவைப்படும் இடங்களைப் பென்சிலால் குறித்துக் கொண்டு அதன் மேல் ஒயிட் கார்பனையும் அதற்கு மேல் டிசைனையும் படத்தில் காட்டியபடி வைத்துப் பென்சிலால் கவனமாக ட்ரேஸ் செய்யுங்கள். இப்போது துணியில்

டிஸைன் பதிந்திருக்கும்.

டிஸைன் இருக்கும் பகுதியை எம்பிராய்டரி ரிங் வைத்து இணையுங்கள். ஃபிளாட் பிரஷ்ஷின் உதவியுடன் (பெரிய ஏரியாக்களை) ரவிக்கை, பாவாடை, துப்பட்டா பகுதிக்கு கற்பனைக்கேற்ப நிறமிடுங்கள். முகம், கை, கால் போன்றவற்றுக்கு ஸ்கின் நிறம் கொடுங்கள். (ஆரம்பத்தில் ஸ்கின் நிறம் கொடுக்கும்போது கண், மூக்கு, வாய் பகுதிகளை விட்டுவிட்டு மற்ற இடங்களில் கொடுங்கள். படிப்படியாக கண், மூக்கு, வாய் போன்ற உறுப்புகளை வரையத் துவங்கி விடுவீர்கள்).

ஸ்கின் நிறம் கொடுத்ததும் பொறுமையாகக் கண்ணுக்குக் கறுப்பு நிறம் கொடுங்கள். (ஓவியத்தின் உயிர், கண்கள்தான்) இதே போல் மற்ற உறுப்புகளுக்கும் தகுந்த நிறமிட்டு, தலை முடிக்கு பிரௌன் நிறம் கொடுத்து கறுப்பு நிற அவுட்லைனும் கொடுத்து விடுங்கள். ஸ்கின் பகுதியில் லைட் பிரௌனை அவுட்லைன் கொடுக்க டிஸைன் ரெடி.

3 டி கிளிட்டர்ஸ் கொண்டு நகை, ஆடைகளை அலங்கரியுங்கள். இதே போல் வெவ்வேறு டிஸைன்களையும் போட, அழகிய பொம்மி டிஸைன் பார்க்க ரம்மியமாக இருக்கும்.

ஒருநாள் முழுவதும் துணியைக் காய வைத்து ரிவர்ஸில் அயர்ன் செய்து, ஏழு நாட்கள் கழித்து வாஷ் செய்யுங்கள். (வாஷ் செய்யும்போது பிரஷ் உபயோகிக்கவோ, கசக்கிப் பிழியவோ வேண்டாம். அப்போதுதான் நிறம் போகாமலிருக்கும்.)

**✱ துணிகளில் ஃபேப்ரிக் பெயின்டிங் செய்யும்போது கவனிக்க வேண்டியவை:**

1. சில்க், சிந்தெடிக், காட்டன் போன்ற எல்லாத் துணிகளிலும் டிஸைன் செய்யலாம்.

2. கடைகளில் ஃபேப்ரிக் டிஸைன் புக் என்று கேட்டு வாங்குங்கள்.

3. ட்ரேஸ் செய்யும்போது, அடர்த்தி அதிகமான நிறத்துக்கு ஒயிட் கார்பனும், அடர்த்திக் குறைவான நிறத்துக்கு மஞ்சள் கார்பனும் பயன்படுத்தலாம்.

4. அடர்த்தி அதிகமுள்ள துணியில் டிஸைன் செய்யும்போது முதலில் வெள்ளை நிறத்தைக் கொடுத்து, அதன் மேல் நிறமிட்டால் நிறம் அழகாகத் தெரியும்.

தொகுப்பு : **லக்ஷ்மி**
**(தூரிகை தொடரும்)**



**வாதம், பித்தம், கபம் மூன்றும் இருப்பவர்களுக்கு ஓம டீ சிறந்தது. நீரைக் கொதிக்கவிட்டு, ஓமம் ஒரு மேஜைக்கரண்டி, புதினா, எலுமிச்சைச் சாறு இரண்டும் சிறிதளவு சேர்த்துக் கொதி வந்ததும் மலை உப்பு, கறுப்பு உப்பு சேர்த்து வடிகட்டி அருந்துங்கள். ஜீரண சக்தி சரியானபடி இயங்கும்.**

**- ஜெயலக்ஷ்மி,**
**புதுடில்லி-3.**





# SASTRA UNIVERSITY

**BACHELOR OF FINE ARTS (B.F.A.) & MASTER OF FINE ARTS (M.F.A.) IN**

## BHARATANATYAM

(offered by Directorate of Distance Education, SASTRA)



IN ASSOCIATION WITH

**NRITHYODAYA**

A SCHOOL FOR DANCE & MUSIC CHENNAI

PROGRAMME DIRECTOR:

**DR. PADMA SUBRAHMANYAM**

Application forms can be obtained from the Office of Admissions, SASTRA University (Thanjvaur & Kumbakonam) or Administrative Office at No 9, Karnan Street (Opposite to Samiyar Madam), Rengarajapuram, Kodambakkam, Chennai – 600 024 on payment of Rs.250 or by post on payment of Rs.300 by DD favouring SASTRA payable at Thanjavur. Application form can also be downloaded at www.sastra.edu.

**Last date for receiving completed application forms: November 28, 2009**

**Shanmugha Arts, Science, Technology & Research Academy**

(A University u/s 3 of the UGC Act, 1956)

Thanjavur - 613 401, Tamil Nadu, India

Phone : 04362-264101-108 & 304000-010 Fax : 04362-264120 www.sastra.edu



# மீண்டும்...

மருத்துவமனை வராந்தாவில் முன் வாசலைப் பார்த்தபடி அமர்ந்திருந்த சங்கரின் பார்வை இலக்கில்லாமல் வெறித்துக் கொண்டிருந்தது. முன்வாசல் தோட்டத்தில் இருந்த அழகிய பூச்செடி களின் அசைவோ, வெள்ளை உடை செவிலியர்களின் பரபரப்பான நடமாட்டமோ, பார்வையாளர்களுக்கான இருக்கையில் அமர்ந்திருந்த துறுதுறு குழந்தையோ எதுவுமே அவனது கவனத்தைக் கவரவில்லை.

'சுமதி.. சுமதி' தாரகமந்திரம் போல் மனம், அந்தப் பெயரை மட்டுமே இடைவிடாமல் ஜெபித்துக் கொண் டிருந்தது. சுமதி... பெயரைப் போலவே அவள் நினைவு களும் இனித்தன. மனம் பதினெட்டு வருடங்கள் பின் னோக்கிப் பயணித்தது.

**சு**மதியைப் பெண் பார்த்து வந்த அன்று அம்மா, அப்பா, தங்கை எல்லோரும் அவள் புராணமே பாடிக் கொண்டிருந்தார்கள். அவள் கொண்டு வந்து தந்த கேசரி, போண்டாவிலிருந்து, அவர்கள் வீட்டுச் சுவர் அலங் காரம், திரைச்சீலை வரை சுமதியின் கைவண்ணம் மிளிர்ந்தது.

சுமதியின் சமையலையும், கைவேலைகளையும், அவள் இன்டீரியர் டெகரேஷன் கோர்ஸ் முடித் திருப்பதையும் அவளது தந்தை புகழ்ந்ததில் தவறே இல்லை என்று சொல்லிக் கொண் டிருந்தார்கள்.



திருமணம் முடிந்த இரண்டாம் நாள் வந்திருந்த பரிசுப் பொருள்களை எல்லோரும் பிரித்துப் பார்த்துக் கொண்டிருக்க, சுமதி மட்டும் பரிசுப் பொருள் சுற்றி வந்த வண்ணத் தாள்களைப் பொறுமையாக நீவி மடித்து வைத்துக் கொண்டிருந்தாள்.

''அதை எதுக்கும்மா பத்திரப்படுத்திக் கிட்டிருக்கே?'' அம்மா கேட்க,

''இருக்கட்டும்மா... எப்பவாவது உபயோகப்படும்'' சுமதியின் பதிலுக்கு வீட்டில் எல்லோரும் சிரித்தார்கள்.

''டேய் சங்கர், உனக்குச் சரியான பெண்டாட்டிதான் வந்து வாய்ச்சிருக்கா'' சித்தப்பா, கேலி செய்தார்.

''அண்ணா, ஃபேஷன் மாறிடுச்சுன்னு ஷூ, கூலிங்கிளாஸிலிருந்து எல்லாத்தையும் தூக்கிப் போட்டுட்டு, புதுசு வாங்குவியே, இனிமே என்ன பண்ணப் போறியோ?'' தங்கை பொய்யாகக் கவலைப் பட்டாள்.

ஆனால், தங்கை சொன்னது போல் சுமதி, சங்கரின் சுதந்திரத்தில் தலையிட வில்லை. அவள் போக்கே தனி. அவளுக்கு எந்தப் பொருளும் வீணாகக் கூடாது. ஒன்று அது அழகான கைவினைப் பொருளாக மாறி வீட்டை அலங்கரிக்கும். அல்லது தேவைப்படுபவர்கள் கைக்குச் சென்று விடும்.

தோட்டத்து மலர்களைப் பூஜைக்குப் போக பக்கத்துக் கோயிலுக்குக் கொடுத்து விடுவாள். காய்கறி, பழத்தோல் தோட்டத் தில் உரமாகி விடும்.

அம்மாவின் பழைய காட்டன் புடைவைகளை மெல்லிய படுக்கைகளாகத் தைப்பாள். அது வீட்டு வேலைக்காரி மற்றும் தோட்டக்காரர் வீட்டுக் குழந்தை களின் மெத்தைகளாகிவிடும்.

குழந்தைகளின் சிறியதான துணிகள், விளையாட்டுப் பொருள்கள் கூட அனாதை இல்லங்களுக்கு உடனுக்குடன் தந்து விடுவாள்.

அம்மாவின் தேவை மட்டுமல்லாமல் வீட்டில் அனைவரது தேவைகளையும் குறிப்பறிந்து நிறைவேற்றுவாள். சங்கர், அலுவலக வேலையாக ஊர் ஊராகப் பறந்துக் கொண்டிருந்தாலும் வீட்டினரின் தேவைகள், குழந்தைகள் படிப்பு, உறவினர், நண்பர்கள் வீட்டு விசேஷங்கள் என்று எதுவும் தடைபடாது.

திடீரென அவன் நினைவு தடைப் பட்டது. அம்மாதான் அவன் தோளைப் பற்றியபடி விசும்பிக் கொண்டிருந்தாள்.

''**எ**ன்னாலதான்டா சங்கர் இப்படி ஆச்சு. என்னைப் பிடிக்கதாண்டா அவள் ஓடி வந்தாள். ஆனால் பொல்லாத விதி அவளைப் பிடிச்சுடுச்சு'' அழுத அம்மாவை சங்கரின் குழந்தைகள் அணைத்துக் கொண் டார்கள்.

''அழாதே பாட்டி, அம்மா நம்மை விட்டு எங்கேயும் போக மாட்டாங்க. நம் மோடதான் இருப்பாங்க.''

பதின்மூன்று வயதுப் பெண் பாட்டியைத் தேற்றினாள்.

நான்-ஸ்டிக் பேனில், பாகு காய்ச்சினால், பாகுப் பதம் வருவதற்கு மூன்று நிமிடங்கள் முன்பே அடுப்பை அணைத்து விடுங்கள். இல்லாவிடில் பேன் சூட்டிற்கு பாகு இறுகிவிடும்.

- சாய் சஞ்சனா, கொரட்டூர்.





பழைய வார, மாத இதழ்கள் மற்றும் புத்தகங்களை, கடையில் போடுவதற்கு முன்பு புத்தகங்களை ஒருமுறை பரிசோதனை செய்வது அவசியம். நம்மை அறியாமலேயே முக்கியக் காகிதங்கள், பில்களையும் சிலமுறை ரூபாய் நோட்டுகளையும் வைத்து விடுவது உண்டு. எனவே போடு வதற்கு முன்பு, ஒருமுறை சோதித்தால் பலன் நமக்குத்தான்!

- மஞ்சுதேவன்,
நவி மும்பை.





குளித்துவிட்டு வெளியே வந்த மாமியார், தலை சுற்றி விழப் போவதை சமையலறையிலிருந்து பார்த்த சுமதி, அவரைத் தாங்கிப்பிடிக்க வேகமாக ஓடி வர, கையிலிருந்த எண்ணெய்க் கிண்ணம் தவறி விழுந்து, அறை முழுவதும் சிதறியது. அதில் கால் வைத்து வழுக்கி விழுந்து, இதோ தீவிரச் சிகிச்சைப் பிரிவில் மருத்துவர்களின் தீவிரக் கண்காணிப்பில் சுமதி இருப்பதை விதி என்று சொல்லாமல் வேறு என்னவென்பது?

பெரிய டாக்டர் அறையிலிருந்து இவர்களை நோக்கி வந்தார். மெதுவாக எழுந்த சங்கரின் தோளைத் தொட்டு அமர்த்தி அருகில் அமர்ந்தார்.

''மனதைத் திடப்படுத்திக்குங்க சங்கர். எங்களால முடிந்தவரை முயற்சி செய்து பார்த்துட்டோம். கடவுள் அனுக்கிரகம் இல்லை. ப்ரெய்ன் டெட். உயிர் மட்டும் தான் இருக்கு.''

அம்மா, பிள்ளைகளை அணைத்துக் கொண்டு கதற, இவன் கல்லாய் இறுகிப் போனான்.

விஷயம் கேள்விப்பட்டு யார் யாரோ வந்தார்கள். மரத்துப் போனவனாய் அமர்ந்திருந்தான் சங்கர். கடைசியாய் டாக்டர் சொல்லிவிட்டுப் போனதை மனம் எதிரொலித்துக் கொண்டேயிருந்தது.

''ஸாரி சங்கர். உங்களுக்கு ஆறுதல் சொல்ல எனக்கு வார்த்தைகள் இல்லை. ஆனால், நீங்கள் விரும்பினால் உங்கள் மனைவியின் உறுப்புகளைத் தேவைப்படுபவர்களுக்குத் தானம் செய்யலாம். இது முழுக்க முழுக்க உங்கள் விருப்பம்தான்.''

டாக்டரின் வேண்டுகோளை பிள்ளைகளிடம் எப்படிச் சொல்வது? அவர்களால் தாங்கிக் கொள்ள முடியாதே. சுமதியின் பெற்றோரையும் தாயையும் எப்படித் தேற்றுவேன் கடவுளே!

''அப்பா'' பிள்ளைகளின் அழைப்பில் கலைந்து நிமிர்ந்தான்.

''அப்பா, என்னப்பா யோசிக்கிறீங்க? நமக்கு இவ்வளவு வசதியிருந்தும் அம்மா எந்தப் பொருளையும் வீணாக்கியதில்லை. எந்தவிதத்திலாவது அது மறுபடியும் உபயோகப்படும்படி செய்வாங்க. யாருக்காவது பயன்பட வேண்டும்னு சொல்வாங்க. அப்படியிருக்க, அம்மா இறந்த பிறகும் அவங்க உடல் மத்தவங்களுக்குப் பயன் பட்டா அம்மாவோட ஆத்மா சந்தோஷப் படும். டாக்டர் சொன்னபடியே செஞ்சுடுங்க அப்பா!''

மகன் பேசப் பேச கவலையையும், துக்கத்தையும் மீறி, அவன் மனம் தெளிந்தது. சங்கர், டாக்டரின் அறையை நோக்கி மெள்ள நடந்தான். ●

**கேட்டதில் பிடித்தது...**

# மகான்களைத் தரிசிப்பதால் என்ன நன்மை?



**ஒ**ருமுறை நாரதர், ''மகான்களைத் தரிசிப்பதால் என்ன நன்மை?'' என்று பகவானிடம் கேட்டார். பகவான், விந்திய மலையில் ஓர் அரசமரத்தடியில் இருக்கும் புழுவைக் கேட்கச் சொன்னார். நாரதரும் அப்புழுவிடம் கேட்க, ''அப்படியா?'' என்று கேட்டு அது உடனே இறந்து விட்டது.

நாரதர், மீண்டும் பகவானிடம் வந்து நடந்ததைக் கூற, ''இம்முறை ஒரு கிளியிடம் சென்று கேள்'' என்றார். கிளியிடம், ''மகான்களைத் தரிசிப்பதால் என்ன பலன்?'' என்று கேட்டதும், ''ஓகோ அப்படியா?'' என்று கேட்டு கிளியும் உயிரை விட்டது.

நாரதர் மீண்டும் பகவானிடம் வந்து நடந்ததைக் கூற, கன்று ஈன்றிருக்கும் பசுவிடம் போகச் சொல்லி கன்றிடம் கேட்கச் சொன்னார். நாரதரும் பசுவிடம் சென்று அப்போது பிறந்த கன்றிடம் இதே கேள்வியைக் கேட்க, நாரதரைப் பார்த்த கன்று உடனே இறந்து விட்டதாம்.

**அ**திர்ச்சி அடைந்த நாரதர், பகவானிடம் நடந்ததைக் கூறினார். ''காசி ராஜனிடம் சென்று அவருக்குப் பிறந்த குழந்தையிடம் உன் கேள்வியைக் கேள்'' என்று கட்டளையிட்டதும், ராஜாவின் பிள்ளைக்கு ஏதாவது ஆகிவிட்டால் என்ன செய்வது என்று நாரதர் யோசித்தார்.

''நீ சிறிதும் யோசிக்க வேண்டாம். குழந்தையிடம் கேள்'' என்று பகவான் கூறினார். சிறிது பயத்துடனேயே நாரதர், காசி ராஜாவிடம் சென்றார். மன்னன் மகிழ்ந்து தனக்குப் பிறந்திருக்கும் பிள்ளையைத் தங்கத்தாம்பாளத்தில் எடுத்து வந்து காட்டினார்.

**நா**ரதர் பிறந்த குழந்தையிடம் கேள்வி கேட்க, ''தங்களுக்கு என்னை ஞாபகம் இல்லையா? முதலில் புழுவாக இருக்கும்போது உங்களைப் பார்த்தேன். பிறகு, கிளி ஜென்மம் எடுத்தேன். அப்போது உங்களைத் தரிசித்தேன். பசுவின் கன்றாக ஜென்மம் கிடைத்தது. கன்றாக இருக்கும் போது உங்களைத் தரிசித்ததால் இப்போது ராஜாவின் பிள்ளையாக ஜென்மம் கிடைத்தது'' என்று கூறியதாம்.

மகான்களைத் தரிசிப்பதால் ஏற்படும் நன்மையைத் தெரிந்து கொண்டீர்களா?

**- இந்திரா கோபாலன்,**
**பெங்களூரு.**





அனுமானுக்கு வடை மாலை சாற்றும்போது [உளுந்து வடை செய்யும் பொழுது] வடையின் நடுவில் பெரிய துளையாகப் போட வேண்டும். அப்பொழுது தான் வடை வெந்த பிறகு, சணலில் மாலை கட்ட சரியாக இருக்கும். துளை சிறியதாக இருந்தால் வடை வெந்த பின்பு, துளை அடைத்துக் கொள்ளும்.

**- பத்மினி கிருஷ்ணன், ஜாம்ஷெட்பூர்.**

சமையலுக்கு வேண்டிய காய்கறிகளை நறுக்கி வைத்துக்கொண்டு, தேங்காய் மற்றும் மசாலாப் பொருள்களையும் அரைத்து வைத்துக் கொண்டு சமையலை ஆரம்பியுங்கள். அப்படிச் செய்தால் காலதாமதத்தால் சமையல் எரிவாயு வீணாகாமல் மிச்சப்படுத்தலாம்.

**- என்.ரங்கா, கோவை.**

பாட்டில் ஷாம்பூவைத் தவிர்த்து, ஷாம்பூ சாஷேக்கள் வாங்கி உபயோகியுங்கள். ஷாம்பூ செலவு கட்டுப்படுவதோடு வீணாவதும் குறையும்!

**- பிரவீணா அருண், பொன்னகரம்.**

வீட்டில் சிறிய அம்மி ஒன்று வாங்கி வைத்துக் கொள்ளலாம். சட்னி அரைக்க மிகவும் அவசரம் என்றால் மிக்ஸியையும், மற்ற நேரத்தில் அம்மியையும் பயன்படுத்தலாம். உடலுக்கு நல்ல பயிற்சி. மின்சாரம் மிச்சம். ருசியும் சுவையாக இருக்கும்.

**-எஸ்.செல்வசுந்தரி, திருச்சிராப்பள்ளி.**

வீட்டுத் துளசி மாடம் நிறமிழந்து வெளுத்து விட்டால் ஒரு பங்கு ஃபெவிகால், இரண்டு பங்கு செம்மண் கலந்து தேவையான அளவு தண்ணீர் விட்டு, பிரஷ்ஷினால் கலவையைப் பூசுங்கள். துளசி மாடம் அழகான டெரகோடா நிறத்தில் நீண்ட நாள் இருக்கும். கையிலும் ஒட்டாது.

**- சீனிவாசன், சென்னை-5.**

விருந்தினருக்கு சின்ன சோப் வாங்கி வைப்பதை விட, லிக்விட் சோப் வாங்கி வைத்தால் எல்லோரும் உபயோகித்துக் கொள்ளலாமே!

**- மாயா சேகர், மும்பை.**

டிபார்ட்மெண்ட் ஸ்டோரில் பொருள்கள் வாங்கும்போது, முதல் வரிசையில் அடுக்கப்பட்டிருக்கும் பொருள்களை எடுக்காமல் பின் வரிசையில் அடுக்கப்பட்டிருக்கும் பொருள்களை எடுக்கவும். அவைதான் சமீபத்தில் பாக் செய்ததாக இருக்கும். இது, என் அனுபவத்தில் கண்ட உண்மை.

**- கிரிஜா வைத்தியநாதன், சென்னை-10.**

## இவை எல்லாமே ஆஹா 50 தான்!

# ஆன்மீக உலகில் ஓர் அற்புதம்!



ஆன்ம சக்தியை அழித்து, அறிவின் திறனை குறைத்து, மனவலிமையை தகர்த்து, நிம்மதியைக் குலைத்து, வலிவை பாழாக்கி, ஆரோக்யத்தைக் குறைத்து, குடும்பத்தில் குழப்பம், தொழிலில் நஷ்டம், உத்தியோகத்தில் பிரச்சனை, கல்வியில் தோல்வி, காதலில் வீழ்ச்சி போன்ற காரியங்களை பில்லி, சூன்யம், ஏவல் இவற்றால் தீமை உண்டாகின்றன.

விண் மட்டும் விஞ்ஞானம் வளர்ந்த போதும், இவைகளுக்குத் தீர்வு அருள் மறையில் மாத்திர முண்டு. இந்தக் குறைகளை நீக்கி எல்லாத் துறையிலும் வெற்றி பெறச் செய்கிறார் மாபெரும் தவச்சீலர் மறையகம் பாபா. உடனே அணுகவேண்டிய முகவரி:

அருள்

## மறையகம்

1 B, மகாலட்சுமி அப்பார்ட்மெண்ட், நெ.3, அப்துல் ராசாக் தெரு, நூர்ஜஹான் தியேட்டர் எதிரில் (தற்போது ராஜ் தியேட்டர் என்று மாற்றப்பட்டுள்ளது), சைதாப்பேட்டை, சென்னை - 600 015.

☎ : 2435 1190, 2433 2047. செல்போன் : 98404 11551

குறிப்பு : வெளியூர், வெளிநாடுகளில் வசிப்பவர்கள் தங்கள் பிரச்சனை தீர்க்க தங்கள் பெயர், தங்கள் தாயார் பெயருடன் தங்கள் பிரச்சனைகளை எழுதி, ரூ. 10 (அ) அதற்கான அஞ்சல் தலையுடன் அனுப்பி வைத்து ஆலோசனை பெறவும்.

---

ஆன்மீக அன்பர்களே...

தங்கள் வாழ்க்கையில் பிரச்னையா? உங்கள் ஊரில் மழையில்லையா? கவலையை விடுங்கள். நவ.2009-ல் திருச்சி-திருவானைக்கா அருள்மிகு அன்னை அகிலாண்டேசுவரி சன்னதியில் நடைபெற உள்ள சிறப்பு பூஜையில் கலந்து கொள்ளுங்கள். (45 வயதுக்கு மேற்பட்ட பெண்கள் கலந்து கொள்ளலாம்.) சிறப்பு பூஜை பற்றிய தேதியை அறிந்து கொள்ள 9443882788-ஐத் தொடர்பு கொள்ளவும். அதன்பின் தங்கள் ஊருக்கு வந்து மழையின்மை பிரச்னை தீர, சிறிய ஹோமம் செய்யப்படும். சொந்தப் பிரச்னையாயின் தங்கள் இல்லத்திற்கு வந்து சிறிய ஹோமம் செய்யப்படும். ஏவல், பில்லி, சூனிய பிரச்னைகளுக்குப் பரிகாரம் செய்ய இயலாது. சிறப்பு பூஜையில் 108 பேர் மட்டுமே அனுமதிக்கப்படுவார்கள்.

**N. Muthukoushik,**
**No.1534, Mel Alangam, Thanjavur**

# படிக்க... பயன் பெற...





**காரைக்காலம்மையார் - சு.கோதண்டராமன், வசந்தா பிரசுரம், தொ.எண் - 2474 2227 சென்னை-33. விலை ரூ.65.00**

அறுபத்து மூவருள் அமர்ந்திருக்கும் உரிமை பெற்ற, காரைக்கால் அம்மையாரின் சுவையான வரலாறு. 'அற்புதத் திருவந்தாதி', 'இரட்டை மணிமாலை' போன்ற பாடல்கள் விளக்கவுரையுடன்.

**பெற்றெடுத்தால் போதுமா?**

**அரிமா.கே.மூர்த்தி, மணிமேகலைப் பிரசுரம், தொ.எண் : 2434 2926 சென்னை-17. விலை ரூ.45.00**



குழந்தை வளர்ப்பின் பல கூறுகளையும் ஆராய்ந்து எழுதப்பட்ட வழிகாட்டு நூல். பெற்றோர் - பிள்ளை உறவு மேம்படத் தரப்பட்டுள்ள ஐம்பது ஆலோசனைகளும் அருமை.



**உங்கள் அழகை அதிகமாக்கும் அழகுக் குறிப்புகள்**

**சசிமதன், ஸ்ரீ அன்னை மீனாக்ஷி பப்ளிகேஷன்ஸ், தொ.எண்: 2434 3406 சென்னை-17. விலை ரூ.50.00**

பேறுகாலத் தொடக்கத்தின்போதே பெண்கள் நீள முடியில் கொஞ்சம் வெட்டிவிட்டால், ஊட்டச்சத்து கருவைச் சென்றடையுமாம். அழகு விரும்பும் பெண்களுக்குச் சுலபமான யோசனைகள்.

**புக் பேங்க்**

**நல்வழி - சுவாமி ராகவேசானந்தர். ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-4, விலை ரூ.20.00**

குழந்தைகளுக்கு நன்னெறி புகட்டுவதோடு தன்னம்பிக்கையையும் ஊட்டுகிற சிறிய நூல்.

**சத்ரபதி வீரசிவாஜி - அங்கமுத்து, எம்.ஏ., சங்கர் பதிப்பகம், தொ.எண்: 2650 2086 சென்னை-49. விலை ரூ.65.00**



மாவீரன் சிவாஜியின் சுவையான வரலாறு. இந்து சாம்ராஜ்யம் உருவாகக் கனவு கண்ட அவருடைய சாகசங்கள் சிலிர்ப்பூட்டும்.

**- வாசகன்**

Himalaya

தினமும் ஷாம்பூ உபயோகிக்க பயமா?
முதலில் ஹிமாலயா உபயோகித்துப் பாருங்கள்.

புதிய ஹிமாலயா ஜென்டில் ஹெர்பல் டெய்லி-யூஸ் ஷாம்பூ.



# சிறந்த வழிகாட்டிகள்!

நமது புராணங்களில், எத்தனையோ பேர் பலவிதமாக பக்தியில் ஈடுபடுத்திக் கொண்டார்கள். இதில் சில பக்திமான்கள் முக்கியமாகக் கருதப்படுகிறார்கள்.

**ஆஞ்சநேயர்:** ராமருடைய பரம பக்தர். சிரஞ்சீவி. மோக்ஷமே வேண்டாமென்று சொல்லி ராம நாமம் நடைபெறும் இடங்களில் எல்லாம் இன்றும் இருந்து கொண்டிருக்கிறார்.



**ஆண்டாள்:** சிறு வயதிலிருந்து கண்ணனையே மணவாளனாக பாவித்து, மார்கழி மாதம் முப்பது நாட்கள் நோன்பு நூற்று, ரங்கநாதனையே மணவாளனாக அடைந்தவள்.

**உத்தவர்:** இவர் கிருஷ்ண பக்தர். கம்சன் அரண்மனையில் இருந்த போதும் கிருஷ்ணனையே நினைத்தவர். இன்றும் பத்ரியில் மக்கள் நலனுக்காக தவம் புரிபவர்.

**கூரத்தாழ்வார்:** பெரும் செல்வந்தர். கடைசி காலத்தில் ஸ்ரீராமனுஜரைப் பற்றிக் கேள்விப்பட்டு, தமது செல்வத்தை எல்லாம் விட்டு இராமனுஜரோடு ஆன்மிகத்தில் கலந்தவர்.

**திருமலைநம்பிகள்:** வேங்கடநாதனின் பக்தர். தம் கடைசி மூச்சு வரை பகவான் திருமஞ்சனத்திற்காக, தீர்த்தம் சுமந்து கொண்டு திருமலைக்குப் பக்தியுடன் சென்றவர்.

**மதுரகவி ஆழ்வார்:** இவர், ஆழ்வார் திருநகரியில், புளியமரத்தடியில் இருந்த நம்மாழ்வாரையே கடவுளாக நினைத்து கவி பாடியவர்.

அதே போல, வடக்கில் மீராபாய், கிருஷ்ணனையே நினைத்து ஆடல் பாடல்கள் நடத்தி, இறுதியில் கண்ணனோடு கலந்தாள். அனந்தாழ்வார் என்பவரும் ஸ்ரீநிவாச பக்தர். பெருமாளுக்காக ஒரு பூந்தோட்டத்தையே உருவாக்கி, பகவானுக்கு மலர்கள் தந்தருளினார். இன்றும் திருமலையில் இவரால் உருவாக்கப்பட்ட பூந்தோட்டம் இருக்கிறது.

இவர்கள் எல்லோருமே பக்திக்கு சிறந்த வழிகாட்டிகள். இவர்களது புகழ், உலகம் உள்ளவரை இருக்கும்.

– **பிரேமா சேஷாத்திரி, பெங்களூரு.**

10 Years of spreading prosperity
















**சா**ப்பிட்டு முடித்ததும் சூயிங்கம் மெல்வது அல்லது பல் தேய்ப்பது நல்லது. இது நொறுக்குத் தீனி சாப்பிடும் ஆவலைக் குறைக்கும்.

**- முத்துலக்ஷ்மி சங்கரன், சென்னை.**

**வெ**ளியூர் செல்பவர்கள் வீடியோ படம் எடுக்கும்போது, அந்த இடம் பற்றிய குறிப்பையும் ஒருவரைச் சொல்ல வைத்து எடுக்கலாம். பல வருடங்கள் கழித்து அதைப் போட்டுப் பார்க்கும்போது நாம் மறந்துவிட்ட செய்திகள், அந்த இனிய தருணங்கள் நம்மை மேலும் மகிழ்விக்கும்.

**- ஹேமலதா ராமன், சென்னை-17.**

**மி**ளகு, மிளகாய், ஒரு டீஸ்பூன் துவரம் பருப்பு, சீரகம் ஆகியவற்றை வறுத்து அரைத்து, புளித்த மோருடன் கலந்து உப்பு சேர்த்து, கடுகு தாளித்தால் சுவையான மோர் ரசம் ரெடி.

**- பத்மா வெங்கட்ராமன், ராயபுரம்.**

**கா**ய்கறிகளை நியூஸ் பேப்பரில் நன்றாகச் சுருட்டி, பிறகு பாலிதீன் பைகளில் போட்டு ஃப்ரிஜ்ஜில் வைத்தால் பல நாட்களுக்கு ஃபிரெஷ்ஷாகவே இருக்கும்.

**-கி.மஞ்சுளா, திருவாரூர்.**

**ப**ட்சணம் செய்யும்போது பூரணம் சற்று இளகலாக இருந்தால், ஒரு டீஸ்பூன் பால் பவுடரைக் கலந்து, நன்றாகப் பிசையவும். பூரணம் கெட்டியாகவும் சுவையாகவும் இருக்கும்.

**-செ.கலைவாணி, ஆலந்தூர்.**

**த**லைமுடிக்கு டை அடிக்கும்போது, ஒரு மணி நேரத்துக்கு மேல் ஊறவைக்கக் கூடாது. காரணம், டையில் உள்ள நச்சுக்கள் நம் இரத்தத்தில் கலந்து நாளடைவில் முகம் கருமை அடைந்துவிடும். டை தடவிய நாளில் நிறைய தண்ணீர் அருந்த வேண்டும்.

**- ராணி, தேனி.**

**கா**ய்கறிச்செடிகளில் இருந்து பூ உதிர்ந்து கொண்டே இருக்கும். ஒரு லிட்டர் தண்ணீரில் இருபது கிராம் பெருங்காயத்தைக் கலந்து, செடிகளில் தெளியுங்கள். பூவெல்லாம் காயாக மாறும்.

**- சு.கண்ணகி, மிட்டூர்.**

## இவை எல்லாமே ஆஹா 50 தான்!



இங்கிலாந்தில் வசிக்கும் தமிழக விஞ்ஞானி வெங்கட்ராமன் ராமகிருஷ்ணனுக்கு. இவ்வருடம் வேதியியலுக்கான நோபல் பரிசு கிடைத்துள்ளது. அணுக்களில் உள்ள ரிபோசம்களை (Ribosomes) சரி செய்வதன் மூலம், ஆன்டிபயாடிக்ஸ் மருந்துகளை உண்டாக்க முடியும் என்ற இவரது ஆராய்ச்சிக்கு இந்த நோபல் பரிசு கிடைத்திருக்கிறது.

அமைதிக்கான நோபல் பரிசு பெற்றிருக்கிறார் அமெரிக்க அதிபர் ஒபாமா. சர்வதேச அணு ஆயுத பரவல் தடை செய்வதற்காக பதவியேற்ற குறுகிய காலத்தில் ஒபாமா ஆற்றியிருக்கும் பணிகளுக்காக இந்த அமைதி நோபல்பரிசு அவருக்குக் கிடைத்திருக்கிறது.

சீனாவில் அறுபதாவது தேசிய தின விழா! இங்குள்ள ''ஹூங்காஸ்யு'' (வாயில் நுழையாத பெயர் கொண்ட)

# "ஜோண்டா

என்ற ஊரில், பல நுழைவு வாயில்கள் செய்து எல்லாவற்றையும் தங்கத் தகடுகளால் அலங்கரித்திருக்கிறார்கள்! உச்சக் கட்டமாக தங்கத் தகடுகள் வேயப்பட்ட கழிப்பறை ஒன்று ஐந்து கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டுள்ளது!



உத்திரபிரதேச மாநிலம் முசாபர் நகரைச் சேர்ந்தவர் தரம்வீர். பத்தாவது வயதிலிருந்து பிச்சை எடுத்து தனது தம்பியைப் படிக்க வைத்தார்.

இவரது தம்பி, மாநில பொதுப்பணித்துறையில் பொறியாளராக பணியாற்றுகிறார். தரம்வீர், 2006ல் நடைபெற்ற ஊராட்சித் தேர்தலில் பிற்படுத்தப்பட்ட மக்கள் சார்பில் நின்று வெற்றி பெற்று, இன்று ஊராட்சித் தலைவர் ஆகியிருக்கிறார். ''முன்பு எனக்காகப் பிச்சை எடுத்தேன். இப்போது கிராம மக்களின் வளர்ச்சிக்காகப் பிச்சை எடுக்கிறேன். இருபத்தைந்து லட்ச ரூபாய் வரை கிராமப்பணிகளுக்காக செலவிட்டுள்ளேன்'' என்கிறார் தரம்வீர்.

நியூ(ஸ்)மார்ட்



பசுமைப் புரட்சி மற்றும் தட்ப வெப்ப மாற்றம் குறித்த விழிப்புணர்வுக்காக, அண்மையில் லண்டனில் உள்ள பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் உச்சிக்கு சிலர் ஏறி, தங்களது கருத்துக்களை வலியுறுத்தினர். அதில் ஏறியவர்களில், பெங்களூருவைச் சேர்ந்த பிகேஷ் சிங் என்ற இந்தியரும் ஒருவர்.

முப்பரிமாணப் படங்களைப் பார்க்க அதற்கேற்றார் போல கண்ணாடி அணியவேண்டி இருக்கிறது அல்லவா? எதிர்காலத்தில் அந்தத் தேவையின்றி டி.வி.யிலேயே முப்பரிமாணக்காட்சிகள் தெரியும்படி டி.வி. பெட்டிகள் தயாரிக்கப் படலாமாம். இதற்கான முயற்சிகளை ஜப்பானின் சோனி நிறுவனம் செய்து வருகிறது.

# வரிக்குதிரை!



கர்நாடக மாநிலத்தில் அண்மையில் என்.எஸ்.எஸ். தேசிய முகாம் நடந்தது. இதில் கவர்னரிடம் விருது பெற்ற மாணவி ஹரிப்ரதா, சேலம் ஜெய்ராம் கல்லூரி மாணவி. எதிர்காலத்தில் பேராசிரியராகவேண்டும் என்பது இவரது குறிக்கோள்.

பாலஸ்தீனியத்தில் இருக்கிறது 'காஸா' மிருகக் காட்சி சாலை. இந்த ஊர்க் குழந்தைகள் வரிக்குதிரையைப் பார்த்ததே இல்லையாம்! ஒரு வரிக்குதிரையை இறக்குமதி செய்துகொண்டு வர ஏகப்பட்ட செலவாகும்! மிருகக்காட்சி சாலை நிர்வாகிகள் என்ன செய்தார்கள் தெரியுமா? ஒரு வெள்ளைக் கழுதையைப் பிடித்து அதன் மேல் கறுப்பு பெயிண்ட்டால் வரிக் கோடுகள் போட்டு



வரிக் குதிரை இப்படித்தான் இருக்கும்'' என்று காட்டி விட்டார்கள்!

**ம**காத்மா காந்தியின் 140வது பிறந்த நாளை முன்னிட்டு, சர்வதேச அஹிம்சை தினமாக அறிவித்து, மகாத்மாவின் படம் அச்சிட்ட ஸ்டாம்பு களை, ஐக்கியநாடுகள் சபை வெளியிட்டது! நியூ யார்க்கில், ஐக்கிய நாடுகள் சபையின், அசெம்பிளி தலைவர் அலி அப்துல் சலாம் ட்ரெகி, மகாத்மாவின் உருவப்படம் கொண்ட ஸ்டாம்பை திறந்து இந்த மாபெரும் கௌரவத்தை நிகழ்த்தினார்.

**கே**ரளா ஆலப்புழை யைச் சேர்ந்தவர் ஐந்து வயது சிறுமி வர்ஷா வினோத். அண்மையில் லண்டனில் தனது கராத்தே திறமைகளை வெளிப்படுத்தி, பார்ப் போரை வியக்க வைத்தாள். உலகிலேயே மிக இளம் வயது கறுப்பு பெல்ட் வீராங்கனை இவள் தான்.

**ந**ம் நாட்டில் சுமார் 37 கோடிக்கு மேற்பட்ட மக்கள், வறுமைக்கோட்டுக்கு கீழ் இருக்கின்றனர். இதில் 75 சதவிகிதம் கிராமப்புறங்களில் இருக்கிறார்களாம். மக்கள் தொகை பெருக்கம், எழுத்தறிவின்மை இவற்றோடு, இந்த ஏழ்மை நிலைக்கு ஜாதிபாகுபாடும் ஒரு முக்கி யக்காரணம்!

**கே**ரளா திருச்சூரை சேர்ந்தவர் சாஜு வர்கீஸ். மகனின் சிகிச்சைச் செலவுக்காக பலரிடம் கடன் வாங்கி, சிகிச்சை செய்தும் பலனின்றி மகன் இறந்துவிட, கடனை அடைப்பதற்காக பதினொரு வருடங்களுக்கு முன் அபுதாபியில் வேலை செய்யச் சென்றார். சமீபத்தில் தனது மொபைலை, ரீசார்ஜ் செய்யும்போது அதற்காக ஒரு பரிசுக் கூப்பனை பெற்றார். அதற்கு ஒன்றேகால் கோடி ரூபாய் பரிசு கிடைத்துள்ளது.

**ம**னிதர்களுக்கு மட்டுமா அடையாள அட்டை! நாட்டின் முக்கிய விலங்கான புலிகளின் எண்ணிக்கை குறைந்து வருவதால், அவற்றை பாதுகாக்கும் பொருட்டு, ஒவ்வொரு புலிக்கும் அடையாள அட்டை தயாரிக் கப்பட இருக்கிறது. புலிகள் காப்பகங்களில் உள்ள ஒவ்வொரு புலியையும் போட்டோ எடுத்து (அவற்றின் உடல் கோடுகள் வித்தியாசப்படுமாம்) அடையாள அட்டை தயாரிக்கப்படுமாம்.

**ச**ர்வதேச திரைப்பட விழா, சென்னையில் டிசம்பர் மாதம் நடைபெற உள்ளது. இதில் முதன் முறையாக, தமிழ் திரைப்படங்களுக்கிடையே போட்டி நடக்க உள்ளது. 2008ம் ஆண்டு டிசம்பர் 15லிருந்து, 2009ம் ஆண்டு அக்டோபர் 15ம் தேதி வரை தயாரிக்கப்பட்ட திரைப்படங்கள் மட்டுமே இதில் கலந்து கொள்ளலாம். சிறந்த திரைப்படத்துக்கு மூன்று லட்ச ரூபாயும், ICAF (Indo Cine Association Foundation) கேடயமும் வழங்கப்படுமாம்.

தொகுப்பு : **பத்மினி பட்டாபிராமன்**

விருதுப் பெண்மணி

# இதல்லவோ அர்த்தமுள்ள வாழ்க்கை?

திருவனந்தபுரத்தைச் சேர்ந்த கோமதியம்மாள், பிறவி ஊமை. பள்ளி வாசலையே மிதிக்காதவர். சாதாரண தையல் பள்ளியில் சேர்ந்திருந்த கோமதியம்மாளுக்கு அவருடைய 'கை'தான் பெரிய மூலதனம். ஐந்தாயிரம் ரூபாய் வங்கிக் கடன் வாங்கி, இரண்டு தையல் மிஷினுடன் ஆரம்பித்த அவருடைய தையல் வாழ்க்கை மெதுவாக, 'ராஜ்தீப் டெயிலரிங் அண்ட் ரெடிமேட் கார்மெண்ட்ஸ்' என்ற பெயரில் ஒரு சிறுதொழில் நிறுவனமாகி பதினைந்து பெண்களுக்கு வேலை கொடுக்குமளவுக்கு உயர்ந்தது. தற்போது வருட நிகர லாபம் இரண்டு லட்சம் என்பது குறிப்பிடத்தக்கது.

இதற்காக 1990ல் ஊனமுற்றோருக்கான சிறந்த தையல் நிபுணர் என்ற தேசிய விருதை அன்றைய ஜனாதிபதி வெங்கட்ராமன் அவர்களிடம் வாங்கினார். கேரள அரசும் இவருடைய வளர்ச்சிக்குக் கை கொடுத்தது. இரண்டு முறை தேசிய விருது பெற்றுள்ள கோமதியம்மாள் ஊனமுற்ற பெண்களுக்குத் தையற் தொழிலை கற்றுக் கொடுத்து உதவியுள்ளார். சமீபகாலமாக, உடல்நிலை காரணமாக தையல் தொழிலை வெகுவாகக் குறைத்துக் கொண்டவர், தன் மனதை செடி கொடிகளில் மாற்றிக் கொண்டுள்ளார்.

கோமதியம்மாளின் வீடு முதல் மாடியில் உள்ளது. வீட்டின் முன்புறம் உள்ள மிகச் சிறிய வராண்டாவில் லில்லி, தாமரை தொட்டியுள்ளது.

சுற்றுப்புறச் சுவரில் மல்லிகை படர்ந்து பூத்துக் குலுங்குகிறது. மாடியிலிருக்கும் இவருடைய தோட்டத்தில், கத்திரி, வெண்டை, தக்காளி, கீரை, பயறு, மிளகாய் என்று ஒரு காய்கறி கடையே இருக்கிறது. தினமும் அரை கிலோ காய்கள் கிடைப்பதாகக் கூறும் இவருடைய சகோதரரும், அவருடைய மனைவியும்தான் இவருக்குத் துணை.

கோமதியம்மாளின் வீடே பூஞ்சோலையாகக் காட்சி தருகிறது. இதல்லவோ அர்த்தமுள்ள வாழ்க்கை?

**-சியாமளா சுவாமிநாதன்,**
**திருவனந்தபுரம்.**

# புதிய இதயத்துடன்

டாக்டர் கே.வி.தவராஜ் ஆகிய எனக்கு தற்போது 50 வயதாகிறது. நான் கடலூரில் ஊனமுற்றோருக்கான பாலைவனச்சோலை என்னும் தன்னார்வ தொண்டு நிறுவனம் மற்றும் முடநீக்கு உபகரண உற்பத்தி மையம் போன்ற வசதிகளுடன் சிறப்பு பள்ளிகளை நடத்தி வருகின்றேன். சிறந்த சேவையின் நிமித்தமாக "தலைசிறந்த தேசிய விருதினை" குடியரசு தலைவர் டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல்கலாமிடமும் தலை சிறந்த மாநில விருதினை துணை முதல்வர் மு.க.ஸ்டாலினிடமும் பெற்றுள்ளேன்.

2007-ம் ஆண்டு அலுவலக பணியில் மாடிப்படிகள் ஏறிய போது மூச்சு திணறல் ஏற்பட்டு உடல் முழுவதும் வியர்த்து மிகவும் கஷ்டப்பட்டேன். நான் மருத்துவரிடம் சென்ற போது ஈ.சி.ஜி. எடுத்து பரிசோதித்தில் சில நாட்கள் மருந்து கொடுத்து சரியாகி விடும் என்று அனுப்பி வைத்தனர். நான் மாரடைப்பினால் அவதியுற்றேன் என்பதை தெரிவிக்கவில்லை. இச்சூழ்நிலையில் 31.12.2008 அதிகாலை 3 மணியளவில் மூச்சு திணறல் மற்றும் முதுகு பகுதியும் சிவந்து வீக்கம் கண்டு கஷ்டப்பட்டேன். பின் இதய நோய் நிபுணரிடம் சென்றபோது என்னிடமிருந்த ஈ.சி.ஜி. மற்றும் மருத்துவ பதிவேடுகளை பார்த்து 2 முறை மாரடைப்பினால் தாக்கப்பட்டு மிக ஆபத்தான நிலை என கூறி மருத்துவமனைக்கு அனுப்பி வைத்தனர்.



மருத்துவ ஆலோசனையின் பேரில் சென்னையில் உள்ள மிக புகழ் பெற்ற இதய சிகிச்சை நிபுணரை சந்தித்து இதய தசை சோதனை மற்றும் இதயத்தின் இரத்த நாளங்களில் உள்ள அடைப்புகளை கண்டறிய ஆஞ்ஜியோகிராம் செய்து கொண்டேன். இப்பரிசோதனையில் இதயத்திற்கு இரத்தத்தை எடுத்து செல்லும் 4 முக்கிய இரத்த குழாய்களில் ஒரு குழாய் முழுவதுமாக பழுதுபட்டு இரத்தம் செல்ல வழியின்றி சுருங்கிவிட்டது என்றும் 2வது குழாய் 100% அடைப்பு ஏற்பட்டு விட்டது என்றும் 3வது குழாய் 85% அடைப்பு ஏற்பட்டு விட்டது என்றும் 4வது குழாய்

# புத்துணர்வான வாழ்க்கை

மட்டுமே இயங்குகிறது என்றும் 15 முதல் 7 நாட்களுக்குள்) அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்றும் அதற்கு அதிகமான தொகை செலவு ஆகும் எனவும் உயிர் பிழைக்க 40% மட்டுமே உத்திரவாதம் அளிக்க முடியும் என்றும் அப்படி உயிர் பிழைத்தாலும் இதயத்தில் செயல்திறன் (E.F) மிகக் குறைந்த 32 அளவே உள்ளது என்பதால் (E.F) அளவு ஏற வகை இல்லாத காரணத்தினால் எந்த நிமிடமும் மரணத்தை தழுவலாம் என தெரிவித்தனர். லட்ச கணக்கில் பணம் செலவு செய்தும் உயிருக்கு உத்திரவாதம் இல்லாததால் மனம் வெறுத்தேன்.

அப்போது என்னை காண வந்திருந்த என் நன்பர் ஆக்ஸிமெட் மருத்துவமனையினை பற்றியும் அதில் மருத்துவம் பெற்று சுகம் அடைந்த நன்பர் பற்றியும் விவரமாக தெரிவித்தார். ஆக்ஸிமெட் மருத்துவ மனைக்கு சென்றேன். என்னை முழுமையாக பரிசோதித்த பின் என்னை பார்த்து மனம் தளாராதீர்கள் முழு மருத்துவம் பெற்று புதிய இதயத்துடன் துடிப்பான மனிதராக உங்கள் பணியை நீண்டகாலம் தொடருவீர்கள் என்ற டாக்டர். அயாஸ் அக்பர் அவர்களின் வார்த்தை என்னை புத்துயிர் பெற செய்தது.

டாக்டர். அயாஸ் அக்பர் அவர்களின் அணுகுமுறை மட்டுமின்றி E.F. அளவை உயர்த்தும் EECP மருத்துவத்தை பற்றியும் விரிவாக எடுத்துரைத்தனர். மேலும் அங்கு மருத்துவம் பெற்ற சிலரிடம் பேசி அறிந்த உடன் முழு மருத்துவத்திற்கு என்னை உட்படுத்திக் கொண்டேன். EECP மருத்துவத்தை துவக்கி 15வது நாளில் ஈ.சி.ஜி. எக்கோ எடுத்து பார்த்த போது 32 அளவே இருந்த (E.F) உயர்ந்து 48 ஆக இருந்ததை கண்டு அதிசயப்பட்டேன்.

கத்தி இன்றி இரத்தமின்றி காயமின்றி பணவிரையமின்றி படுக்கையின்றி புதிய இதயத்துடன் புத்துணர்வுடன் வாழ்வை தொடர வழிகாட்டிய டாக்டர் அயாஸ் அக்பர் அவர்களுக்கும் ஆக்ஸிமெட் மருத்துவமனைக்கும் என் நன்றியை காணிக்கையாக்குகிறேன்.

மேலும் நான் ஒரு உதாரணமாக இருக்க வேண்டுமென்பதற்காக இதுபோன்ற நோயால் பாதித்தவர்கள் என்னைபோல் நலம் பெற வேண்டுமென்பதற்காக என் தொலைபேசி தொடர்பு எண்ணை இங்கு கொடுத்துள்ளேன்.

Dr. K.V. தவராஜ், M.A., Ph.D.,

Cell : 94431 29464 / 04142 - 294088.

**மேலும் விவரங்களுக்கு**

# வாங்க, தொழிலதிபர் ஆகலாம்!



**சொந்தத் தொழில் தொடங்க எல்லோருக்கும் ஆசைதான். ஆனால், எத்தனை பேரால் முடிகிறது?**

**தொ**ழில் தொடங்க முதலீடு என்பது இரண்டாம்பட்சம்தான். முயற்சியும் மூளையும்தான் முக்கியம் என்று சிலர் போகிறபோக்கில் சொல்லலாம். இதில் எவ்வளவு தூரம் உண்மை இருக்கிறது..?




'என் அறிவுக்கும் திறமைக்கும் நான் தொழிலில் இறங்கினால் நிச்சயம் வெற்றி தான். இறங்கத்தான் தயக்கம்' என்பது பலரது நிலை. இவர்களது கையைக் கட்டிப்போடுவது எது...?

'மூணாங்கிளாஸ் படிச்ச அவனுக்கே காசு கொட்டும்போது, நானெல்லாம் பிசினஸ் பண்ணினா, எவ்வளவோ சம்பாதிக்க முடியும். இறங்கலை... அவ்வளவு தான்' என்று வாய்ச் சவடால் அடிப்பவர்களைத் தடுப்பது எது..?

தொழிலைப் பொறுத்தவரை ரிஸ்க் எடுத்தவர்களே ஜெயித்திருக்கிறார்கள். மற்றவரெல்லாம் ரஸ்க் டயலாக் விட்டுக் கொண்டு கரையிலேயே நின்று கொண்டிருக்கிறார்கள்.

தைரியமாகத் தொழிலில் இறங்காமல் இருப்பதற்கு என்ன காரணம்...? தொழிலில் போட்ட பணம் திரும்பி வரும் என்பதற்கும் நிலையான வருமானம் வரும் என்பதற்கும் எந்த உத்தரவாதமும் கிடையாது. இன்றைக்கு நல்ல நிலையில் தொழில் வருமானத்தோடு இருப்போரெல்லாம் ரிஸ்க் எடுக்கத் துணிந்தவர்கள்தான்.

'ரிஸ்க் எடுக்கத் தயார் நான்' என்பவர்களுக்கு அடுத்து காத்திருக்கிறது இன்னும் எண்ணற்ற கேள்விகள். அவை இதோ...

- ❖ என்ன தொழில் தொடங்குவது?
- ❖ தெரியாத தொழிலில் இறங்கலாமா?
- ❖ வேலையை விட்டுவிட்டு தொழில் தொடங்குவது சரியா...?
- ❖ திருமணம் தடைக்கல்லா...?
- ❖ எந்த வயதில் தொடங்குவது?
- ❖ பகுதி நேரமாகத் தொழில் புரியலாமா?
- ❖ போட்டி இல்லாத தொழிலை அடையாளம் காண்பது எப்படி...?
- ❖ பங்குதாரரைச் சேர்த்துக் கொள்ளலாமா?



- ❖ பெரிய முதலீடா, சிறிய முதலீடா...?
- ❖ முதலீட்டைப் புரட்டுவது எப்படி...?
- ❖ தொழிலில் ஈடுபட்டபின் வெற்றிக்கு எவ்வளவு காலம் காத்திருக்க வேண்டும்?
- ❖ விற்பனை விலை நிர்ணயம் செய்வது எப்படி?
- ❖ தொழிலுக்கு அலுவலகம் அவசியமா?
- ❖ அதிர்ஷ்டம், நேரம், காலத்தில் நம்பிக்கை வைத்தால்தான் வெற்றி பெற முடியுமா...?
- ❖ மார்க்கெட்டிங்கில் என்ன தெரிந்து கொள்ளவேண்டும்?
- ❖ பணத்தைக் கையாளும் லாவகம் தெரியாதே... எப்படி சமாளிப்பது?
- ❖ ஆரம்பமே அசத்தலாக இருக்க வேண்டுமா, இல்லை அடக்கி வாசிப்பது நல்லதா?



❋ இராம்குமார் சிங்காரம்



# நீங்கள் வெற்றிகரமான பிஸினஸ்காரர் ஆகணுமா?

❖ விளம்பரத்துக்கு எவ்வளவு தொகை ஒதுக்க வேண்டும்?

❖ புதிய சிந்தனைகள் மூலம் குறுகிய காலத்தில் வெற்றி பெற முடியுமா?

❖ மனைவி, உறவினர்கள் தொழிலுக்கு பலமா... பலவீனமா...?

❖ ஒருவேளை தொழிலில் வெற்றி பெற முடியாவிட்டால் என்ன செய்வது?

இந்தக் கேள்விகளில் குறைந்தபட்சம் 10 கேள்விகளாவது உங்கள் மனத்தில் எழுந்திருந்தால், உங்களுக்குள் நிச்சயம் தொழில் தொடங்கும் ஆர்வம் இருக்கிறது. சரியான பதிலும் திட்டமிடலும் இருந்தால் தொழிலில் தைரியமாகக் குதித்து விடலாம்.

**தொ**ழில் தொடங்க விரும்பும் அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டியது பலூன் தத்துவம். தொழிலின் அடிப்படை நெளிவு சுழிவுகளைப் பலூனிடமிருந்து கற்றுக்கொள்ளலாம்.

அதென்ன பலூன் தியரி?

அடுத்த இதழில் விவரமாகத் தெரிந்து கொள்ளலாம்!

* சின்னதோ, பெரியதோ ஏதாவது தொழில் செய்ய விரும்பறீங்களா?
* மிகச் சிறிய அளவில் தொடங்கி, படிப்படியாக முன்னேறி இன்று சிறந்த முறையில் வெற்றிப் பாதையில் செல்பவரா?
* இல்ல... ஏற்கெனவே தொழில் செஞ்சு கையைச் சுட்டுக்கிட்டவரா?
* இல்ல.. இப்பவே ஒரு முதலாளிதானா?

உங்க அனுபவம் எதுவானாலும் எங்களுக்கு எழுதி அனுப்புங்க. அப்படியே தொழில்சார்ந்த உங்களோட சந்தேகம் மற்றும் வினாக்களையும் 'வாங்க தொழிலதிபர் ஆகலாம்' என்ற தலைப்பில் எழுதி அனுப்புங்க.

'கேட்டலிஸ்ட்' பப்ளிக் ரிலேஷன்ஸ் இராம்குமார் சிங்காரம் பதிலளிக்கிறார். கூடவே பயனுள்ள தொழில் 'டிப்ஸ்'களையும் தருகிறார். தொழில் இலக்கியத்தின் புதிய வெளிச்சமான இவரது அறிவுரைகள் நிச்சயம் தங்களது தொழில் முன்னேற்றத்துக்கு வழிவகுக்கும். உடனே எழுதி அனுப்புங்க தொழில் ரகசியங்களைத் தெரிஞ்சுக்குங்க!

**ஆல் தி பெஸ்ட்!**

(ஆர்.)

# பாட்டி சொன்ன ரகசியம்!

**எ**ங்கள் பாட்டிக்கு, எண்பது வயதாகிறது. எந் நேரமும் சுறுசுறுப்பாக இருப்பார். தன்னுடைய வேலைகளைத் தானே செய்து கொள்வார். புத்த கங்கள் படிப்பார். டீ.வி. பார்ப்பார். அம்மாவுக்குத் தன்னால் முடிந்த சிறு சிறு உதவிகள் செய்வார். மொத் தத்தில் எங்கள் பாட்டி யைப் பார்த்தால் வயதான வர் மாதிரியே தெரியாது. அதனாலோ என்னவோ எங்கள் பாட்டி எல்லோரிட மும் தனக்கு அறுபத் தைந்து வயதுதான் ஆகிறது என்று சொல்வார்.

''ஏன் பாட்டி, உங்க வயசை இப்படி அநியாயத் துக்குக் குறைச்சுச் சொல் றீங்களே; கண்பட்டுடும்னு பயமா?'' என்று கொஞ்சம் இண்டலாகவே கேட் டோம்.

''அப்படியெல்லாம் இல்லை பசங் களா, அதுக்கு ஒரு காரணம் இருக்கிறது. நான், என் வயதை உண்மையாகவே அறு பத்தைந்து என்றே நினைத்துக் கொள்கிறேன். அப்போதுதான், நமக்கு இன்னும் வயதாக வில்லை என்ற உணர்வும், அதனால் எப்போ தும் சுறுசுறுப்பாக இருக்கவும் முடிகிறது.

''எனக்கு வயதாகி விட்டது என்று நான் நினைத்தால் ஒருவித மனத்தளர்ச்சி வந்து விடும். 'எனக்கு வயதாகி விட்டதே. என்னை யாரும் கவனிக்கவில்லையே' என்ற சுயபச் சாதாபப்படுவேன்.

''அப்படியெல்லாம் இல்லாமல் யாருக் கும் தொந்தரவு தராமல், இருக்கும் வரையில் சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதற் காகத்தான், என்னை வயது குறைந்தவளாக நினைத்துக் கொள்கிறேன். மற்றவர்களிட மும் அப்படிச் சொல்லிக் கொள்கிறேன். மற்றபடி எனக்கு நிறைய வயதாகி விட்டது. பகவான் எப்பொழுது கூப்பிடுவார் என்று சந்தோஷமாகக் காத்துக் கொண்டிருக் கிறேன்'' என்றார்.

பாட்டியின் மாறுபட்ட சிந்தனையைப் பார்த்து நாங்கள் வியந்து போனோம்.

- பாமதி நாராயணன்,
பெங்களூரு-61.



# குதூகல வாழ்வின்

**Sreevatsa Global Village**
**COIMBATORE**

IT CORRIDOR-ல். குமரகுரு காலேஜ் ஆப் டெக்னாலஜி, அத்திபாளையம் ரோடு, சத்திரோடு அருகில் கோயமுத்தூர்







## 43
**தனி வீடுகள்**
(3 படுக்கை அறை : 3000 sft)

## 448
**LUXURY FLATS**
(3 படுக்கை அறை : 1562 - 2140 sft)

### Common Amenities :

- நீச்சல் குளம்
- டென்னிஸ் கோர்ட்டுகள்
- கிளப் ஹவுஸ்
- கம்யூனிட்டி ஹால் & ஜிம்
- 24 மணி நேர பாதுகாப்பு
- ஒருங்கிணைக்கப்பட்ட இன்டர்நெட், சேட்டிலைட் ரேடியோ, சேட்டிலைட் டி.வி. மற்றும் கண்காணிப்புக் கேமரா போன்ற வசதி
- அத்திக்கடவு குடிநீர் மற்றும் போர்வெல் தண்ணீர் வசதி

கோவை, சரவணம்பட்டியில் IT பார்க்கிற்கு அருகில் 20 ஏக்கரில் ஸ்ரீவத்ஸா குளோபல் வில்லேஜ் என்ற புதியதோர் குடியிருப்பு உருவாகிறது. சிறிய நீரோடை, தென்னை மரத்தோப்பு மற்றும் பசுமைச் சூழலுக்கிடையே இந்த இல்லங்கள் அமைய உள்ளன. மேலும் கல்லூரிகள், பள்ளிகள் மற்றும் Cognizant, Robert Bosch, Ford, KGISL முதலிய IT கம்பெனிகளும் வெகு அருகாமையிலேயே உள்ளன. இங்கிருந்து காந்திபுரம் 8 கி.மீ.-ம், விமான நிலையம் 9 கி.மீ.-ம், ரயில்வே ஸ்டேஷன் 10 கி.மீ. தூரத்திலும் அமைந்துள்ளன.

**ஸ்ரீவத்ஸாவின் சிறப்பம்சங்கள்**

கோவையில் பல்வேறு டவுன்ஷிப் மற்றும் அடுக்குமாடிக் குடியிருப்புகளை வெற்றிகரமாக உருவாக்கியுள்ள ஸ்ரீவத்ஸா ரியல் எஸ்டேட் பி. லிட். நிறுவனம் தரத்திற்கும் நம்பிக்கைக்கும் பெயர் பெற்றது. இந்நிறுவனத்தினால் நேர்த்தியுடன் கட்டப்படும் ஒவ்வொரு இல்லமும் வாங்குபவர்களை முழு திருப்தியடையச் செய்கிறது.

சிறப்பம்சங்கள் பல கொண்ட இந்த இல்லங்களை உடனே உங்களுடையதாக்கிக் கொள்ளுங்கள்.

கிராமியச் சிறுகதை

# கூட்டாஞ்சோறு!

• கோதை நாராயணன்



"ஏட்டி, என்னத்த களவாடிக்கிட்டு ஓடுற?" பெரியாச்சியின் குரல் கொல்லைப் புறத்தில் எகிறியது.

"நம்ம பூவாத்தா மவ பேச்சி, கூட்டாஞ்சோறு ஆக்கித் தாரேன்னு சொன்னாளாம்; அதேன் ஒரு பிடி அரிசியை எடுத்துக்கிட்டு பாயிறா" பதிலளித்தாள் மருமகள் பார்வதி.

இந்த உரையாடல்கள் எதையுமே காதுல வாங்காமல் மூச்சிரைக்க பேச்சி வீட்டுக்கு வந்து நின்றாள் லட்சுமி.

"யக்கா! இந்தா என் பங்கு அரிசி, அங்க பெரியாச்சி அவயம் போட ஆரம்பிச்சுட்டா; தப்பிச்சுப் பிழைச்சு ஓடியாந்தேன்."

"முறத்துல போட்டுட்டு பிறவாசல்ல போய் முருங்கைக் கீரை கொஞ்சம் ஆஞ்சுட்டு வா!"

"சரிக்கா!" லட்சுமி நகர்ந்து கொண்டிருக்கும்போதே குமாரு வந்தான்.

"யக்கா! இந்தா... என் பங்குக்கு ஒரு வாழைக்கா, இரண்டு கத்தரி. நம்ம சுடலை மாந்தோப்புக்கு போயிருக்கான் மாங்கா புடுங்க!"

"சரி சரி, அந்தப் பாண்டிப் பயல எங்கல காணும்? அவந்தான பருப்பு கொண்டாரேன்னான். நா உங்களுக்கு கூட்டாஞ்சோறு ஆக்கி கொடுத்துப்புட்டு பீடிக் கடைக்கு போகணும்ல? சீக்கிரம் உங்கக் கூட்டாளிகளையெல்லாம் சேருங்க. ஆமா, நாழியாச்சு நா உலையை வைக்கேன்."

அதற்குள் சுடலை காவக்காரங்கிட்ட அடிய வாங்கிட்டு அத்தோடு மாங்காயையும் கொண்டு வந்து சேர்த்தான்.

கீரையோட வந்த லட்சுமியைப் பார்த்து, "ஏட்டி! நீயும் சுடலையும் அந்த வெங்காயத்தையும் பூண்டையும் உரிச்சுக் கொண்டாரணும்" என்றாள் பேச்சி.

"சரிக்கா!" நொடியில் லட்சுமியும் சுடலையும் உரிக்கத் தொடங்கினர்.

லட்சுமி கிண்டலாக, "ஏலே! காவக்கார மாரியண்ணே அடி மொத்தியிருப்பாகளே?"

"அங்கண பிடிச்ச ஓட்டம் இங்கிட்டு வந்துதானே நின்னேன்."

"திருட்டு மாங்கான்னா சும்மாவா, தன்னால இனிக்குமே.. யக்கா உரிச்சுப்புட்டோம். இப்ப என்ன செய்ய?"

அதற்குள் இவுக கூட்டாளிகள் சுப்பு, காமு, சரசு, பாண்டி தங்களோட பங்குகளாக ஆளுக்கு ஒரு கை அரிசி, உருளை, கேரட், அவரை, பருப்புன்னு தர முறம் நிறைந்தது.



**பே**ச்சி அரிசியையும் துவரம் பருப்பையும் களைஞ்சு, ஒத்த அடுப்பில் மண் பானையில் கொதித்துக் கொண்டிருந்த உலையில் போட்டபடியே, ''ஏ, புள்ளகளா, அவரோர் கொண்டாந்த காய்களை வெட்டி இதோட போடுங்க ஆமா!''

''சரிக்கா...'' சந்தோஷமாய் ஆளாளுக்கு கோணல் மாணலாய் காய்களை வெட்டி அதில் போட ஆரம்பித்தனர்.

உரிச்ச வெங்காயம் பூண்டோடு, சிறிது சீரகம் வைத்து ஒன்றிரண்டாக அம்மியில் அரைச்சு அதை புளிக்கரைத்த தண்ணில போட்டபடியே, ''ஏலேய், இங்க பாருங்க நீங்க விட்டுபுட்ட சாமானையெல்லாம நானாக்கும் சரிகட்டியிருக்கேன்.''

''யக்கா.. வந்து பாரு காயைப் போட்டாச்சு!''

''எங்க பாப்போம்?'' என்று பானையில் கண் அகப்பையை விட்டு கிண்டியபடியே...

''ம்... அரை வேக்காடு வெந்தாச்சு'' என்றபடியே தான் அரைத்தவற்றை ஊற்றினாள்.

''ஏலே மாங்கா போட்டீகளா இல்லையா? வாசத்த காணும்...!''

''நான் சொன்னேன்ல இவன் பாதியத்தான் போட்டான். மிச்சத்தை டவுசருலதான் வச்சிருக்கான்.''

''அட சீ! களவாணிப் பயலே... கழுவி கொண்டாந்து போடு, உங்களுக்கு தான ஆக்குறேன்?'' வைதபடியே சிறிது உப்பு, மஞ்சள் தூள், மிளகாய்ப் பொடி போட்டுக் கிண்டினாள் பேச்சி.

கூட்டாஞ்சோறின் வாசனை அனைவர் நாவிலும் எச்சிலை ஊறவைத்தது.

''பேச்சிக்கா.. எப்ப சோறு ஆக்கி முடிப்ப?'' ஆசையாகக் கேட்டான் சுப்பு.

''பொறுடா, இத்தனை வேலை செஞ்சவுகளுக்கு இன்னும் கொஞ்ச நேரம் பொறுக்க முடியாது?''

**அ**ரைமணி நேரத்தில் கூட்டாஞ்சோறு சாப்பிடும் பதத்துக்கு வந்தது.

''ம்... போயி தோட்டத்துல வாழை லை பறிச்சுட்டு வாங்க.''

''நா... ஏ.. ஏ... நா போறேன்'' அடிச்சு பிடிச்சு ஓடினார்கள்.

சிறிது நேரத்தில் துண்டுகளாகக் கிழிக்கப்பட்ட வாழையிலையில் ஆளுக்கு ஓர் அகப்பை என ரொம்பச் சிக்கனமாய் வைத்தாள் பேச்சி.

''யக்கா இன்னும் கொஞ்சம்..''

''மொத வச்சத சாப்பிடு.''

**இ**வர்களது குச்சு பக்கமா வந்த பெரியாச்சி, ''ஏ, புள்ளகாடுகளா என்னத்த இப்டி மேயிறீக, வாசனை மூக்க துளைக்கு?''

சோறை ருசித்தபடியே, ''ம்ஹ்... நாம ஊட்டுல எத்தனை பக்குவமா செஞ்சாலும் இந்த புள்ளகளுக்காக செஞ்ச சோத்துக்கு ருசி அதிகம்தான்'' என சான்றிதழ் கொடுத்தபடியே வயக்காட்டை நோக்கி நடந்தாள் பெரியாச்சி. ●

# “முதல்லியே தெரிஞ்சிருந்தா!”

**நகைச்சுவை உணர்வோடு எளிமையாக, நிறைவாக வாழ்ந்தவர் அண்மையில் மறைந்த தென்கச்சி. கோ.சுவாமிநாதன். ஹியூமர் கிளப் இன்டர்நேஷனல் அண்மையில் அவருக்கு அஞ்சலி செலுத்தியது. சமூக இலக்கிய பிரபலங்கள் பலர் கலந்து கொண்டு அவரைப் பற்றிய, நிகழ்வுகளைப் பகிர்ந்துகொண்டனர்.**

கும்பகோணம் பாணாதுறையில் உள்ள பள்ளி யில் படித்தவர்கள் தென்கச்சி சுவாமிநாதனும், காத்தாடி ராமமூர்த்தியும். காத்தாடி இரண்டு வருட சீனியர். சிறு சிறு வேலைகள் தென்கச்சி சுவாமிநாதனுக்கு சொல்வாராம். இருவருமே தத்தம் துறையில் [பின்னாளில்] பிரபலமான பின்னர், காத்தாடி சொன்னார்.

''நீங்க இவ்வளவு பெரிய ஆளா வருவீங்கன்னு முதல்லியே தெரிஞ்சிருந்தா, அந்தச் சின்னச் சின்ன வேலைகளைச் சொல்லியிருக்க மாட்டேன்.''



காத்தாடி ராமமூர்த்தி

தென்கச்சி சுவாமிநாதன் தனக்கே உரிய பாணியில் சொன்ன பன்ச்!

''நீங்க இவ்வளவு பெரிய ஆளா வருவீங்கன்னு முதல்லியே தெரிஞ்சிருந்தா நீங்க சொன்ன வேலைகளை நான் செய்திருப்பேன்.''

கடைசியாக மருத்துவமனையில் இருந்தபோது, அவரது மனத்தை இலகுவாக மாற்ற அவருடன் உதவிபுரிய இருந்தவர், 'அசத்தப் போவது யாரு?' என்ற தொலைக்காட்சி நிகழ்ச்சியில் ஒரு பையன் 'இன்று ஒரு தகவல்' உங்கள் குரலிலேயே சொல்லி, கடைசியில் உங்களைப் போலவே குட்டி பன்ச் சொல்லியும் முடிக்கிறான்'' என்றார். அந்த நிலையிலும் தென்கச்சி சுவாமிநாதன், ''அந்தப் பையன் எனக்காக வந்து ஐ.சி.யூ.வில் படுத்துக் கொள்வானா விசாரி'' என்றாராம்.

**- முன்வர் சுல்தான்,**
**ஆதம்பாக்கம்**

அஞ்சலி

**விஜயலக்ஷ்மி**
**வெங்கடேசன், கொட்டிவாக்கம்.**

**உங்களுக்குப் பிடித்தமான கடவுள் யார்? (தயவுசெய்து எம்மதமும் சம்மதம் என்று சொல்லி விடாதீர்கள்...)**

அவர் ராஜா வீட்டுப் பிள்ளை யானாலும் ரொம்பவே சிம்பிள் சாமி! தம்பியோட இரண்டாவது



# ஆதவன் எப்படி?

கல்யாணத்துக்குக் கூட ஹெல்ப் செய்வார்; ஆனால் தான் மட்டும் வம்புத் தும்புல மாட்டிக்காத பெரியண்ணா! 'என்னடா... நம்ப குடும்பத்துல இருக்கிறவங்க மாதிரி நாம இல்லையே... வேற ஜாடையா இருக் கோமே'ங்கிற காம்ப்ளெக்ஸ் எல்லாம் இல்லாத தங்கமனசுக்காரன்.

முட்டுச்சந்து, அரச மரத்தடி எதுன்னாலும் 'ஆஹா'ன்னு இருந்துக்கும் தீராத விளையாட்டுப் பிள்ளை. சாணி, மஞ்சள், களிமண்ணுன்னு எதுல பிடிச்சு வெச்சாலும் பரமதிருப்தி ஆயிடும் ஜெண்டில்மேன்.

அருகம்புல்லைப் பறிச்சுப் போட்டால் கூட குஷியாகி விடும் முதல்வன். ஔவைப்பாட்டிக்கு தோஸ்த்தாகி விட்ட அழகிய தமிழ் மகன். என் இதயக்கனியான அந்த உலக நாயகன் யார்னு தெரிஞ்சுதோ?

**எம். லாவண்யா, திண்டிவனம்.**

***ஆதவன் எப்படி?***

பத்து வயசு சூர்யா டெக்னிக் கொஞ்சம் புதுசு தான்!

# அனுஷா நடராஜன்




**ஆர்.ராஜலக்ஷ்மி, ஹுப்ளி.**

**எப்போதும் சந்தோஷமாக இருக்க நினைக்கிறேன். அதற்கு என்ன வழி அனுஷா?**

நம்ப எல்லைக்கு உட்படாத வற்றைப் பற்றிக் கவலைப் படாமல் இருப்பதுதான்... எனக்குத் தெரிந்த ஒரே வழி!

**டி.சாந்தி அம்மையப்பன்.**

***மொய் - அன்பளிப்பு விஷயத்தில் அக்காவுக்கு ஏற்பட்ட சுவாரஸ்யமான அனுபவம் ஏதும் உண்டா?***

எங்க அக்கா திருமணத்தில் அன்பளிப்பாக ஒரு டஜன் மில்க் குக்கர்கள், ஒரு டஜன் நைட் லாம்ப்புகள், ஒரு டஜன் வால் கிளாக்குகள், வந்த கடுப்பில்... என் கல்யாண அழைப்பிதழில், "ப்ளீஸ் அவாய்ட் மில்க் குக்கர்ஸ்... நைட் லாம்ப்ஸ் அண்ட் வால் கிளாக்ஸ்' என்று போட்டு விட்டோம். வந்து குவிந்தன. ஒரு டஜன் கேஸட் ஸ்டாண்டுகள், ஒரு டஜன் ஜூஸ் செட்டுகள்!

**எஸ்.ராதா, பம்மல்.**

***படித்ததில் ரசித்தது?***

முயற்சியுள்ளவன், கதவுகளில் கைப்பிடிகளையும், சாவிகளையும் காண்கின்றான். சோம்பேறி யின் கண்களுக்கோ தாழ்ப்பாள்களும், பூட்டுகளுமே தென்படுகின்றன.

**ராதா பாலாஜி, செகந்திராபாத்.**

***மரணம் பற்றி நினைக்கும்போதெல்லாம் எனக்குப் பயமாக இருக்கிறது. உங்களுக்கு?***

"நீ பூமியில் பிறக்கும்முன்பே, உனக்காக உன் தாயின் மார்பிலே பாலைச் சுரக்க வைத்தவன் இறைவன். நீ இறந்த பின்னும் உனக்காக இன்னொரு உலகையே படைத்து வைத்திருக்கக் கூடும். அதனால் இறை நம்பிக்கையுடன் இரு!" இது அனுஷாநந்தாஜி அருளுரை அல்ல! தாகூரிடம் இரவல் வாங்கியது. தைரியமா இருங்க!

**வே.அருணாதேவி, வடமாதிமங்கலம்.**

***திருமணப் பத்திரிகைகளில் கடைசியில், 'தங்கள் வரவை எதிர்நோக்கும்' என்ற இடத்தில் 'சுற்றமும் நட்பும்' என்று போடாமல் 'வளவள' என்று ஒரு முழு***

***நீளப் பட்டியல் போடுகிறார்களே, தேவையா?***

அது வளவள லிஸ்ட் இல்லை! ரிமைன்டர் நோட்டீஸ்! கீழ்க்கண்ட நபர் களுக்கு, நாங்கள் நிறைய மொய் எழுதி அழுதிருக்கோம். அவர்களும் அதே போல ஞாபகமாய் மொய் எழுதி கடனைத் தீர்க்க வேண்டியது... என்றெல்லாம் எழுதினால் நல்லாவா இருக்கும்?

**எஸ்.விஜயராணி, ஒசூர்-2.**

***சமீபத்தில் பார்த்து ரசித்த டீ.வி. நிகழ்ச்சி என்ன?***

'அதிர்ந்த' என்று கேளுங்களேன்.. ஸ்டார் டீ.வி.யில் ஒளிபரப்பாகும் 'சச் கா ஸாம்னா' நிகழ்ச்சி. (உண்மைக்கு அருகில்!) இதில் பல முக்கியஸ்தர்கள் கலந்து கொண்டு, தங்களுடைய வாழ்க்கையைப் பற்றிய ஏடா கூடமான கேள்விகளுக்கு, குடும்பத்தினர் முன்பாக அமர்ந்து பதிலளிக்கின்றனர். உதாரணம்:

* உங்க மனைவிக்கு நீங்க துரோகம் செய்ததுண்டா?
* உங்கள் உறவினர் வீட்டில் திருடியதுண்டா?

லை-டிடெக்டர் உதவியுடன் பதில்கள் ஆராயப்படுகின்றன. இதில் பல குடும்பப்(!) பெண்கள் கலந்து கொண்டு கூசாமல் உண்மையை விளம்பி, பல லட்சப் பரிசுடன் நடை பயில, அவரது கணவர்கள் சிவந்த முகத்துடன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வெளியேறுவதைப் பார்க்க பரிதாபமாக இருந்தது!

**எஸ்.ஜானகி சுப்ரமணியன், திருப்பூர்-1.**

***வாழ்க்கையை ஒரு விபத்தாகவும் பார்க்கலாம். ஓர் அதிசயமாகவும் ரசிக்கலாம். நீங்க எப்படிப் பார்க்கறீங்க?***

அனுபவமாக!

**கே.பட்டு, குரோம்பேட்டை.**

***'சோ' என்று கொட்டும் மழைக்குச் சூடான பகோடா, சூடான பஜ்ஜி... உங்கள் சாய்ஸ் எது?***

மழைதான் என்னோட முதல் சாய்ஸ்! ஆனால் நீங்க... பகோடாவா, பஜ்ஜியா என்று கேட்பதால்... வெயிட்... கொஞ்சம் யோசிக் கிறேன். ஆ... பதில் கிடைத்து விட்டது. பொதுவாக, ரொம்பவே வெளிப்படை யானதை விட, சின்ன சஸ்பென்ஸ் மறைந் திருக்கும் விஷயங்களே நம்மைக் கவர்கின் றன என்பதால்... இலேசாக சோம்பும், பூண்டும் கலந்து அரைத்து விட்ட, 'புஸ்' என்று உப்பிய... உள்ளே இருப்பது சுருள் சுருள் வெங்காயமா, வட்ட வட்ட உருளைக் கிழங்கா என்ற மர்மம் பொதிந்த... பஜ்ஜிக்கே என் வோட்டு!






வெள்ளைச் சர்க்கரையை 'வைட்டமின் திருடன்' என் பார்கள். இது உடலிலுள்ள வைட்டமின் சத்துக் களை அழித்துவிடும். எனவே, குழந்தைகளுக்கு சர்க்கரை அள வைக் குறைத்தே கொடுக்க வேண்டும்.

**- பி. சுமித்ரா, சென்னை.**

# ‘‘நீயே என் குரு!’’

**பெ**ண்ணின்பமே பேரின்பம் என வாழ்ந்து கொண்டிருந்தார் ஒருவர். ஒருநாள் இரவு வேளை. மனைவியின் நினைவுடன் வீட்டுக்குச் செல்லும் போது பெருமழை பிடித்துக் கொண்டது. அந்தக் கடும் மழை யையும் பொருட்படுத்தாமல், மனம் முழு வதும் அவளது நினைப்போடு வீடு நோக்கி நடந்தார்.

வீட்டுக்குப் போக வேண்டுமானால், இடையிலுள்ள நதியைக் கடக்க வேண் டும். வழக்கமாக அங்கிருக்கும் ஓடக்காரன், ஆற்றில் வெள்ளம் வந்ததால் வீட்டுக்குப் போய் விட்டான். இவருக்கோ வீடு போய்ச் சேர மனம் துடித்தது. ஆற்றில் பாய்ந்தார். ஏதோ ஒன்று கையில் சிக்கியது. கட்டையாக இருக்க வேண்டும். அதைப் பற்றிக் கொண்டு கரை சேர்ந்து விட்டார்.

வீடு இருளில் மூழ்கிக் கிடந் தது. விளக்கை அணைத்து விட்டு, மனைவி உறங்கி விட் டாள் போலும். மழையின் சப் தத்தில் கதவைத் தட்டிய ஒலி, அவளுக்குக் கேட்கவில்லை. இவர் மாடி ஏறுவதற்காக, மாடி யிலிருந்து தொங்கிய கயிறைப் பிடித்து ஏறினார். ஒருவழியாக மனைவி தூங்கும் அறைக்குள் நுழைந்தார். திடுக்கிட்டு எழுந்த மனைவி, கணவன் அங்கே





யாராவது எதையாவது சொன்னா, அதுக்கு மாற்றுக் கருத்து இருந்தால்தான் விவாதம் சூடுபறக்கும். சிந்தனைகள் சிறக்கும். நீங்களும் கலந்துக்குங்களேன்..

# ஏட்டிக்குப் போட்டி!

## தொலைக்காட்சித் தொடர்கள்

## சீரியல் கில்லர்களா? சீரிய சிந்தனைகளா?



இந்தத் தலைப்பில் ஏதாவது ஒரு அணியின் சார்பாகத் தோன்றும் கருத்துகளைப் பத்து வரிகளுக்கு மிகாமல் அஞ்சலட்டையில் மட்டுமே தெளிவா எழுதி அனுப்புங்க.

**நடுவர் : திருப்பூர் கிருஷ்ணன்**

**கடைசித் தேதி : 15.11.09**

நிற்பது கண்டு, 'நீங்களா? இந்தக் கடும் மழையிலும் எப்படி வந்தீர்கள்?'' என்றாள்.

நடந்ததைச் சொன்ன கணவன், அவளது ஸ்பரிசத்திற்காகக் கடலையும் கடப்பேன் என்று மோகவெறியில் ஆசை மொழி பேசினான். அவள் வெளியே வந்து பார்த்தாள். ஆற்றங்கரையில் அவர் பிடித்து வந்த கட்டை கிடந்தது. அருகே சென்று பார்த்த போது, அது கட்டை இல்லை. ஆற்றில் அடித்து வரப்பட்ட பிணமென்பது தெரிய வந்தது. மாடிப்படி கயிறைப் பார்த்தாள். அது பாம்பு என்பது தெரியவந்தது.

''பார்த்தீரா... அழியும் என் உடல் மீது கொண்ட ஆசையில் என்னவெல்லாம் செய்திருக்கின்றீர் என்று! வெறும் சுகம் தரும் இந்த உடல் மீது பற்றுகொண்டிருப்பதை விட ராமநாமத்தின் மீது பற்றுக்கொண்டால் என்றும் நிரந்தர சுகம் தரும் வைகுண்டமே கிடைக்கும். பிணத்தையும், பாம்பையும் கட்டிக் கொண்டு சுகம் பெற வந்த உம் நிலையை நீரே ஆராய்ந்து பாரும்'' என்றாள்.

அவருக்குள் ஏதோ பொறி தட்டியது. கேவலம் ஒரு பெண்ணுக்காக இவ்வளவு கஷ்டப்பட்டிருக்க வேண்டுமா? அவள் சொன்னது சரிதான். மனைவி யென்றும் பாராமல் அவள் காலில் விழுந்து, ''நீயே என் குரு'' என்றார். உடனேயே எழுது கோலை எடுத்தார். ராமாயணத்தை இந்தியில் மொழி பெயர்த்து, 'ஸ்ரீராமசரித மானஸ' என்று பெயர் சூட்டினார். இவர் யார் தெரியுமா? துளசிதாஸர். துளசி ராமாயணம் எழுதிய மகாகவி!

**- வி.காவேரி,**
**செங்கல்பட்டு-2.**

வெயில் காலத்தில் அல்ட்ரா வயலட் கதிர்கள் எனப்படுகிற புறஊதாக் கதிர்களின் தீவிரம் அதிகமாக இருக்கும். குளிர்காலத்தில் அது குறைவதால் சருமத்திலும், கேசத்திலும் பெரிய மாற்றங்கள் உண்டாகின்றன. குளிர்காலத்திலும் சீரான அழகைத் தக்கவைத்துக் கொள்ள சில குறிப்புகளைப் பார்ப்போமா...

அழகுக் கலை நிபுணர் வசுந்தரா



# சீரான அழகின்

### சருமத்துக்கான ஸ்பெஷல் ட்ரீட்மென்ட்!

### வினிகர் ஸ்கின் டானிக்

ஒயிட் வினிகர்- 1 டீஸ்பூன்,
சுத்தமான தண்ணீர் - 4 டீஸ்பூன்,
கிராம்புத் தூள் - 1 சிட்டிகை

இந்த மூன்றையும் கலந்து, பஞ்சில் நனைத்து, முகத்தில் பூசவும். பெரிதான சருமத் துவாரங்களை சிறிதாக்கி, சருமப் பொலிவைக் கூட்டும். வாரம் இருமுறை இப்படிச் செய்யலாம்.

### குளிர்காலத்துக்கான க்ரீம்

பாதாம் எண்ணெய், தேங்காய் எண்ணெய், சூரியகாந்தி எண்ணெய், ஆலிவ் எண்ணெய் - தலா 1 டீஸ்பூன், பால் பவுடர் - 8 டீஸ்பூன்.

நான்குவித எண்ணெய்களையும் இலேசாகச் சூடாக்கவும். பால் பவுடரை அதனுடன் குழைத்து, முகம், மற்றும் கழுத்தில் தடவி மசாஜ் செய்யவும். மூன்று முதல் ஐந்து நிமிடங்கள் மேல் நோக்கி, மசாஜ் செய்ததும், பத்து நிமிடங்கள் ஊறவிடவும். பிறகு, வெதுவெதுப்

பான தண்ணீரில் கழுவவும். இது முக வறட்சியை நீக்கும். வாரம் இருமுறை செய்யலாம்.




### குளிர்காலத்துக்கான ஃபேஸ் பேக்

### காரட் - ஓட்ஸ் பேக்

ஓட்ஸ் - 4 டேபிள் ஸ்பூன், காரட் ஜூஸ்- 4 டீஸ்பூன், தண்ணீர் - 1/4 கப்.

தண்ணீரை நன்கு கொதிக்க வைத்து, அதில் ஓட்ஸை போட்டு, மேலும் சில நிமிடங்கள் கொதிக்கவைத்து, சூடு ஆறிய பிறகு காரட் ஜூஸை அதில் கலக்கவும். இதை முகத்தில் கண்களின் அடிப்பகுதி உட்படப் பரவலாகத் தடவவும். பத்து நிமிடங்கள் ஊறியதும், வெதுவெதுப்பான நீரில் முகம் கழுவிட, முகம் மிருதுவாகும்.

### குளிர்காலத்துக்கான பாத் வாட்டர்

புதினா இலை, துளசி, வேப்பிலை - தலா 1 கைப்பிடி, கல் உப்பு - 2 டீஸ்பூன்.

மேற்சொன்ன நான்கையும் கைகளால் கசக்கி, வெதுவெதுப்பான நீரில் போட்டு, பத்து நிமிடங்கள் ஊற விட்டு, பிறகு குளிக்கவும்.

# சீக்ரெட்!

குளிர்காலத்தில் சருமத்தில் உள்ள இறந்த செல்களை அகற்றவும், சருமத்தில் எந்தவிதமான தொற்றுகள் ஏற்படாமலும் பாதுகாக்கும்.

### குளிர்காலக் கூந்தல் பராமரிப்பு

**கூந்தல் வளர்ச்சி குறைந்து, பொடுகுத் தொல்லையும் உண்டாவதால் கூந்தல் பொலிவின்றி காணப்படும். குளிர்காலத்தில் தலையிலுள்ள சருமம் உலர்ந்து, அரிப்பும், முடிஉதிர்தலும் ஏற்படும்.**

★ இரண்டு டீஸ்பூன் கற்றாழை ஜெல்லியை, பொடுகு உள்ள இடங்களில் முதலில் தடவி, பத்து நிமிடங்கள் ஊறவிடவும். நான்கு டீஸ்பூன் ஆலிவ் எண்ணெயை மிதமாகச் சூடாக்கி, தலையில் படும்படி தடவி, இலேசான மசாஜ் செய்யவும். பொடுகை விரட்டும் ஆன்டிடேன்டிரஃப் ஷாம்பு அல்லது அரைத்த சீயக்காய் கொண்டு கூந்தலை அலசவும்.

முடி உதிர்வதைத் தடுக்க, தேங்காய்ப் பால் மிகவும் நல்லது. ஒரே ஒரு செம்பருத்திப் பூவை தண்ணீர் விட்டுக் கெட்டியாக அரைக்கவும். அத்துடன் ஒரு கப் தேங்காய்ப் பால், ஐந்து கிராம் மிளகுத் தூள், பத்து கிராம் வெந்தயப் பொடி கலந்து, முடியின் வேர்களில் தடவவும். அரைமணி நேரம் ஊறியதும், நிறைய தண்ணீர் விட்டு அலசவும். மறுநாள் காலையில் ஷாம்பு அல்லது சீயக்காய் தேய்த்துக் குளிக்கவும்.

# ரசிச்சு வாழுங்க!

அமெரிக்காவில் பொருளாதார வீழ்ச்சியால் ஏற்பட்ட பண நெருக்கடியின் காரணமாக வாழ்க்கையை வெறுத்து, தன் மனைவி, குழந்தைகள் எல்லாரையும் சுட்டுக்கொன்று விட்டு, தானும் தற்கொலை செய்து கொண்ட கார்த்திக் ராஜாராம் பற்றிய செய்தி எல்லாரையுமே ஒரு கலக்கு கலக்கிவிட்டது. இந்தச் செய்தி, புகைப்படங்களுடன் ''சான்ஃப்ரான்ஸிஸ்கோ க்ரானிகல்' என்ற நாளிதழில் விவரமாக அச்சிடப்பட்டிருந்தது.

அதேசமயத்தில் 'நியூயார்க் டைம்ஸ்' எனப்படும் பிரபல பத்திரிகையில், தெரஸா பிரவுன் என்ற நர்ஸ் ஒருவர் தன்னுடைய அனுபவத்தை எழுதியிருந்தார். மரணத் தறுவாயிலிருக்கும் நோயாளிகள் வாழ்வதற்கு எப்படித் துடிக்கிறார்கள் என்பதைப் பற்றி உருக்கமாக விவரித்திருந்தார்.

தெரஸா ப்ரவுன் அமெரிக்கா, பிட்ஸ்பர்க்கில், ஒரு பிரபலமான புற்றுநோய் மருத்துவமனையில் நர்ஸாக பணிபுரிகிறவர். அவருடைய பணி, நோயாளிகளுக்கு பணிவிடை செய்வது. ஆனால், அவரது விதி, தினமும் பல புற்றுநோயாளிகளின் மரணத்துக்கு சாட்சியாக இருப்பது.

நீண்ட நாட்கள், புற்றுநோயுடன் போராடி, மனநலம் உடல்நலம் எல்லாம் இழந்த நோயாளிகளுக்கு மரணம் வர வேற்பான ஒரு நல்ல முடிவாகிவிடுகிறது. எனவே, அவர்கள் மரணத்தை முழு மனத்துடன் வரவேற்கிறார்கள். அந்த நோயாளிகளுடன் உறவினர்களும் அந்த முடிவுக்குத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் சில சமயத்தில் குணமாகிக் கொண்டிருக்கும் நோயாளிகள், திடீரென்று, உடல்நிலை குன்றி இறந்து விடுகிறார்கள். அதுபோன்ற நோயாளி ஒருவரின் அனுபவத்தை நர்ஸ் தெரஸா, மிகவும் உருக்கமாக எழுதி இருக்கிறார்...

“என்னுடைய வார்டில் அட்மிட் ஆகியிருந்த ஒரு நோயாளி, நுரையீரல் புற்றுநோயால் அவதிப்பட்டு கொண்டிருந்தார். அவருக்குத் தரப்பட்ட சிகிச்சையில் நல்ல முன்னேற்றம் இருந்தது. அவரை டிஸ்சார்ஜ் செய்

# மதிச்சு வாழுங்க!

வதற்கு அரை மணி நேரத்துக்கு முன்னால், அவர் திடீரென்று இரத்த வாந்தி எடுக்க ஆரம்பித்தார். மூக்கிலிருந்தும், வாயி லிருந்தும் ரத்தப் பிரவாகம் ஓட ஆரம்பித்தது.

அவசர சிகிச்சை அளிக்கும் மருத்துவர்கள் வருவதற்கு முன்னால், என்னாலான முதலுதவிகளைச் செய்தேன். அப் போது அவரது கண்களில் மரண பயம், அதேசமயத்தில் தான் எப்படியாவது உயிர் பிழைக்க வேண்டும் என்ற வெறி, எப்படியாவது தன்னை எல்லோரும் காப்பாற்றி விடுவார்கள் என்ற மனோதைரியம் எல்லாவற்றையும் ஒருசேரக் கண் டேன். ஆனால் அவசர சிகிச்சை தரும் மருத்துவக் குழு வந்து நோயாளியைக் காப்பாற்ற எல்லாவித முயற்சிகளை செய்தும் அவர் இறந்துவிட்டார்.

அப்போது எனக்கு ஜான் டான் என்ற பிரபல கவிஞரு டைய கவிதைதான் எனக்கு நினைவுக்கு வந்தது. 'மரணமே! நீ மிகவும் ஆற்றலுடைய பலசாலி என்று செருக்குக் கொள்ள வேண்டாம்' என்று ஒரு கவிதையில் மரணத்தைக் கடிந்து கொண்டிருக்கிறார்.

**'ம**ரணம் மிகவும் பலசாலியும் இல்லை. மிகவும் சக்தி வாய்ந்ததும் இல்லை. மரணம் ஓர் இயற்கையான முடிவு. இந்த முடிவை எல்லாரும் ஸ்வீகரிக்க வேண்டும். அதற்காக மரணத்தைத் தானே வலிய வந்து தழுவிக் கொள்ளவேண் டும் என்ற அவசியமும் இல்லை. வாழ்க்கை என்பது மிகவும் புனிதமானது என்று உணருங்கள். அதை மதியுங்கள்' என்று சொல்பவர், நமக்கு சிறு புத்திமதியும் தருகிறார்.

வாழ்க்கையை சந்தோஷத்துடன் அனுபவிக்க வேண்டும். வீட்டுக்குச் செல்லுங்கள். குழந்தைகளை அரவணைத்துக் கொள்ளுங்கள். அவர்களை அதிகமாக நேசியுங்கள். காலை யில் எழுந்து சூரியோதயத்தைக் கண்டு மகிழுங்கள். மழை யில் நனைந்து, ஆனந்தம் அனுபவியுங்கள்.

வாழ்க்கையில் என்னவெல்லாம் செய்ய வேண்டும், அனுபவிக்க வேண்டும் என்று முடிவெடுத்திருந்தீர்களோ அதையெல்லாம் செய்ய முயற்சி செய்யுங்கள். ஏனென்றால் மரணத்துடன் போராடுவதற்கு மருந்து அவசியமில்லை. வாழ வேண்டும் என்ற உறுதிதான் அவசியம்.

- **இந்திரா சேஷாத்ரி,**
**மும்பை.**



**வாழ்வியல்**

 

# ரூ. 5,000 பரிசு ஆன்மிகப் போட்டி-9 பரிசுபெறும் அதிர்ஷ்டசாலிகள்!

1.எஸ்.கோமதி, கோயமுத்தூர்
2.மாலதி சந்தானகோபாலன், மயிலாடுதுறை
3.உமா சங்கரன், கொல்கத்தா
4.எச்.கோமதி, மதுரை-18.
5.ஆர்.ஜானகி, பெங்களூரு.
6.எம்.விசாலாக்ஷி, ஒசூர்.
7.அமுதா ரமேஷ், ஸ்ரீரங்கம்
8.தி.கீர்த்தனா, சென்னை-70
9. எஸ்.சாவித்திரி, தூத்துக்குடி
10.மு.மாரிலட்சுமி, தென்காசி.
11.ஜி.சுமேதாஸ்ரீ, மதுரை-20
12.நா.அலமேலு, நாமக்கல்
13.ஜி.மஞ்சுளா, வேலூர்
14.ராதா ராமலிங்கம், திருவண்ணாமலை
15.பி.ஜெயலக்ஷ்மி, திருச்செங்கோடு
16.பி.இந்திராணி பொன்னுரங்கன், அரூர்
17.எஸ்.ரேவதி, நாகர்கோயில்
18.கோமதி, கோபிசெட்டிபாளையம்
19.பி.மீனாட்சி, அம்பாசமுத்திரம்
20.ஆர்.கௌரி, வந்தவாசி

## அக்டோபர் 2009ல் வெளியான ஆன்மிகப் போட்டி-9 விடைகள்

1.சாமுண்டீஸ்வரி, 2.பீமன், 3. சுவாமிமலை, 4.அலகாபாத், 5. கற்பூரநாயகியே கனகவல்லி, 6.கண்ணப்பர், 7.விபீடணன், 8. சிவன்-பார்வதி, 9. பெரியாழ்வார், 10. விட்டலன்



''பெண்டாட்டி, கேட்டதைச் சமைச்சுப் போடறதுக்கும், அவ போட்டதைச் சாப்பிடறதுக்கும் என்ன வித்தியாசம்?''
''தெரியலே சார்.''
''கணவரின் ரிடையர்மெண்ட்தான்!''
- ராஜிராதா, பெங்களூரு.

## சிரி.. சிரி...

'' குழந்தைக்கு பேரு என்ன வெச்சிருக்கீங்க?''
'' முதல்ல பிறந்த பொண்ணுகளுக்குத் தங்கம், வைரம்னு பேர் வெச்சோம். இது ஆண் குழந்தை. தவமிருந்து பெத்ததால துவரம் பருப்புன்னு பேர் வெச்சிட்டோம்.
- என்.ராஜேஸ்வரி, பெங்களூரு.



ஆல் இன் ஒன்

# சமையல்!



குட்டி மழலைகளுக்கு மசித்துப் பிசைந்த ரச 'மம்மு'! ஜுரமா? கடச்கட ரசம் சாதம்! அஜீரணமா? இருக்கவே இருக்கிறது ஜீரண சக்தி வாய்ந்த ரசம் என்று நமக்கெல்லாம் 'சர்வம் ரச மயம்' அல்லவா? இம்முறை சீரக ரசம் ஒன்றை மைக்ரோவேவ் அவனில் செய்வோமா?



10

கீதா பாலகிருஷ்ணன்

## சீரக ரசம்

**தேவையானவை:**
புளி விழுது - 1 டீஸ்பூன்,
தக்காளி - 2,
ரசப்பொடி- 1 டீஸ்பூன்,
சீரகம் - 1 டீஸ்பூன்,.
கறுப்பு மிளகுத் தூள் - ¼ டீஸ்பூன்,
தனியாத் தூள்- 1 டீஸ்பூன்,
உப்பு - தேவையான அளவு,
கொத்துமல்லித் தழை - சிறிதளவு.

**தாளிக்க:**
எண்ணெய்/நெய் - 1டீஸ்பூன், கடுகு - ¼ டீஸ்பூன்,
மிளகாய் வற்றல் -2, பெருங்காயம் - 1 சிட்டிகை.








*செய்முறை:*

★ மைக்ரோ-ப்ரூஃப் கண்ணாடிப் பாத்திரத்தில் புளி விழுதை இரண்டு கப் தண்ணீர் ஊற்றிக் கரைக்கவும். அதனுடன் ரசப் பொடி, அரை டீஸ்பூன் சீரகம், உப்பு போட்டு ஹை பவரில் ஐந்து நிமிடங்கள் வைக்கவும்.

★ நறுக்கிய தக்காளி, மிளகுத் தூள், தனியாத் தூள் இவற்றைப் புளித் தண்ணீருடன் சேர்த்துக் கலக்கவும். ஹை பவரில் மூன்று நிமிடங்கள் வைக்கவும்.

★ இன்னொரு மைக்ரோ-ப்ரூஃப் கண்ணாடிப் பாத்திரத்தில் எண்ணெய் அல்லது நெய் ஊற்றி, கடுகு போட்டு மீடியம் ஹை பவரில் இரண்டு நிமிடங்கள் வைக்கவும். பிறகு மீதமுள்ள சீரகம், மிளகாய் வற்றல், பெருங்காயம் சேர்த்துக் கலந்து மீடியம் ஹை பவரில் மேலும் இரண்டு நிமிடங்கள் வைக்கவும்.

★ இந்தத் தாளிப்பை ரசத்துடன் போட்டுக் கலந்து நறுக்கிய கொத்து மல்லித் தழையைத் தூவவும்.

**பின்குறிப்பு:**

மைக்ரோவேவ் அவனில் திரவங்களை சூடுசெய்கையில் பாத்திரங்களைத் திறந்த நிலையில் உபயோகிக்கவும். பாத்திரத்தில் திரவங்கள் மூன்றில் ஒரு பங்கு அல்லது பாதி அளவுதான் நிரப்பப்பட்டிருக்க வேண்டும். இல்லாவிடில் திரவங்கள் பொங்கி வழியக்கூடும்.

கொதித்த திரவங்களை மைக்ரோவேவ் அவனில் இருந்து எடுத்தவுடன் சற்றுத் தள்ளி வைத்து, பிறகு உபயோகிக்கவும். ஏனெனில் திரவங்கள் வெளியே எடுத்து சில நிமிடங்கள் கழிந்த பின்னும் அவை கொதித்து, தெறிக்கக் கூடும்.

## 'ஆல் இன் ஒன்' காம்பினேஷன் சமையல்!

***ரசத்தை 'கமகம'க்க வைப்பதில் நாம் தயாரிக்கும் ரசப்பொடியிலும் பங்கு இருப்பதால், ரசப்பொடி செய்யும் முறையைப் பார்த்துவிட்டு, 'ரசமான' காம்பினேஷன்கள் போடுவோமா?***

**ரசப்பொடி**

**தேவையான பொருள்கள் :**

விரலி மஞ்சள் - 50 கிராம், தனியா - 400 கிராம், மிளகாய் வற்றல் - 250 கிராம், துவரம் பருப்பு - 250 கிராம், மிளகு - 50 கிராம், சீரகம் - 100 கிராம்.

இவற்றை வெயிலில் நன்றாகக் காய வைத்து நைஸாக அரைத்து, காற்றுப்புகாத டப்பாக்களில் வைத்துக் கொள்ளவும்.

**கமகம + ருசி ரசத்துக்கு பின்பற்ற வேண்டிய Thumb Rules**

★ ரசத்துக்காக உபயோகிக்கும் புளியானது, புதுப்புளியாக இருந்தால் ரசம் ருசியாக இருக்கும். புளி கரைத்து, வடி கட்டிய நீர், ரசப்பொடி, உப்பு, சீரகம் சேர்த்துப் புளி மற்றும் ரசப்பொடி நெடி அடங்க கொதிக்கவிடுவது 'மஸ்ட்' ரூல்! ரசத்தை நுரைத்துப் பொங்கவிட்டு இறக்குகையில்.



தாளித்தால் கமகம ரசம் ருசியைக் கூட்டும். பரிமாறுவதற்கு முன்பாக ரசத்தில் கொத்துமல்லித் தழையைத் தூவவும்.



**'ரசமான' காம்பினேஷன் குறிப்புகள்**

**திடீர் ரசம்:**

ரெடிமேட் புளி பேஸ்ட்டை நீரில் கரைத்து ரசப்பொடி, உப்பு, பெருங்காயத்துடன் சேர்த்துக் கொதிக்கவிடவும். ரெடிமேட் டொமேட்டோ ப்யூரி, தனியாத் தூள், மிளகு-சீரகப் பொடி போட்டு, கொதிக்கவிட்டு நுரைத்துப் பொங்கும் போது இறக்கினால் ஐந்தே நிமிடங்களில் திடீர் ரசம் தயார்!

**டின்னருக்கு ஸ்பெஷல் காலிஃபிளவர்/பைன் ஆப்பிள் ரசம்:**

பைன் ஆப்பிள் துண்டுகளைச் சிறிது தண்ணீர் சேர்த்து, மிக்ஸியில் அரைத்து வைத்துக் கொள்ளவும். ரசம் நுரைத்துப் பொங்கும்போது பைன் ஆப்பிள் விழுதைச் சேர்த்து ஒரு நிமிடம் கொதிக்கவிட்டு இறக்கினால் வேறுபட்ட சுவையுடன் பைன் ஆப்பிள் ரசம் தயார். இதே போல் காலிஃபிளவர் பூக்களை தக்காளிப் பழத் துண்டுகள் சேர்க்கையில் சேர்த்தால் காலிஃபிளவர் ரசமும் தயார்!

**மருத்துவக் குணமுள்ள** (Value Added) **ரசங்கள்:**

**பூண்டு ரசம் :**

பொடியாக நறுக்கிய மலைப் பூண்டுப் பற்களை நெய்யில் தாளித்துக் கொள்ளவும். தக்காளியுடன் ரசத்தில் போட்டுக் கொதிக்கவிடவும். கெட்ட கொழுப்பைக் குறைத்து, செரிமானத் தன்மையை அதிகரிக்கும் பூண்டு ரசம் கமகமக்கும்.

**இஞ்சி-எலுமிச்சைப் பழம் ரசம்:**

புளி சேர்க்காமல், தக்காளி + மஞ்சள் தூள் + உப்பு சேர்த்துக் கொதிக்கவிடவும். பருப்பு நீரைச் சேர்த்து எண்ணெயில் கடுகு, பச்சை மிளகாய், சீரகம், இஞ்சி விழுது தாளித்து கொதிக்கவிடவும். நுரைத்துப் பொங்கியவுடன் இறக்கி, எலுமிச்சைச் சாறு பிழிந்து கறிவேப்பிலை சேர்க்கவும். வயிறு உபாதையை சரியாக்கும் வைட்டமின் சி ரிச் இஞ்சி - எலுமிச்சை ரசம் ரெடி!

**கொள்ளு ரசம் :**

கொள்ளை எட்டு மணி நேரம் ஊறவைத்து, குழைய வேகவைக்கவும். பருப்பு நீருடன் ரசத்தில் சேர்த்துச் செய்தால், கொள்ளு ரசம் வலிமையான ஹார்ஸ் பவரை நமக்குத் தரும்.

**கண்டந்திப்பிலி ரசம்:**

மிதமான தீயில் வெறும் வாணலியில் கண்டந்திப்பிலி வறுத்து, பொரித்த மிளகு, சீரகம், வறுத்த துவரம் பருப்பு, பெருங்காயம் சேர்த்து மிக்ஸியில் பொடிக்கவும். ஒரு துண்டு வெல்லத்துடன் ரசத்தில் கொதிக்கவிட்டால் உடல் அயர்ச்சி போக்கும் கண்டந்திப்பிலி ரசம் ரெடி!

**வேப்பம்பூ ரசம்:**

நார்மல் தாளிப்புடன் ரசத்தைச் செய்து இறக்கவும். காய்ந்த நெய்யில் வேப்பம் பூவைப் போட்டு, நன்றாகப் பொரிந்தவுடன் (கருகாமல் இருப்பது அவசியம்). அதை ரசத்தில் போட்டு மூடிவைக்கவும். பத்து நிமிடங்கள் கழித்துப் பரிமாறினால் வேப்பம்பூ ரசம் கமகமக்கும்.

(தொடர்ந்து கலக்குவோம்)

**B**aa Baa, Black Sheep,

Have you any wool?

மிகப் பிரபலமான நர்சரி பாடல் இது என்பது எல்லோருக்கும் தெரியும். இதன் அர்த்தம் என்ன தெரியுமா?

நமது வருமானத்தில் மூன்றில் ஒரு பாகம் அரசாங்கத்துக்கு (அதாவது one for my master) ஒரு பாகம் குடும்பத்திற்காக மனைவியிடம் கொடுப்பது (one for my dame) மூன்றாவது பாகம் தர்மகாரியங்களுக்கு (one for the little boy who lives down the lane.)



# இதுதான் குழந்தைகளின்

குழந்தைகளுக்கு சிறுவயதிலேயே கற்பிக்க வேண்டிய விஷயம், எத்தனை அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

Early to bed

And early to rise

Is the way to be

Healthy wealthy and wise!

குழந்தைகள், விடியற்காலை விழித்தெழ வேண்டும். இரவு சீக்கிரமாகப் படுக்கைக்குச் செல்ல வேண்டுமென்ற நல்ல கருத்தை இப்பாடல் கூறுகிறது.

One two buckle my shoe

Three four shut the door

எண்களை மிகச் சுலபமாகச் சொல்லிக் கொடுக்கும் பாடல்.

இதுபோன்ற நல்ல கருத்துக்களைச் சொல்லும் பாடல்களுடன் கீழ்க்கண்ட சில பாடல்களும் உள்ளன.

Rain rain go away

Come again another day

மழையே சென்று வேறொரு நாள் வா

குழந்தை ஜானி விளையாட வேண்டும்

மழையே மழையே ஸ்பெயின் நாட்டிற்குச் செல்

மீண்டும் உன் முகத்தை இங்கே காட்டாதே!















நமக்குத்தான் வருடம் முழுவதும் தண்ணீர்ப் பஞ்சமாக இருக்கிறதே. 'மழையைப் போ' என்று சொல்வதற்கு குழந்தைகளுக்குக் கற்றுத் தருவது தவறு இல்லையா?

தமிழில் ஒரு மழைப்பாட்டு இருக்கிறது

மழையே மழையே வா வா
உழவர் உன்னைக் காணாமல்
உள்ளம் வருந்தி நிற்கின்றார்...

மழை வராமல் ஏற்படும் பஞ்சத்தினால் உழவர்கள் தற்கொலை செய்து கொள்வது ஆங்கிலேயர்களுக்கு என்ன தெரியும்?

# பாடலா?

Jack and Jill
Went up the hill
To fetch a pail of water'

என்றொரு பாடல்.

ஜாக் மற்றும் ஜில் இருவரும் தண்ணீர் கொண்டு வருவதற்கு, குன்றின் மேல் ஏறிப் போகும்போது ஜாக், கீழே விழுந்து அடிபட்டு, ஜில் தடுமாறி பின்னால் வருகிறாள்.

ஏன் ஜாக், ஜில் இருவரும் குன்றின் மேல் ஏறி கீழே விழாமல் தண்ணீர் கொண்டு வரக் கூடாதா? ஒருவேளை அஜாக்கிரதையாக இருந்தால் இப்படித்தான் நேரும் என்று கூற வருகிறார்களோ?

Humpty dumpty
Sat on a wall
Humpty dumpty
Had a great fall;

ஹம்ப்டி டம்ப்டி அஜாக்கிரதையினால் சுவர் மேலிருந்து கீழே விழுந்து உடைந்து போகிறார். ராஜாவின் குதிரைகளும் மற்ற வீரர்களும் மீண்டும் அவரை, ஒன்றுசேர்க்க முடிய வில்லை.

குதிரைகள் எப்படி ஹம்ப்டி டம்ப்டியை ஒன்றுசேர்க்க முடியும்?






இன்னொரு ஆங்கிலப் பாடல் நர்சரியில் கற்பிக்கப்படுகிறது.

There was an old woman
Who lived in a shoe;
She had so many children
She didn't know what to do.
She gave them some broth
Without any bread
Then whipped them all soundly
And sent them to bed.

ஒரு வயதான பெண்மணிக்கு நிறைய குழந்தைகள். என்ன செய்வதென்று தெரியவில்லை. அவர்கள் பசியைப் போக்குவதற்கு, அவள் அவர்களுக்கு ரொட்டி மட்டும் கொடுத்து சவுக்கால் நன்றாக அடித்துத் தூங்க வைக்கிறாள்.

ஒரு தாய் இவ்வளவு கொடூரமானவளா? ஒருவேளை அளவோடு பிள்ளைகள் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதைத் தான் இத்தனை கொடூரமாகச் சொல்கிறார்களோ?

**குழந்தைகள், உறவினர்களைத் தெளிவாக அவர்களது உறவு முறையைக்கூறி அழைக்கப் பழக்க வேண்டும். எல்லோரையும் 'அங்கிள்', 'ஆன்ட்டி' என்று ஆங்கிலத்தில் அழைப்பதை விட, மாமா, மாமி, அத்தை, பெரியப்பா என அழைப்பது நெருக்கமான உறவை ஏற்படுத்தும்.**

**- எல்.மோஹனசுந்தரி, கிருஷ்ணகிரி-1.**



சும்மா எதுகை மோனை வரவேண்டும் என்பதற்காக எழுதப்பட்ட இன்னொரு குழந்தைப் பாடல் இது!

Rock-A-Bye, baby,
On the tree top,
When the wind blows
The cradle will rock
When the bough breaks
The cradle will fall
Down will come baby
And cradle and all.

மரக்கிளையில் கட்டப்பட்ட தொட்டிலில் குழந்தை, படுத்துக் கொண்டிருக்கிறது. காற்றடிக்கும் போது தொட்டில் ஆடுகிறது. கிளை ஒடிந்து விட்டால் குழந்தையுடன் சேர்ந்து தொட்டிலும் கீழே விழும்.

ஏன் கிளை ஒடிய வேண்டும், ஏன் குழந்தை கீழே விழ வேண்டும்?

Three blind mice
See how they run
They all ran after the farmer's wife
She cut off their tails with a carving knife
Did you ever see such a sight in your life?

மூன்று குருட்டு சுண்டெலிகள் ஒரு விவசாயியின் மனைவி பின்னால் ஓடிக் கொண்டிருப்பதைப் பார். அவள் சுண்டெலிகளின் வால்களைக் கத்தியால் வெட்டி விட்டாள்.

இதுபோன்ற காட்சியை நீங்கள் இது வரை பார்த்ததுண்டா?

இது குழந்தைகளின் கவிதையா? இதன் மூலம் என்ன சொல்ல வருகிறார்கள்?

இந்த நர்சரி பாடல்களை நான் படித்து, என் குழந்தைகள் படித்து இப்போது என் பேரன் பேத்திகளும், படித்துக் கொண்டிருக்கின்றனர்.

**- கலாமூர்த்தி, சென்னை.**





# கனத்துக் கொண்டே போகும் கல் கருடன்!

கும்பகோணத்திலிருந்து ஆறு மைல் தூரத்தில் திருநறையூர் உள்ளது.

திருநறையூர் நம்பி, ஸ்ரீநிவாஸன், வாஸுதேவன் என்ற பெயர்களுடன் நின்ற திருக்கோலத்தில் தாயாரை மணம்புரிந்தார். வஞ்சுளவல்லித் தாயாருக்கு நம்பிக்கை நாச்சியார் என்ற பெயர். இங்கு பெருமாளு டைய, கல் கருடவாகன சேவை பெயர் பெற்றது.

கருட வாகனத்தை சன்னிதியில் முதலில் நான்கு பேர்களும் கோயில் வாசலின் முடிவில் அறுபத்து நான்கு பேர்களும் எழுந்தருளச் செய்யும்வகையில், கருடவாகனம் சிறுகச் சிறுகக் கனத்து விடும். இந்த கல் கருட னுக்கு தனி சன்னிதி யுண்டு. இந்த ஊரில் நாச்சியாருக்கே முதல் இடம்.

பெருமாள் கல் கருடன் மீதும், தாயார் அன்னவாகனத்திலும், வீதிஉலா வரு வதுண்டு. இந்தக் கண்கொள்ளாக்காட் சியை அனைவரும் தரிசனம் செய்ய வேண்டும். வருடத்தில் இரண்டு முறை கல் கருட சேவை விமரிசையாக நடக்கிறது.

பெருமாளுக்கு நவரத்னக் கலசம் என்ற ஒரு வகை இனிப்பு நிவேதனம் செய் யப்படுகிறது. நம் மனத்தில் எதைப் பிரார்த்தித்துக் கொண்டாலும் கருடன் நடத்தி வைப்பான் என்பது நம்பிக்கை. திருமணத்தடை, குழந்தையின்மை, வேலை யின்மை இப்படிப் பல பிரச்னைகளைத் தீர்த்து, நறையூர் நம்பி துணைபுரிகிறார்.

– கோமளா நாராயணன்,
சென்னை–78.



புளிப்புச் சுவை கொண்ட உணவுப் பொருள்களை அதிகம் உண்பது சருமம் மற்றும் தலைமுடிக்கு பாதிப்பை ஏற் படுத்தும்.

- எச்.எஸ்.லக்ஷ்மி, கொல்லம்.



பேராசிரியர்.இல.கோமதி

# சிவமே சித்தமென்ற

பச்சரிசி, பாசிப் பருப்பு, பாகு வெல்லம், பசு நெய், கற்கண்டு, ஏலக்காய் சேர்த்துப் பக்குவமாகச் சமைக்கப்பட்ட சர்க்கரைப் பொங்கல். பார்க்கும்போதே நாக்கில் நீர் ஊறுகிறது. அந்தப் பொங்கல் எவ்வளவு நேரம் வெள்ளிப் பாத்திரத்தில் இருந்தாலும், அதன் சுவையை அந்தப் பாத்திரம் உணர முடியாது. அது போல நம்முடைய மனதிற்குள்ளேயே இருக்கும் இறைவனை, நாம் உணராது ஒவ்வொரு கோயிலாகத் தேடிச் சென்று அலைவதால் என்ன பயன்?

''நட்ட கல்லைத் தெய்வம் என்று நாலு புஷ்பம் சாத்தியே
சுற்றி வந்து முணமுணென்று சொல்லு மந்திரம் ஏதடா?
நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?''

இருபதாம் நூற்றாண்டின் பகுத்தறிவுப் பகலவன், தந்தை பெரியாரின் சிந்தனையைப் போலவே ஒலிக்கிறது சித்தர் சிவவாக்கியரின் இந்தக் கேள்வி! இந்தப் பாடலைப் படித்தவுடன் சித்தர்கள், கோயில் வழிபாட்டுக்கு எதிரானவர்களோ? என்ற சந்தேகம் வரக்கூடும். அப்படியென்றால் ஆலயங்கள் தோறும் சித்தர்கள், அடக்கமாகி உள்ளதன் சூட்சுமம் என்ன? என்ற எண்ணம் உங்கள் மனத்தில் தோன்றக் கூடும்.

சித்தர்கள், உருவ வழிபாட்டை எதிர்க்கவில்லை. மனத்தில் பக்தி

உணர்வு இல்லாமல் வெறும் சமயச் சடங்குகளையும், சாஸ்திர சம்பிரதாயங்களையும் மட்டும் செய்தால் அது முழுமை பெற்ற கடவுள் வழிபாடு ஆகாது என்பதே சித்தர்களின் இறைமைக் கொள்கை.



**சி**வவாக்கியரைப் பற்றி செவி வழிக் கதை ஒன்று உண்டு. அந்தணர் குலத்தில் பிறந்த சிவவாக்கியர், காசி யாத்திரை புறப்பட்டுச் சென்றார். காசி நகரத்தில் ஒரு ஞானியைச் சந்தித்து, ''ஐயா! நான் உங்களிடம் ஒரு விஷயம் கேட்க வேண்டும்'' என்றார். அந்த ஞானி ஒன்றும் பேசவில்லை. இரண்டு நாழி நிறைய மண்ணும், படுசுரைக்காய் ஒன்றையும் சிவவாக்கியர் கையில் கொடுத்துவிட்டு, ''எந்தப் பெண் உனக்கு இதை வைத்துச் சுவையாக சமைத்துத் தருகிறாளோ அவளை நீ மணந்து கொள்'' என்று கூறினார். தான் திருமணம் செய்து கொள்ள ஒரு வினாடி சலனம் கொண்டதை இந்த ஞானி எப்படித் தெரிந்து கொண்டார் என்று வியந்தபடியே சிவவாக்கியர், அவற்றைப் பெற்றுக் கொண்டு திரும்பினார்.

வழியெங்கிலும் ஊர்கள்தோறும் தான் பார்த்த பெண்களிடம், ''இதனை வைத்து சமைக்க முடியுமா?'' என்று கேட்டார். மணலைச் சமைப்பதா, இவருக்கு சித்தப்பிரமையோ என்று அனைவரும் இவரை விட்டு ஒதுங்கினர்; இகழ்ந்து பேசினர்.

கடைசியாக ஓர் ஊருக்குச் சென்ற சிவவாக்கியர், அந்த ஊரில் தாழ்ந்த குலத்தவர்கள் வாழும் பகுதிக்குச் சென்றார். அங்கே ஓர் இளம்பெண் மட்டும் இருந்தாள். அவளிடமும் சிவவாக்கியர் இதே கேள்வியைக் கேட்க, அந்தப் பெண் பதிலேதும் பேசாமல் அவற்றை வாங்கிக் கொண்டு போய் அடுப்பிலிட்டுச் சமைத்தாள். என்ன ஆச்சரியம்! மணல் அரிசியாகியது. படுசுரைச்

## சிலிர்க்க வைக்கும் சித்தர் வரலாறு 10

# சிவவாக்கியர்!



காய் சுவை மிகுந்த கறியாகியது.

சிவவாக்கியர், அதனைச் சாப்பிட்டு விட்டுப் பின்னர் அந்தப் பெண்ணையே மணந்து கொண்டார். சிறிது காலம் அவர்களுடனேயே தங்கியிருந்து, அவர்களுடைய குலத்தொழிலான மரம் வெட்டும் தொழிலையும் செய்து வந்தார்.

ஒரு நாள் காட்டில் மரம் வெட்டிக் கொண்டிருந்தபோது, வெட்டிய ஒரு மரத்திலிருந்து பொன் மணிகள் உதிர்ந்தன. அவற்றைப் பார்த்தபோதும், சிவவாக்கியரின் மனத்தில் அவை தனக்குச் சொந்தம் என்ற எண்ணம் வரவில்லை. கோடாலியை அப்படியே கீழே போட்டு விட்டு மௌனத்தில் ஆழ்ந்தார். பின்னர் தன் நிலை உணர்ந்து அவ்விடம் விட்டு அகன்றார்.

சித்தம் தெளிந்த சித்தராயிருந்தும் ஒரு பூர்வஜென்ம இச்சையினால் இந்த வினை நிகழ்ந்தது போலும் என்ற கருத்து இந்தக் கதையின் வழி தெரியவருகிறது.

சிவவாக்கியர் பல ஆண்டுகள் தவம் செய்து, யோக மார்க்கத்தில் ஈடுபட்டு அஷ்டமா சித்திகளும் கைவரப்பெற்றார். சித்தர்களில் அதிகமான எண்ணிக்கையில் பாடல்களைப் பாடியவர் இவரே. மூடப் பழக்க வழக்கங்கள், சாதி மத வேறுபாடு ஆகியவற்றை எதிர்த்து இவர் பாடிய பாடல்கள் ஏராளம். சாதி மதப் பிரிவுகளை அழகான ஓர் எடுத்துக்காட்டால் அருமையாக விளக்குகிறார்.

தங்கத்தைக் கொண்டு விதவிதமான ஆபரணங்கள் செய்கிறீர்கள். தோடு, தொங்கட்டான் என்று காதில் அணிந்து கொள்பவை பல. கழுத்தில், இடையில், விரல்களில் என்று பல்வேறு அமைப்புடைய ஆபரணங்களை அணிந்து கொள்கிறீர்கள். இவை எல்லாமே அமைப்பில்,

சிவவாக்கியச் சித்தரின் இயற்பெயரும் வாழ்க்கை வரலாறும் முழுமையான ஆதாரங்களுடன் நமக்குக் கிடைக்கவில்லை. இவர் வேதியர் குலத்தில் பிறந்தார். பிறக்கும் போது 'சிவ சிவ' என்று சொல்லிக் கொண்டு பிறந்ததால், சிவவாக்கியர் என்ற பெயரைப் பெற்றார் என்கிறது ஒரு தகவல். இவர் பிறக்கும் போது சிவாய என்னும் வாக்கியம் ஒலித்ததால், சிவவாக்கியர் என்று அழைக்கப்பட்டார் என்பது மற்றொரு செய்தி. இவர் இயற்றிய நூலுக்கு, சிவவாக்கியம் என்று பெயர். அந்த நூலின் பெயரை ஒட்டியே சிவவாக்கியர் என்ற பெயர் நிலைத்து விட்டது என்ற விளக்கமும் கிடைக்கிறது. இவருடைய பாடல்களில் ஏறக்குறைய ஐம்பது இடங்களில் 'சிவாய' என்னும் சொல் காணப்படுகிறது.

இராமநாமத்தையும் திருமாலையும் பல இடங்களில் இவர் பாடியுள்ளார். திருமாலும் சிவனும் ஒன்றுதான் என்னும் கருத்து இவர் பாடல்களிலிருந்து நமக்குக் கிடைக்கிறது. வைணவ சமயத்து பன்னிரெண்டு ஆழ்வார்களில் திருமழிசையாழ்வார் இவரே என்பது ஒரு கருத்து. வைணவராயிருந்து, பின்னர் இறைவன் ஒருவனே என்று உணர்ந்து சித்தராகி, சிவவாக்கியர் என்ற பெயரினைப் பெற்றார் என்னும் வரலாறும் நமக்குக் கிடைக்கிறது.

வடிவத்தில் வேறுபட்டவையே தவிர, இவை அனைத்திற்கும் உட்பொருள் தங்கம் ஒன்றேதான்.

இதைப் போலத்தான் மனிதனும்; நிறத்திலும், உருவத்திலும், பழக்கவழக்கத்திலும், நாகரிகத்திலும், குணத்திலும் மனிதர்கள் வேறுபடலாம். ஆனால் மனித உடல் என்பது பஞ்சபூதங்களால் ஆனது. எலும்பு, நரம்பு, குருதி, தசை ஆகியவற்றால் ஒரே மாதிரியாகத்தான் உருவானது. இப்படி இருக்கையில் சாதிமதப் பிரிவுகள் எங்கேயிருந்து வந்தன? எப்படி வந்தன? மனிதனால் உருவாக்கப்பட்டதே இந்த சாதிப் பிரிவுகள். இதைச் சமுதாயத்தில் இருந்து அகற்றி விட வேண்டும் என்று முனைப்புடன் செயல்பட்ட சித்தர்களில் சிவவாக்கியர், தலைமையிடம் பெறுகிறார். புரட்சிகரமான கருத்துக்களைப் பாடியதால் சிவவாக்கியர் பாடல்களில் சொற்கள் கடுமையாக, சமுதாயத்தின் மீது விழுந்த சாட்டையடிகளாக வெளிப்பட்டன.



சிவபெருமானின் நமசிவாய, சிவாய நம என்னும் திருவைந்தெழுத்து மந்திரத்தையும், அதனை உச்சாடனம் செய்யும் முறைகளையும், அதனால் ஏற்படக்கூடிய நன்மைகளையும், தெளிவாகத் தம் பாடல்களில் விளக்குகிறார் சிவவாக்கியர். நமசிவாய என்னும் ஐந்தெழுத்து மந்திரம் ஒன்றே அந்த நமசிவாயத்தை நமக்கு உணர்த்தும் என்பது சிவவாக்கியச் சித்தரின் கருத்து.

முன்காலத்தில், காவிரி ஆற்றின் தெற்குக் கரையோரம் திருக்குடமூக்கு என்னும் பெயர் கொண்ட ஓர் ஊர் இருந்தது. குடம் என்றால் கலசம் என்று அர்த்தம். காவிரி ஆற்றில், அமுதம் நிரம்பிய கலசம் ஒன்று மிதந்து வந்ததாம். சிவபெருமான், வேடர் வடிவத்தில் அங்கு தோன்றி தன்னுடைய அம்பினால், கலசத்தில் ஒரு துளையிட்டாராம்.

அமுதம் அந்தத் துளை வழியே எல்லா இடங்களிலும் பரவியதாம். அப்போது வீசிய பலத்த காற்றினால் கலசத்தில் இருந்த மாவிலை, தர்ப்பை, வில்வ இலைகள், தேங்காய், கலசத்தைச் சுற்றிய முப்புரி நூல் ஆகியவை பல்வேறு இடங்களில் விழுந்தன. அவை விழுந்த இடங்கள் ஒவ்வொன்றிலும் சிவலிங்கங்கள் தோன்றின.

பிற்காலத்தில் அங்கே சிவன் கோயில்கள் உருவாயின. இந்த திருக்குடமூக்கு என்னும் தலமே தற்போது கும்பகோணம் என்ற பெயர் பெறுகிறது. நம் நாட்டில் உள்ள 64 சக்திபீட ஸ்தலங்களில் கும்பகோணமும் ஒன்று. இங்குதான் சிவவாக்கியச் சித்தர் சமாதி நிலையை எய்தியதாகச் சொல்லப்படுகிறது.

**(சித்தர் நெறி தொடரும்)**

# ஆஃப்டர் ஆல்

வருடாந்திரக் கணக்கெடுப்பு சமயம் மேனேஜர் ரத்னசபாபதி, பிஸியாக இருந்தபோது செக்ஷன் ஆஃபீஸர் தனஞ்ஜெயன் ஒரு ஃபைலைக் கொண்டு வந்து மேனேஜரிடம் நீட்டினார்.

''சார், பி.ஆர்.ஓ. போஸ்டிங் ஒண்ணு நம்ம ஆஃபீஸ்ல ரொம்ப நாளா நிரப்பப்படாம இருக்கு. பத்மப்ரியா, அந்த இடத்துக்கு பிரமோஷன் கேட்டு அப்ளிகேஷன் போட்டிருக்காங்க!''

''எந்த பத்மப்ரியா?'' என்றார் மேனேஜர்.

''மந்தவெளி பிராஞ்சுல டெஸ்பாட்ச் கிளர்க்கா இருக்காங்களே அவங்க சார்.''

''இங்கப் பாரு தனஞ்ஜெயன். அவங்களைக் கொண்டாந்து அந்த சீட்ல போட்டா சரிபட்டு வராது.''

''ஏன் சார்?''

''பொம்பளைங்ககிட்ட எந்த வேலை யும் பொறுப்பா ஒப்படைக்க முடியாது. வளவளன்னு சுண்டதைப் பேசி நேரத்தை வீணாக்கிடுவாங்க.''

தனஞ்ஜெயன் அதற்கு மேல் ஏதும் பேச விரும்பாமல், இருக்கைக்குச் சென்றார்.

இன்ஸ்பெக்ஷன் தினத்தன்று ரத்ன சபாபதி, கம்பெனி சம்பந்தப்பட்ட அத்தனை விவரங்களையும் அட்சர சுத்தமாய், செக்ஷன் வாரியாய் தயார் நிலையில் வைத்திருந்தார்.

ஆனால், இன்ஸ்பெக்ஷனுக்கு வந்த அதிகாரியைத்தான் அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. கல்கத்தாவிலிருந்து ஷீலா குல்கர்னி, என்னும் பெண் அதிகாரி ஒருத்தி வந்திருந்தாள்.

அவருக்குத் தெரிந்ததெல்லாம் வருடந்தோறும் வந்து போகும் வெங்கட சுப்பைய்யாவைத்தான். சஃபாரி சூட்டில் மிடுக்காக வந்து செல்வார். அவருக்கு வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் ரத்ன சபாபதி கவனித்துக் கொள்வார். ஒரு நாள் முழுக்க



சென்னையிலேயே தங்கியிருந்து, தமது வருகையை அமர்க்களப்படுத்தி விட்டுப் போவார். ஆனால், இப்போது அதற்கெல்லாம் வாய்ப்பே இல்லாதபடிக்கு

# ஒரு பெண்!

○ பவானி மனோகர் ○

இளமை ததும்ப, முப்பத்தைந்தே வயது நிரம்பிய ஷீலா குல்கர்னியைப் பார்த்த போது அவருக்குப் பெருத்த ஏமாற்றமாக இருந்தது.

''ஹாய்! உங்கள் எல்லோரையும் இங்கு சந்திப்பதில் பெருமகிழ்ச்சியடைகிறேன். நான் கல்கத்தாவிலிருந்து வந்திருக்கும் ஒரு எக்ஸிக்யூட்டிவ் டைரக்டர்'' என்றவள், மேனேஜர் அழைத்துச் செல்ல, ஒவ் வொரு அறையாய்ப் பார்வையிட் டாள்.

எல்லா அறைகளின் சுத்தமும், ரிகார்டுகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்த விதமும் அவள் கவனத்தை ஈர்த்தன.

தோளிரண்டை நாகரிகமாய் உலுக்கி 'ஃபைன்' என்றாள். எந்த இடத்திலிருந்து இன்ஸ்பெக்ஷன் ஆரம்பிக்கப் போகிறாள் என்று அனைவரும் சஸ்பென்ஸாய்ப் பார்த்துக் கொண்டிருக்க, அவள் நேரே கம்ப்யூட்டரின் முன்னே சென்று அமர்ந்தாள்.

செக்ஷன் வாரியாய் ஃபைல்களைத் திறந்து க்ளிக் செய்து கொண்டே போனாள். எங்கெங்கே மாற்றம் தேவைப்படுகிறதோ அல்லது தவறு தென்படுகிறதோ அதை மட்டும் சம்பந்தப்பட்ட அந்தந்த நபர்களுக்குச் சுட்டிக்காட்டிவிட்டு எழுந்து கொண் டாள்.

அடுத்து ரத்ன சபாபதி அறைக்குள் நுழைந்தாள். அங்கு சில முக்கியமான ஃபைல்களை எடுத்து புரட்டிப் பார்த்து, அரை மணி நேரத்தில் எல்லா ஃபைல்களிலும் கையெழுத்திட்டாள்.

''மிஸ்டர் ரத்னசபாபதி, உங்க மேல தப்பு எதுவும் சொல்ல நான் விரும்பலை. ஆனா வேலை யில, ஒரு சில மாற்றங்கள் தேவை யிருக்கு. அதை ஃபைல்லேயே எழுதியிருக்கேன்.''

''தேங்க்யு மேடம்''

''உங்க ரூம்ல, ஏ.ஸி. வேலை செய்யலையா?''

''இல்லை மேடம் ரிப்பேர் ஆயிடுச்சு!''

''முதல்ல அதை ரிப்பேர் பண்ணுங்க.

உங்க முகம் ரொம்ப வேர்த்திருக்கு.''

''யெஸ் மேடம். தேங்க்யு மேடம். வந்து, உங்களுக்கு ஸ்பெஷலா சவுத் இன்டியன் லஞ்ச் அரேஞ்ஜ் பண்ணியிருக்கேன்.''

''ஓ! தேங்க்யு. நோ ஃபார்மாலிடி. நான் வரும்போதே சாண்ட்விச் கொண்டு வந்துட்டேன். அதுபோதும். ஸீ யு. ஆல் தி பெஸ்ட்'' என்று வெளியேறினாள்.

**ர**த்னசபாபதிக்கு உள்ளுக்குள் பற்றிக் கொண்டு வந்தது. இன்னொரு பக்கம் பொறாமையாகவும் இருந்தது.

'ஆஃப்ட்ரால் ஒரு பெண்! என்ன தலைக்கனம்! தான் ஓர் எக்ஸிக்யூடிவ் டைரக்டர் என்கின்ற திமிர்!'

சற்று நேரத்தில் உதவி மேனேஜர் உன்னிமேனன் உள்ளே வர, அவரது ரியாக்ஷனைக் கவனித்தவாறு கேட்டார்.

''என்ன? புதுசா எக்ஸிக்யூடிவ் டைரக்டர் ஏதாச்சும் குடைஞ்சாங்களா?

''அதெல்லாம் ஒண்ணுமில்லை ஸார். ரெண்டே ரெண்டு பக்கம் புரட்டிப் பார்த்துட்டு 'நைஸ்'ன்னுட்டாங்க. ஷீ ஈஸ் எ ஜெம்.''

''மண்ணாங்கட்டி. இன்ஸ்பெக்ஷனுக்கு வந்துட்டா ஒரு சின்ஸியாரிட்டி வேண்டாம். சும்மா ஃபேஷன் பரேடுக்கு வந்த மாதிரி போஸ் கொடுத்துட்டுப் போறாளே.''

உன்னிமேனன், அப்படியே அந்தர் பல்டி அடித்தார்.

''ஆமா ஸார்! ஒரு மணி நேரத்துல இன்ஸ்பெக்ஷன் ஓவர்னா கேட்கவே வேடிக்கையா இருக்கு.''

''நினைச்சாலே டென்ஷன் ஏறுது! சூடா ஒரு காஃபி சாப்பிடுவோமா?''

இருவரும் இரண்டாம் மாடியில் இருந்த கேன்டீனுக்குச் சென்றார்கள்.

**ஆ**ஃபீஸில் பாதிப்பேர் அங்கே உட்கார்ந்து கொண்டு அரட்டை அரங்கம் நடத்திக் கொண்டிருந்தார்கள். மேனேஜரைப் பார்த்ததும் கப்சிப்பென்று அடங்கிப் போனார்கள்.

டோக்கன் வாங்கும் இடத்தில் ஒரு கூட்டமே கூடியிருந்தது. என்னவென்று விசாரித்தபோது, வழக்கமாக டோக்கன்கள் கொடுத்துக் கொண்டிருந்தவன் அன்று லீவு எடுத்துவிட ஒரு பெண் ஜூனியர் கேஷ் கவுண்டரில் சமாளித்துக் கொண்டிருந்தாள்.

''பொம்பளைங்களைப் போட்டாலே இப்படித்தான். தத்திங்க. ஒரு சுறுசுறுப்பு கிடையாது.''

''பொண்ணு புதுசு போலிருக்கு. கொஞ்ச நாள்ல பிக் அப் ஆயிடுவா.''

''அதெல்லாம் சும்மா. இந்த மாதிரி வேலைக்கெல்லாம் பொண்ணுங்க ஒத்து வரமாட்டாங்க.''

''நீங்க சொல்றது வேடிக்கையா இருக்கு சார். காலம் எப்படியெல்லாம் மாறிகிட்டு வருது. பாரதி பாடின புதுமைப் பெண்களை எல்லாம் நாம இப்ப கண்முன்னே பார்த்துக்கிட்டு வர்றோம்.''

''நீ என்ன அந்த ஸ்டைல் பார்ட்டிக்கு சப்போர்ட் பண்றியா?''

''யாரு ஸார்?''

''அதான் ஷீலா குல்கர்னி.''

''சேச்சே அவங்களுக்குப் போய் எப்படி சப்போர்ட் பண்ணுவேன். ஜெனரலா சொல்றேன்.''

''நீ லட்சத்திலேயோ, கோடியிலேயோ ஒருத்தியப் பார்த்துட்டு இப்படிப் பேசற. அவங்க எல்லாம் இன்னும் மாறலை. பழைய காலத்து பாணிலதான் இருக்காங்க.''

மேனேஜரின் கோபத்தை மேலும்

**நா**ன்கைந்து பாதாம் பருப்புகளை ஊறவைத்து அரைத்து, பாயசத்தில் சேர்த்துவிட்டால், பாயசத்துக்கு வி.ஐ.பி. அந்தஸ்து வந்துவிடும்.

**- ஆர்.பார்வதி, சென்னை-53**

அதிகப்படுத்த விருப்பமின்றி, உன்னி மேனன் மேஜைக்கு வந்த காபியை எடுத்து உறிஞ்ச ஆரம்பித்தார்.

அடுத்த மாதத்தில் ஒரு நாள் தலைமை அலுவலகத்திலிருந்து ரத்ன சபாபதிக்கு ஓர் ஈமெயில் கடிதம் வந்திருந்தது.

அதைப் பார்த்த ரத்னசபாபதிக்கு இரட்டிப்பான மகிழ்ச்சி! டெபுடி ஏரியா மேனேஜர் பதவி உயர்வுக்கான ஆர்டர் வந்திருந்தது. தன் சந்தோஷத்தை உன்னிமேனனிடம் பகிர்ந்து கொண்டார்.

''கங்கிராட்ஸ் ஸார். நான் அப்பவே நினைச்சேன் ஹீலா குல்கர்னி மேடம் வந்தப்பவே ஏதோ மாற்றம் நடக்கப் போகுதுன்னு புரிஞ்சுக்கிட்டேன்.''

''என்ன சொல்ற நீ!''

''ஆமாம் ஸார். மேடத்துக்கு எந்த ஒரு வேலை விஷயத்திலும் டிலே பண்ணினாலோ, பெண்டிங்ல வச்சாலோ பிடிக்காதாம். இவங்களுடைய ஆற்றலையும் சுறுசுறுப்பையும் கவனிச்சுட்டு, இவங்களைப் போன வாரம்தான் ரீஜனல் டைரக்டர் சீட்ல உட்கார வைச்சாங்க.

சீட்ல உட்கார்ந்ததுமே கவனிச்ச முதல் வேலை உங்க புரமோஷன்தானாம். நேத்து ஒரு ஸ்டாஃப் சொல்லிக் கேள்விப்பட்டேன். அது மட்டுமில்லை. உங்க ஃபைலை இத்தனை காலமா கிடப்பில போட்டதுக்கு யார் யார் எல்லாம் காரணமோ அவங்களுக்கெல்லாம் 'மெமோ' இஷ்யு பண்ணி எக்ஸ்பிளனேஷன் கேட்டிருக்காங்களாம்''

''இதுல ஒரு விஷயம் என்னன்னா அவங்க நினைச்சிருந்தா என்னை வெறும் சீனியர் மேனேஜர் பதவிக்கு மட்டும் உயர்த்தியிருக்கலாம். ஆனா, அவங்க அப்படிப் பண்ணலை. இன்னும் ஒரு படி மேலே போய் எனக்கு டெபுடி ஏரியா மேனேஜர் பதவியே கொடுத்திருக்காங்க.''

''இதுக்கெல்லாம் உங்களுடைய தெளிவான ரிகார்ட்ஸ்தான் காரணம். அவங்க இன்ஸ்பெக்ஷனுக்கு வந்திருந்தப்போ, அதிக நேரம் எடுத்துக்கலேன்னாலும் சில விஷயங்களைக் கூர்மையா கவனிச்சிருக்காங்க.

ஹெட் ஆஃபீஸுக்குப் போனதும் உங்க வேலைக்கு நியாயமா கிடைக்க வேண்டிய மரியாதையையும் கௌரவத்தையும் கொடுத்துட்டாங்க.''

''யெஸ்... யு ஆர் ரைட் மேனன்'' என்றார் ரத்னசபாபதி.

''இவ்வளவு சந்தோஷமான செய்தி கிடைச்சிருக்கு. எப்ப ஸார் ட்ரீட் தரப் போறீங்க?''

''நாளைக்கே!''

உன்னிமேனன், வெளியேற செக்ஷன் ஆஃபீஸர் தனஞ்ஜெயன் கதவைத் திறந்து கொண்டு நின்றார். அவர் கையில் பி.ஆர்.ஓ. ஃபைல்.

''ஸார், வந்து...'' என்று தயக்கமாய் இழுக்க,

''சொல்லுங்க'' என்றார் மேனேஜர்.

''ஸார் மந்தவெளி பிராஞ்சுலேருந்து...''

''ஓ! பத்மப்ரியா பி.ஆர்.ஓ. வேலைக்கு ப்ரமோஷன் கேட்டிருந்தாங்க இல்லை? நாளைக்கு வந்து என்னைப் பார்க்கச் சொல்லுங்க. ஷீ வில் பி பிரமோட்டட் ஸூன்.''

''தேங்க்யூ சார்.''

எங்கே தன்னைத் திட்டித் தீர்க்கப் போகிறாரோ என்று நினைத்துக் கொண்டிருந்த தனஞ்ஜெயன், அவரது திடீர் மனமாற்றத்துக்கான காரணம் புரியாமல் குழம்பி நின்றார். ●







**பெ**ரிய வெங்காயத்தை
நறுக்கி, மிக்ஸியில் அரைக்க
வும். வாணலியில் எண்ணெய்
விட்டு கடுகு, பச்சை மிள
காய், சீரகம் தாளித்து, தக்கா
ளிப் பழத்துண்டுகளை, அரைத்த
வெங்காயக் கலவையுடன் சேர்த்து வதக்க
வும். சிறிது கடலை மாவைக் கலந்து, கொதிக்க
வைத்து இறக்கினால் சூப்பர் சைட்டிஷ் ரெடி!
இது சப்பாத்தி, தோசைக்கு நன்றாக இருக்கும்.

**- உஷா நாராயணன், குரோம்பேட்டை.**

**உ**டல்நிலை சரியில்லாமல் இருக்கும் போது நிறைய மாத்திரைகள் சாப்பிடுவோம். அந்தச்சமயம் தண்ணீரை அதிகமாகக் குடித்தால், மாத்திரையில் உள்ள நச்சுத்தன்மை சிறுநீரில் வெளியேறும். நீர் கடுப்பும் ஏற்படாது.

**- ஆர்.ராணி, பெரியகுளம்.**

**கு**ட்டீஸ்களுக்கான குளியல் சோப்புகளை, மெல்லிய வலைத் துணியில் சுற்றிக் கட்டிக் கொடுங்கள். ஸ்க்ரப்பர் தேவையில்லை. தவிர, அடிக்கடி கையிலிருந்து வழுக்கி விழுவதையும் தவிர்க்கலாம்.

**- வே.சித்ராவேடியப்பன், ஊதப்பூண்டி.**

**சீ**மந்தத்திற்கு வளையல் அடுக்கும்போது, பட்டையாக உள்ள பிளாஸ்டிக் வளையலில் நல்ல மஞ்சள் நூலால் கொஞ்சம் இடம் விட்டு சிவப்புக் கலர் தெரியும்படி சுற்றி இந்த வளையலை முதலில் போடலாம். வேப்பிலைக் காம்பையும் அதன் மேல் சுற்றலாம். நன்றாக இருக்கும்.

**- டி.ஆர்.வேதவல்லி, திருவல்லிக்கேணி.**

**வீ**ட்டுத் தோட்டத்தில் துளசிச் செடி வளர்ப்பவர்கள், அதன் பூ பகுதியைக் கிள்ளி விட்டால், செடி நன்கு அடர்ந்தும் உயர்ந்தும் வளரும். இலைகளும் நிறைய கிடைக்கும். புதிய கிளைகள் நிறைய வந்து, புதர் போல செழித்து வளரும்.

**- டி.ஜோதிபாய், காஞ்சிபுரம்.**

**ப**ற்பசை தீர்ந்துவிட்டாலும், கடைசி வரை ட்யூபிலிருந்து எடுக்க ஓர் எளிய வழி. பற்பசை ட்யூபை, வெந்நீரில் முக்கி எடுத்து, அழுத்தினால் உள்ளே மீதமிருக்கும் பற்பசையும் சுலபமாக வெளிவந்துவிடும்!

**-அ. சரஸ்வதி, அரும்பாக்கம்.**

**மு**கத்தில் பருக்களும், கரும்புள்ளிகளும் அதிகம் இருக்கின்றனவா? சர்க்கரையைத் தயிரில் கலந்து முகத்தில் பூசி, அரைமணி நேரம் கழித்துக் கழுவினால், முகம் பளபளக்கும்.

**- சி.கஸ்தூரி, சேலம்.**

## இவை எல்லாமே ஆஹா 50 தான்!





செம்பருத்தி இலையைக் கொதிக்கும் வெந்நீரில் போட்டு, கை பொறுக்கும் சூடு வந்தவுடன் இலையை எடுத்துப் பிழிந்தால் அருமையான ஷாம்பு ரெடி.

**- எச்.எஸ்.லக்ஷ்மி, கொல்லம்.**

குடும்பத்தோடு நாம் எடுத்துக் கொள்ளும் புகைப்படத்தின் பின்னால் தேதி, நேரம் போன்றவற்றை எழுதி வையுங்கள். பிற்காலத்தில் பார்க்கும்போது உபயோகமாகவும், மனத்திற்கு மகிழ்ச்சியாகவும் இருக்கும்.

**-கே.என்.மகாலிங்கம், பாண்டிச்சேரி.4**

இமிடேஷன் நகைகள், சிலருக்கு அலர்ஜியை ஏற்படுத்தும். இமிடேஷன் நகைப் பகுதியின் மேல், நேச்சுரல் கலர் நெயில் பாலீஷைப் பூசி காய்ந்ததும் அணிந்தால் எந்தவித அலர்ஜியும் ஏற்படாது.

**- கீதா ஹரிஹரன், கொல்லம்.**

கால் விரலில் சுளுக்கு ஏற்பட்டால், தேங்காய் எண்ணெயைச் சற்று சூடுபடுத்தி, அதில் கற்பூரம் கலந்து, சுளுக்கிய இடத்தில் தேய்த்துக் கொள்ளவும். வீக்கம் குறைவதுடன், சுளுக்கும் குணமாகும்.

**- மகாலக்ஷ்மி சுப்ரமணியன், காரைக்கால்.**

வெளியூருக்குச் செல்லும்போது மறக்காமல் வீட்டில் ஃப்ரிட்ஜ், டி.வி. போன்ற எலக்ட்ரானிக் பொருள்களின் ஃபிளக்கை எடுத்துவிட வேண்டும். மழைக் காலமாக இருப்பதால் திடீரென இடி, மின்னல் ஏற்பட்டு பழுதாக வாய்ப்பு உண்டு.

**- ப.கோபிபச்சமுத்து, கிருஷ்ணகிரி.**

உடல் சற்றுப் பருமனாக உள்ள பெண்கள், டார்க் கலர் புடைவைகளை உடுத்தினால் உடல் பருமன் அதிகமாகத் தெரியாது. பார்க்க அழகாகவும் இருக்கும்.

**- லோ.மோகனசுந்தரி, கிருஷ்ணகிரி.**

புதிய கிரைண்டரில் மாவு அரைக்கும் போது, கல்லில் உள்ள மண் மாவுடன் கலந்து விடும். ஒரு கப் சாதத்துடன் ஒரு தம்ளர் தண்ணீர் ஊற்றிப் பதினைந்து நிமிடங்கள் ஓட விடவும். பிறகு, கிரைண்டரைக் கழுவினால் கல் சுத்தமாக நீங்கிவிடும்.

**- மணிமேகலை செல்லையா, சென்னை-10.**

# இவை எல்லாமே ஆஹா 50 தான்!

உலகின் மிகப்பெரிய ஜனநாயக நாடான இந்தியாவில் 18 வயதான ஆண், பெண் அனை வருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்துத் தேர்தல் முதல் பாராளுமன்றத் தேர்தல் வரை எல்லா தேர்தல்களுக்கும் ஒரே வாக்காளர் அட்டை போதுமானது. தேர்தல்களில் கள்ள வோட்டுக்கள் போடப்படுவதைத் தடுப் பதற்காக, அறிமுகப்படுத்தப்பட்டுள்ள வாக்காளர் அடையாள அட்டையில் வாக்காளரது புகைப்படத்துடன் அவரது வயது, வசிப்பிடம் உள்ளிட்ட தகவல்களும் இடம்பெற்றிருக்கும். வாக்காளர் அடையாள அட்டை பெறுவது பற்றிப் பார்ப்போம்...

**வா**க்காளர் என்ற முறையில் வாக்காளர் அடையாள அட்டை பெற உங்களது பெயர், நீங்கள் வசிக்கும் சட்டசபைத் தொகுதிக் குரிய வாக்காளர் பட்டியலில் இடம்பெற்றிருக்க வேண்டும்.

உங்களது பெயரை முதல் முறையாக வாக்காளர் பட்டிய லில் இடம்பெறச்செய்ய வேண்டு மானால், உங்களுக்கு அந்த ஆண்டின் ஜனவரி முதல் தேதி பதினெட்டு வயது பூர்த்தியாகி இருக்கவேண்டும். அதா வது ஒருவருக்கு ஜூன் மாதம் பதினெட்டு வயது பூர்த்தியாகிறதென் றால், அடுத்த ஆண்டு ஜனவரி முதல் தேதிதான் வாக்காளர் பட்டியலில் விண்ணப் பிக்க முடியும்.

உங்கள் பகுதிக்குரிய வாக்கா ளர் பட்டியல் பதிவு அதிகாரி யிடம் அதற்குரிய படிவம் வாங்கி, 'படிவம் - 6' பூர்த்தி

# வாக்காளர் அடையாள



செய்து, பாஸ்போர்ட் சைஸ் புகைப்படம் ஒட்டி, சமர்ப்பிக்க வேண்டும். உங்களது பெயர் வாக்காளர் பட்டியலில் ஏற்கெனவே இடம்பெற்று அந்த முகவரியிலிருந்து நீங்கள் வேறு இடத்துக்கு மாறியிருந்தால், பழைய என்ட்ரியை நீக்கி விட்டு, இப்போது வசிக்கும் புதிய முகவரியை வாக்காளர் பட்டியலில் இடம்பெறச் செய்ய வேண்டும். அதற்கும் படிவம் 6 தான் பயன்படுத்தவேண்டும்.

**வி**ண்ணப்பத்தில் இடம்பெற்றுள்ள புகைப்படம் மற்றும் அனைத்து தகவல்களையும் உறுதிப்படுத்துவதற்காக பாஸ்போர்ட், டிரைவிங் லைசென்ஸ், துப்பாக்கி லைசென்ஸ் போன்று ஏதாவது ஒன்றின் நகல் பிரதியை இணைக்கவும். தகவல்களை சரிபார்க்க அதிகாரிகள் உங்கள் வீட்டுக்கு வரும்போது, நீங்கள் இணைத்துள்ள ஆதாரத்தின் அசலைக் காட்ட வேண்டும்.

இவை எதுவும் இல்லாதுபோனாலும், அதிகாரிகள் தகவல்களைச் சரிபார்க்க வரும்போது நேரடி விசாரணை மூலம் உறுதி படுத்திக் கொண்டு வாக்காளர் பட்டியலில் உங்களது பெயரைச் சேர்ப்பார்கள். அதே நேரத்தில் ஏற்கெனவே வசித்த பகுதிக்குரிய வாக்காளர் பட்டியலிலிருந்து உங்கள் பெயரை நீக்கவும் உத்தரவாகும்.



● ஜெயஸ்ரீ முரளிதரன்

வாக்காளர் பட்டியலில் இடம்பெற்றுள்ள உங்களது பெயர், தகப்பனார்/தாயார்/கணவரது பெயர், முகவரி, வயது, ஆண்/பெண், வாக்காளர் அடையாள அட்டை வரிசை எண் இவற்றில் ஏதாவது பிழை இருந்தால், அதை சரி செய்யவும் வழி உண்டு. படிவம் 8ல், திருத்தம் செய்யப்படவேண்டிய விவரத்தைக் குறிப்பிட்டு விண்ணப்பிக்கலாம்.

**வா**க்காளர் பட்டியலில் பெயரைச் சேர்க்க உரிய விண்ணப்பத்தைப் பயன்படுத்தி விண்ணப்பித்தாகிவிட்டது. உங்களது பெயர், வாக்காளர் பட்டியலில் இடம்பெற்று இருக்கிறதா இல்லையா என்று எப்படித் தெரிந்துகொள்வது?

ஒவ்வொரு ஆண்டும், விண்ணப்பங்கள் பெறப்படும் அடிப்படையில் வாக்காளர் பட்டியல் திருத்தம் செய்யப்படுகிறது. மேலும், வாக்காளர் பட்டியலின் பிரதிகள் ஒவ்வொரு வாக்குச் சாவடியிலும் வாக்காளர்களின் பார்வைக்காக வைக்கப்படுகின்றன. மாவட்ட கலெக்டர், ஆர்.டி.ஓ. மற்றும் தாலுக்கா அலுவலகங்களிலும் பார்வைக்கு வைக்கப்படும்.

உங்கள் வசிப்பிடத்துக்குரிய வாக்குச் சாவடி எது என்று தெரிந்துகொண்டு,

# அட்டை பெறுவது எப்படி?

**வா**க்காளர் அடையாள அட்டை தொடர்பான புகார்கள், விளக்கங்களுக்கு 'தலைமைத் தேர்தல் அதிகாரி (தமிழ்நாடு), தலைமைச் செயலகம், செயின்ட் ஜார்ஜ் கோட்டை, சென்னை-9'. என்ற முகவரியில் தொடர்பு கொள்ளலாம். சம்மந்தப்பட்ட மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களையும் தமிழ்நாட்டில் உள்ள 234 தொகுதிகளுக்கும் உரிய சப்-கலெக்டர், உதவி கலெக்டர், கோட்ட வருவாய் அதிகாரிகளின் அலுவலகங்களையும் அணுகலாம்.




**எள்ளுப்பாட்டி - சரஸ்வதி மாறன், கொள்ளுப்பாட்டி - கண்ணம்மா பகவதி, பாட்டி - விஜயா கைலாசம், அம்மா - வினஷிப்ரஜா சங்கர், குழந்தை - வஸிஷ்டா**

அங்கே சென்று வாக்காளர் பட்டியலில் உங்கள் பெயர் உள்ளதா என்று பரிசோதித்துக் கொள்ளுங்கள்.

**த**மிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களுக்குமான வாக்காளர் பட்டியல் தேர்தல் கமிஷனின் தமிழ்நாடுக்கான பிரிவின் இணையதளத்தில் (www.elections.tn.nic.in) இடம்பெற்றுள்ளது. புதிதாக சேருகிறவர்களின் பெயர்கள், துணை வாக்காளர் பட்டியலில் சேர்க்கை என்ற பிரிவில் இடம் பெறும்.

தேர்தல் வருவதற்கு சில மாதங்கள் முன்பு வரை, வாக்காளர் பட்டியல் திருத்தம் நடைபெறும். அப்போது கூட புதிதாகச் சேர்க்கவும், முகவரி மாற்றத்துக்காகவும் விண்ணப்பிக்கலாம். தேர்தல் அறிவித்து, வேட்புமனு தாக்கல் செய்வதற்கான கடைசி நாள் வரை விண்ணப்பிக்கலாம்.

**வா**க்காளர் அடையாள அட்டை பெறுவதற்கு 001அ என்ற பிரத்யேக விண்ணப்பம் உள்ளது. இதனை படிவம் 6ல் வாக்காளர் பட்டியலில் சேர்க்கைக்காக விண்ணப்பிக்கும்போதே உடன் இணைத்துவிடலாம். இந்த விண்ணப்பத்தில் இன்னொரு பாஸ்போர்ட் அளவு புகைப்படத்தை ஒட்ட வேண்டும். சரிபார்ப்பு முடிந்த பிறகு, உங்கள் புகைப்படத்துடன் கூடிய வாக்காளர் அடையாள அட்டை உங்கள் வீடு தேடி வரும்! வாக்காளர் அட்டை தொலைந்துபோய் விட்டால், பதினைந்து ரூபாய் கட்டணம் செலுத்தி விண்ணப்பித்தால், மாற்று வாக்காளர் அட்டை தருவார்கள்.

நன்றி: **ஜெயஸ்ரீ முரளிதரன், தமிழக இணை தலைமை தேர்தல் அதிகாரி**

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

**(அடுத்த இதழில் 'பான்' கார்டு பெறுவது எப்படி?)**

‘வீட்டுக்கு வெள்ளையடிக்க ரொம்ப வருஷமாச்சு. கொசு அதிகமா இருக்கு. ஜன்னலுக்கு கொசு வலை மாட்டணும்’ என்று நினைத்துக் கொண்டிருப்பவர்கள் கூட, ‘உலகம் மாசு அடைகிறதே. உலகம் வெப்பமடைகிறதே’ என்று கவலைப்பட தொடங்கிவிட்டார்கள். பொதுநலம் கலந்த சுயநலம்! உலகின் பல நாடுகளிலும் உலகம் மாசுபடல் மற்றும் வெப்பமாதல் குறித்து பொறுப்பு அதிகமடைய, அதன் ஓர் அங்கமாக சுற்றுச்சூழல் கல்வியும் அறிமுகமாகிவிட்டது. இப்போதோ அதன் தேவை பல மடங்கு அதிகரித்துவிட்டது!

**வா**கனங்களிலிருந்து வரும் நச்சுப்புகையைக் குறைக்க வாகன புகை சோதனை (Emission Test) நடைமுறைக்கு வந்திருக்கிறது. சில வருடங்களுக்கு முன் பெட்ரோலில் ஈயம் கலப்பது தடை செய்யப்பட்டது.

மேற்கு வங்காளத்தில் உள்ள நிலத்தடி நீரில், ஆர்சானிக் விஷம் கலந்ததிலிருந்து, அஸ்ஸாமில் ஃப்ளூரோசிஸ் பரவுவது வரை பல தளங்களில் சுற்றுச்சூழல் ஆராய வேண்டிய ஒன்றாகிவிட்டது.

**10**

# புதிய சிந்தனை; பலே வாய்ப்பு!



ஜி.எஸ்.எஸ்

இந்தப் பின்னணியில்தான் ஒரு தொழில் நிறுவனம் தொடங்கும்போது அவர்கள் முதலில் பெற வேண்டிய ஆவணங்களில் ஒன்று மாசுகட்டுப் பாடு வாரியத்திலிருந்து தடையில்லாச் சான்றிதழ் என்று நடைமுறைப்படுத்தப்படுகிறது. இப்படிப் பெறுவதற்கு என்னென்ன விஷயங்களில் கவனம் செலுத்தப்பட்டிருக்க வேண்டும் என்பது கூட சுற்றுச் சூழல் அறிவியல் படிப்பின் ஒரு பகுதிதான்.




கழிவுகளை மறுசுழற்சி மூலம் நமக்கு வேண்டிய பொருள்களாக மாற்ற முடியுமா என்பது குறித்த சிந்தனையையும் இந்தப் படிப்புகள் தூண்டுகின்றன. வளர்ந்த நாடுகளில் ஆலைக் கழிவுகளை (Waste Management) எப்படிக் கையாள்வது என்பதில் கூடுதல் கவனம் செலுத்தி வருகிறார்கள். அதாவது விஞ்ஞானரீதியில் கழிவு மேலாண்மை முறைகளை அறிமுகப்படுத்தி, அதைச் செயல்படுத்துவதிலும் அதிக முனைப்பு காட்டுகிறார்கள். இந்நிலைமை இந்தியாவிலும் உருவாகி வருகிறது. எனவே, சுற்றுச்சூழல் தொடர்பான படிப்புகளுக்கு முக்கியத்துவம் ஏற்பட்டு வருகிறது.

அத்தகைய துறைகளில் பணியாற்றுவதற்காகவே சுற்றுச்சூழல் பாதுகாப்புத் திட்டங்களை நன்கு அறிந்த வல்லுநர்கள் பணியில் அமர்த்தப்படுகிறார்கள். சில

சுற்றுச்சூழல் பட்டப் படிப்பு மற்றும் பட்டமேற் படிப்புக்குப் பிறகு பல கிளைகளில் ஸ்பெஷலைஸ் செய்யலாம். உதாரணத்துக்கு இ-வேஸ்ட் மேனேஜ்மென்ட்

பேட்டரிகளிலிருந்து கம்ப்யூட்டர் வரை பழையன கழிதல் நிறைய நடக்கின்றது. கலபத்தில் மக்கிவிடாத இவையெல்லாம் பூமிக்குப் பெரும் பாரம். எளித்தாலோ சுற்றுச்சூழலுக்கு சொல்ல முடியாத பாதிப்பு. இதுபோன்ற பொருள்களை என்ன செய்யலாம்? இதற்குத்தான் மின்னணு கழிவுப் பொருள்களுக்கான மேலாண்மைக் கல்வி. இதைப் பயில்வதற்கான வழிகள் இதோ.

* இந்திய வணிக மற்றும் தொழில் கூட்டமைப்பு (Assocham) இதற்கான பயிற்சி வகுப்பு நடத்துகிறது. இந்தோ ஜெர்மன் சுற்றுச்சூழல் திட்ட வரைவில் (Asem) மனிதவளப் பிரிவு, கருத்தரங்குகள் மற்றும் பயிற்சி வகுப்புகள் வழங்குகிறது.

* இந்தியாவில் உலக வனவியல் நிதியம் (WWF), சுற்றுச்சூழல் சட்டத்திற்



பொறியியல் கல்லூரிகளில் சுற்றுச்சூழல் பொறியியல் குறித்த கல்வி அளிக்கப்படுகிறது.

இக்காலஜி, மாசுக்கட்டுப்பாடு, நீர் தொழில்நுட்பம், கடல்வாழ் உயிரினக் கல்வி, கடலோரப் பகுதி மேலாண்மை என்று சுற்றுச்சூழல் கல்வி பலவிதங்களில் கிளைகள் விரித்துப் பரவியுள்ளது. ஒவ்வொன்றிலும் பட்டப்படிப்பும் பட்டமேற்படிப்பும் உண்டு.

ஒரு தொழில் நிறுவனத்தைத் தொடங்கும்போது, கட்டுமானம், இயந்திரம் ஆகியவற்றுக்கு முதலீடு செய்வது போல், மாசுத் தடுப்பு, சுற்றுச்சூழல் பாதுகாப்பு ஆகியவற்றுக்கும் போதிய அளவு முதலீடு செய்தாக வேண்டும். இந்தத் தகவல்களை அறிந்து கொள்வதற்கு பட்டமேற்படிப்புகள் உதவுகின்றன.

சீனாவில் திடக் கழிவுகளைச் சுத்திகரித்து, அவற்றின் மிச்சத்தில் உலோகத்தைப் பிரித்தெடுத்து, அலங்காரப் பொருள், பாத்திரங்களாகவும், சக்கைகளை ஹாலோ பிளாக்குகளாகவும் மாற்றி சாதனை புரிகிறார்கள். இதுபோன்ற புதிய சிந்தனைகள் தோன்றவும் சுற்றுச்சூழல் கல்வி பெற்றவர்களிடையே வாய்ப்பு உண்டு. இந்தக் காரணத்திற்காகவும் இக்கல்வி முக்கியத்துவம் பெறுகிறது.

உச்சநீதிமன்ற ஆணைப்படி பள்ளி மற்றும் கல்லூரிகளில் சுற்றுச்சூழல் கல்வி கட்டாயமாக்கப்பட்டுள்ளது. எனவே இந்தக் கல்வியை நடத்துவதற்கு ஆசிரியர்களுக்கான வேலை வாய்ப்பு கணிசமாக உருவாகியுள்ளது.

**(அடுத்த இதழில் வானியல் படிப்பு)**

கான கல்வியை ஆன்லைனில் வழங்கி வெற்றி பெற்றவர்களுக்கு டிப்ளோமா வழங்குகிறது.

* ஐ.ஐ.டி. மும்பையில் 'சுற்றுச்சூழல் அறிவியல் மற்றும் பொறியியல் மையம்' என்ற பெயரில் ஒரு தனிப்பிரிவே இயங்கி சுற்றுச்சூழல் பொறியியல் கல்வியை அளிக்கிறது.

பி.எஸ்.ஸி., (என்விரோன்மெண்ட் மேனேஜ்மெண்ட்) பட்டப்படிப்பை முடித்தவர்கள் அதே துறையிலும் வேறு சில துறைகளிலும் கூட பட்டமேற்படிப்பு படிக்கலாம். அதாவது சுற்றுச்சூழல் அறிவியலில் பட்டப்படிப்பு பெற்றவர்கள் Toxicology, Bio-Technology, Bio Chemistry, Micro Biology ஆகியவற்றிலும் பட்டமேற்படிப்பைத் தொடர்வதில் தடையில்லை.

* சுற்றுச்சூழல் குறித்த கல்வி அண்ணா பல்கலைக்கழகத்தில் எம்.டெக். படிப்பாக நடத்தப்படுகிறது.

சுற்றுச்சூழலைப் பாதுகாப்பது, நிர்வகிப்பது, சூழல் கேடு நேராமல் தடுக்க என்னென்ன வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டும் என்பதற்காகத்தான் இப்படிப்புகள் அமைந்துள்ளன.

## ஹாய், காலேஜ் பாய்ஸ் அண்ட் கேர்ள்ஸ்!

1. மரபணு மாற்றம் செய்யப்பட்ட இந்தக் காயை விற்பனை செய்யும் விஷயத்தில் சர்ச்சை ஏற்பட்டுள்ளது. அது எது? ..........................................

2. ஜூன் மாதம் உலகத் தமிழ் மாநாடு நடக்கவிருக்கும் ஊர் எது? ..........................................

3. மீண்டும் இந்திய கிரிக்கெட் அணியில் இடம்பெற்றுள்ள வீரர் யார்? ..........................................

4. தீபாவளிக்குத் திரையிடப்பட்டுள்ள நடிகர் சூர்யாவின் படம் எது? ..........................................

5. 2011ம் ஆண்டு மேற்கொள்ளப்படும் மக்கள் தொகை கணக்கெடுப்பின் போது, பொதுமக்களின் எத்தனை விரல் ரேகைகள் பதிவுசெய்யப்படும்? ..........................................

# போட்டிக்குத் தயாரா?

யூத் எடிஷன் பக்கங்கள்

கடைசித் தேதி: 15.11.09

**உங்களுக்கு நாட்டு நடப்புத் தெரியுமா? இந்தக் கேள்விகளுக்கான விடைகளை எழுதி, இந்தப் பக்கத்தை நிரப்பி அனுப்புங்க. கல்லூரி அத்தாட்சி அவசியம். சரியான விடை எழுதுபவர்களில் குலுக்கல் முறையில் தேர்வு செய்யப்பட்ட ஐந்து பேருக்கு தலா ரூ.100/- பரிசும், சான்றிதழும் உண்டு.**

**பெயர் :** .......................................... **வகுப்பு :** .......................................... **ஈ மெயில்** ..........................................

**கல்லூரி :** ..........................................

**வீட்டு முகவரி :** ..........................................




# இயற்கையின் படைப்பு நீ!




சரித்திரம் படைக்கும் உலகில்
சாகசப் பறவையாகவும்

சங்கடங்கள் போக்கும்
சமுதாயச் சீர்த்திருத்தவாதியாகவும்

சந்தனப் புன்னகையில் பல
சாதனைகள் படைப்பவளாகவும்

சமுத்திரத்தில் சிறக்கும்
பெரும் முத்தாகவும்

உன் கண் அசைவிலே – மண்ணில்
பல கலைகள் படைப்பவளாகவும்

எட்டுத்திக்கும் வியந்து நோக்கும்
இயந்திர உலகில் இயற்கையின்
படைப்பு நீ!

– ஜே.கனகேஸ்வரி, பி.எஸ்ஸி.,
(நர்ஸிங்) மூன்றாமாண்டு,
எம்.ஏ.சிதம்பரம் செவிலியர் கல்லூரி,
சென்னை.



"நாம் வெளியே போகும் போது பூனை குறுக்கே போகுதுன்னா என்ன அர்த்தம்?''

"ஹி...ஹி... அதுவும் வெளியே போகுதுன்னு அர்த்தம்.''

- வே.அறிவரசு, 12-ஆம் வகுப்பு, எஸ்.பி.ஓ.ஏ. மேநிலைப் பள்ளி, சென்னை.






ஹாயி பாஸ்டர் என்கிற விஞ்ஞானி வெறிநாய்க்கடிக்கு மருந்து கண்டுபிடித்தவர். ஒருநாள் உணவு மேசையில் தன் நண்பர்களிடம் சுகாதாரம் குறித்தும், தூய்மையாக இருப்பது குறித்தும் பேசிக் கொண்டிருந்தார்.

அங்கிருந்த திராட்சையைக் கையில் எடுத்து அதை அப்படியே சாப்பிடாமல் நீரில் எத்தனை முறை கழுவிச் சாப்பிடுவது என்று விளக்கமுற்பட்டார். ஒவ்வொரு முறை திராட்சையை, தண்ணீரில் முக்கும் போதும் என்னென்ன பாக்டீரியாக்கள், நுண்ணுயிரிகள் அதில் இருக்க வாய்ப்புண்டு என்பதை விளக்கினார். சிறிது நேரத்தில் கூட்டம் 'கொல்' என்று சிரித்தது. ஹாயி, திராட்சையைக் கழுவிய தண்ணீரையே ஒரு முழுங்கு குடித்துவிட்டிருந்தார். அவ்வளவு ஞாபகமறதி.

மறதி மன்னர்களாக நம்மிலும் பலர் இருக்கின்றோம். ஒன்றை எடுக்கச் சென்று இன்னொன்றை விட்டுவிட்டு வருவது, மூக்குக் கண்ணாடியை அணிந்து கொண்டே அதைத் தேடுவது ஆகியவை அந்த வகையில் அடங்கும். மறதி ஏன் ஏற்படுகிறது? என்பதை மனஇயல் வல்லுநர்கள் ஆய்ந்திருக்கிறார்கள்.

1. உபயோகமின்மையால் சிதையும் நினைவு.

2. ஒன்றை நினைவில் நிறுத்த முற்படும்போது ஏற்படும் தொந்தரவுகள்

3. ஒன்றைக் கவனிக்க உற்சாகமின்மையால், நினைவில் நிறுத்திக் கொள்வதில் எந்தப் பயனும் இல்லாததால் மறந்து விடுவது.

நாம் ஒன்றில் அக்கறை இருந்தால், அதை நினைவில் வைத்துக் கொள்கிறோம் என்பதுதான் அண்மைய ஆய்வு. அடிக்கடி உசுப்பிவிட்டுக் கொள்ளாவிட்டாலும் ஒன்றை ஆர்வத்துடன் பயன்படுத்தாவிட்டாலும் மறதி ஏற்படுகிறது.

அதனால்தான் நாம் படிக்கும்போது ஆர்வத்துடன் படிக்க வேண்டும். நதியைப் பற்றி நதிக்கரையிலும் கடலைப் பற்றி கடற்கரையிலும், பட்டாம்பூச்சியைப் பற்றி பசுந்தோட்டத்திலும் உட்கார்ந்து படிக்க நேர்ந்தால் அதை நாம் நினைவிலேயே வைத்துக் கொள்கிறோம்.

தலையிலே ஓர் அடி விழுந்தோ, விபத்து ஏற்பட்டோ நடந்தவற்றை மறந்து விடுவது ஒருவிதமான அம்னீஷியா. இவையெல்லாம் எங்கோ ஒரு நிகழ்வாக நடப்பவை. மற்றபடி எல்லா மனிதர்களுக்கும் அபரிமிதமான நினைவாற்றல் அமைந்திருக்கவே செய்கிறது. கூர்மையான கத்தியைத் தொடர்ந்து உபயோகப்படுத்திக் கொண்டே






இருந்தால் அது பட்டதும் வெட்டிச் சாய்க்கிறது. உபயோகப்படுத்தாமல் வைத்திருந்தால் துரு ஏறிப் பயன் படுத்தும் போது நம்முடைய கையையே அறுக்கிறது.

தன்னுடைய வீட்டுத் தொலைபேசி எண்ணையே மறந்தவர்களையும் தன் வீட்டை விட்டு விட்டு, வேறு ஒரு வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டியவர்களையும் நாம் பார்க்கலாம். இவர்கள் ஒரு கனவு லகத்தில் வாழ்பவர்கள். மண்ணில் கால் படாத மகத்தான உலகத்தை இவர்களாகவே சிருஷ்டித்துக் கொண்டிருப்பதால் நடைமுறை உலகம் இவர்களுக்குப் பொருந்தாமல் போய்விடுகிறது.

எனக்குத் தெரிந்த ஒருவருக்கு அதிக ஞாபகமறதி. அவர் மருத்துவரிடம் சென்றார். ''எனக்கு, ஞாபகமறதி நோய் இருக்கிறது''

''எவ்வளவு நாட்களாக இந்த நோய் இருக்கிறது?'' எனக் கேட்டார் மருத்துவர்.

''எந்த நோய்?'' என்று இவர் திருப்பிக் கேட்டார்.

நன்றி : இமைகள்

– சசிரேகா, எம்.ஏ. சைக்காலஜி
இரண்டாமாண்டு,
சென்னை பல்கலைக்கழகம்,
சென்னை.

# மறந்துடாதீங்க!"




# சிகரங்களும் வியக்கட்டும்!



சாதிக்கப் பிறந்தவள் நீ
சமுதாய சிந்தனையைக் கருத்தில் கொள்!
இலட்சியத்தை மூச்சாக்கு;
உன் கண்ணீர்த் துளிகள்
வியர்வைத் துளிகளாய் மாறட்டும்!
அழகு என்பது அகத்தில் உள்ளது
வெற்றி என்பது செயலில் உள்ளது
செயலைத் திருந்தச் செய்;
வெற்றி உன்வசம் இருக்கும்!
உன் உயர்வைக் கண்டு
சிகரங்களும் வியக்கட்டும்!

**- ஜெனிபர் மாதரசி.டி., பி.எஸ்ஸி., இரண்டாமாண்டு, தாவரவியல் அண்ட் பயோடெக்னாலஜி, நிர்மலா மகளிர் கல்லூரி, கோயமுத்தூர்.**

# பரிசளிப்பு!



தேடித் தேடி வாங்கிய
காதல் புத்தகத்தை,
பரிசளிக்க இயலாததால்
வாங்கிச் சென்றான்
நண்பன் -
தன் காதலிக்குப்
பரிசளிக்க!

**- யோ.ஆனந்த்பாபு, டி.சி.ஈ. மூன்றாமாண்டு, தியாகராஜர் பல்தொழில்நுட்பக் கல்லூரி, சேலம்.**




# சும்மா... ஜாலிக்கு!

- தென்னைமரத்தில் தேங்காய் இருக்கும்; மாமரத்தில் மாம்பழம் இருக்கும்; அரச மரத்தில் அரசர் இருப்பாரா?

- செருப்பு இல்லாமல் நாம நடக்கலாம்; நாம இல்லாம செருப்பு நடக்குமா?

**- க.சரண்யா, எம்.டெக்., கம்ப்யூட்டர் சயின்ஸ் அண்ட் இன்ஜினியரிங் முதலாமாண்டு, கலசலிங்கம் பல்கலைக்கழகம், சிவகங்கை.**

- பருப்புக் குழம்பில் பருப்பு போடுவார்கள் காரக் குழம்பில் காரைப் போட முடியுமா?

# ஹைக்கூ... ஹைக்கூ...



விக்கல் வருகிறது தண்ணீர்
குடிக்க மனமில்லை...
ஏனென்றால் -
நினைப்பது நீயாக இருந்தால்
நீடிக்கட்டுமே அந்த விக்கல்!

**- என்.பிரியா, பி.சி.ஏ. முதலாமாண்டு, ஸ்ரீமதி இந்திரா காந்தி கல்லூரி, திருச்சி.**

தோல்வி உன்னைச் சந்திக்கும்
முன் நீ சிந்தித்தால்
தோல்வி உன்னைச் சந்திக்க
சிந்திக்கும்...

இரவினில் ஓர் இன்னிசைகீதம்
கேட்பாரற்று அழுகிறது
- ஆந்தை

உன் நினை
வில்லாது நான்
இருந்தால்
அது என் நினைவு
நாள்...

**- திவ்யா, தியாகராசர் கலை கல்லூரி, மதுரை.**



# போட்டிக்குத் தயாரா? முடிவுகள்

பூத் ரெடியின் புத்தகங்கள்

**ரூ.100/- பரிசு பெறும் மாணாக்கர்கள்**



மங்கையர் மலர் - அக்டோபர் இதழில் வெளியான 'போட்டிக்குத் தயாரா?' - கேள்விகளுக்கான சரியான விடைகள் :

1. ராகுல் காந்தி, 2. காஞ்சிவரம், 3. மாயாவதி, 4. வெண்கலம், 5. அண்ணா துரை.

பரிசாளிகள்:

1. எம். காவ்யா, பி.எஸ்ஸி., பி.எஸ்.ஜி.ஆர். கிருஷ்ணாம்மாள் பெண்கள் கல்லூரி, கோயமுத்தூர்.

2. மு.அகமது ஆதில், பி.எச்.எம்.எஸ், இரண்டாமாண்டு, அரசினர் ஹோமியோபதி மருத்துவக் கல்லூரி.

3. ச.கிருத்திகா, இஇஇ இரண்டாமாண்டு, எம்.ஐ. பொறியியல் மற்றும் தொழில்நுட்பக் கல்லூரி, ஹைதராபாத்.

4. டி.சத்யராஜ், பி.எஸ்ஸி., பச்சையப்பா கல்லூரி, சென்னை.

5. பி.வேல்விழி, பி.இ. முதலாமாண்டு, ராஜலக்ஷ்மி பொறியியல் கல்லூரி, காஞ்சிபுரம்.

# ஓடி வரும்!



உன் இதயத்தை இனிமையாக்கு
உதவிகள் தேடி வரும்

உன் கருத்தை நேர்மையாக்கு
கடமைகள் புரிய வரும்

உன் அறிவைக் கூர்மையாக்கு
அதிர்ஷ்டம் ஓடி வரும்

உன் முயற்சியை முழுமையாக்கு
முன்னேற்றம் கூடி வரும்

- த.சிவலிங்கம், பி.காம்.,
மூன்றாம் ஆண்டு, தமிழ்நாடு
திறந்தநிலைப் பல்கலைக்கழகம்,
கிண்டி, சென்னை-25.

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

வழங்கும்

## ஆன்மிகப் போட்டி - 10

## ரூ. 5,000 பரிசு

பெருமைக்குரிய நமது இதிகாசங்கள், காவியங்கள், புராணம், திருக்கோயில்கள் போன்றவற்றிலிருந்து வினாக்களைத் தந்திருக்கிறோம். ஒவ்வொரு கேள்விக்குக் கீழேயும் மூன்று பதில்கள் தரப்பட்டுள்ளன. சரியான விடையைத் தேர்ந்து ✓ செய்து அனுப்புங்கள். குலுக்கல் முறையில் 20 பேருக்கு தலா ரூ. 250/- பரிசளிக்கப்படும்... எங்கே உங்க ஆன்மிக அறிவை சோதிச்சுப் பாருங்க!

1. இந்திரஜித்தின் தந்தை பெயர் என்ன?
(அ) ராவணன் ☐ (ஆ) சூரபத்மன் ☐
(இ) கும்பகர்ணன் ☐

2. முருகன் தெய்வானையை மணந்த தலம் எது?
(அ) திருத்தணி ☐
(ஆ) திருப்பரங்குன்றம் ☐
(இ) பழமுதிர்ச்சோலை ☐

3. கிருஷ்ணர் எந்தப் பாம்பின் கொட்டத்தை அடக்கி அதன் தலைமீது நடனமாடினார்?
(அ) வாசுகி ☐ (ஆ) காளிங்கன் ☐
(இ) தட்சன் ☐

4. 'அசைந்தாடும் மயில் ஒன்று கண்டால் நம் அழகன் வந்தான் என்று சொல்வது போல் தோன்றும்' எனத் தொடங்கும் பிரபல பாடல் எந்தக் கடவுள் பற்றியது?
(அ) கண்ணன் ☐ (ஆ) முருகன் ☐
(இ) விநாயகர் ☐



**5. ஜோதிர்லிங்கங்கள் என்று கருதப்படுபவை எவ்வளவு?**

(அ) பத்து ☐ (ஆ) பன்னிரண்டு ☐ (இ) பதினெட்டு ☐

**6. நாதமுனியின், மாபெரும் சேவை எது?**

(அ) ஸ்ரீரங்கம் கோபுரத்தின் மீது நின்று நாராயண நாமத்தின் அருமையை எடுத்துரைத்தார் ☐

(ஆ) நாலாயிர திவ்ய பிரபந்தத்தைத் தொகுத்தார் ☐

(இ) தஞ்சை பெரிய கோயிலில் உள்ள தேவார ஏடுகளைக் கண்டெடுத்தார் ☐

**7. அன்னமாச்சாரியாவின் வியக்க வைக்கும் செயல் எது?**

(அ) ஐந்தே நாட்களில் தமிழகத்தில் உள்ள அத்தனை முக்கிய திருமால் ஆலயங்களுக்கும் பயணம் செய்தார் ☐

(ஆ) வெங்கடாஜலபதியைப் பற்றி தினமும் ஒரு புதுப்பாடலை இயற்றினார் ☐



(இ) திருமால் பக்தர் என்று யார் வந்தாலும் ஒரு பொற்காசு கொடுத்து அனுப்பினார் ☐

**8. சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவர் யார்?**

(அ) முத்துசுவாமி தீட்சிதர் ☐

(ஆ) எம்.கே.தியாகராஜ பாகவதர் ☐

(இ) கோவிந்த சாஸ்திரிகள் ☐

**9. நாமக்கல் எந்த தெய்வத்தின் மிக உயரமான சிலைக்குப் பெயர்போனது?**

(அ)சிவலிங்கம் ☐ (ஆ) கிருஷ்ணர் ☐ (இ)ஆஞ்சநேயர் ☐

**10. யாருடைய கையில் உள்ள வீணையை மஹதி என்று குறிப்பிடுவார்கள்?**

(அ) நந்திதேவர் ☐ (ஆ) மன்மதன் ☐ (இ) நாரதர் ☐

**தொகுப்பு : ஜி.எஸ்.எஸ்.**

**போட்டி விதிகள் :**

*ஆன்மிக விடைகளை நிரப்பி இந்தப் பக்கத்தைக் கிழித்து அனுப்புங்க. ஒருவரே எத்தனை கூப்பன்களை வேண்டுமானாலும் அனுப்பலாம். ஜெராக்ஸ் கூடாது.*

**அனுப்ப வேண்டிய முகவரி : ஆன்மிகப் போட்டி - 10 மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.**

**கடைசித் தேதி : 15.11.2009**

பெயர் : .................................................. விலாசம் : ..................................................

..................................................................................................................................

..................................................................................................................................

தொலைபேசி எண் : .................................. ஈ-மெயில் : ..................................................

**ஜீலியட் வனிதா ராணி அலையஸ் வௌவால் ராணி. நெல்லை, சாரா தக்கர் மகளிர் கல்லூரியின் பேராசிரியரான இவர், முழுக்க முழுக்க வௌவால்கள் பற்றிய ஆராய்ச்சிக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார். அவருடன் சுவாரஸ்யமான பேட்டி...**

**வௌவால்களை ஆராய்ச்சி செய்றீங்களே... அதுக்கு ஏதாவது சிறப்புக் காரணமிருக்கா?**

சின்ன வயசுல கிராமத்தில் இருக்கும் எங்கள் பண்ணை வீடுகளுக்குப் போவேன். அங்கே வௌவால்களைப் பார்க்கும் சந்தர்ப்பங்கள் வரும். வேலையாட்களிடம் அதுபற்றி விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். ரொம்பவும் வித்தியாசமான ஓர் உயிரினமாக என் மனதுக்கு பட்டதால், இதைப் பற்றி ஆராய்ச்சிகள் செய்ய அப்போதே என் மனத்தில் ஆவல் தோணிடுச்சு. அந்த வயசிலிருந்தே வௌவால் பற்றி நிறையத் தகவல்களைச் சேகரிக்க ஆரம்பித்தேன். இந்த ஆராய்ச்சிக்குப் பெரிதும் ஊக்கம் கொடுத்து உறுதுணையாக இருந்தவர், மதுரைப் பல்கலைக் கழகத்தில் வௌவால்கள் பற்றி ஆராய்ச்சி செய்து முனைவர் பட்டம் பெற்ற டாக்டர் மாரிமுத்துதான்!

**வௌவால்கள் பற்றிய புதுமையான தகவல்களைக் கூறுங்களேன்?**

நம் நாட்டில் இருபத்தொன்பதுக்கும் அதிகமான வௌவால் இனங்கள் உள்ளன. நரிச்சி வௌவால், சிரட்டை வௌவால், மலை வௌவால், பனை வௌவால், கோவில் வௌவால், கஸ்தூரி வௌவால் என நிறைய விதங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வௌவால்களுக்கும் தனித்தனி குணாதிசயங்கள் உண்டு.

**வௌவால்களினால் மனிதருக்கு என்ன நன்மை?**

இயற்கைக்கும், சுற்றுப்புறச் சூழல்களுக்கும், பயிர்களின் பாதுகாப்புக்கும் வௌவால்கள் நிறைய நன்மைகள் செய்கின்றன. இவை முற்றிலும் விவசாயிகளின் நண்பன்தான்.

**ஆராய்ச்சியின்போது, மறக்க முடியாத அனுபவம் ஏதேனும் உண்டா?**



லட்டின் வகை வெளவால்கள் மேற்குத் தொடர்ச்சி மலையில் உள்ளன என்று கண்டுபிடித்தேன்.

மேலும், கெயிவோல லெவில் என்ற வெளவாலை நான்தான் இந்தியாவிலேயே முதன் முதல் கண்டுபிடித்தேன். இரண்டு கிராம் எடையே உள்ள அதிசய வெளவால் இது. இதைப் பிடிக்க வெளிநாட்டில் இருந்து வரவழைக்கப்பட்ட வலைகளைத்தான் பயன்படுத்த வேண்டும்.

எனக்கு இந்த ஆராய்ச்சியில் பெரிதும் உதவி செய்வது வன அலுவலர்கள், காணிகள் எனப்படும் மலைஜாதியினர் போன்றோர்தான். காணிகள் பேச மாட்டார்கள். சைகைகள்தான் இவர்கள் மொழி. வன விலங்குகளிடம் இருந்து காப்பாற்றி எங்களை வழிநடத்துபவர்கள் இவர்கள்தான். என்னுடைய நன்றிக்கு உரியவர்கள்.

அடுத்து என்னைப் பாராட்டி, யு.ஜி.சி. யில் இருந்து விருதுகள், உதவித் தொகைகள் வழங்கப்பட்டன. இத்துடன் எனது ஆராய்ச்சிகளுக்காக மத்திய, மாநில, வனத் துறை மற்றும் மத்திய விஞ்ஞானத் துறை உதவித் தொகைகளைக் கொடுத்து மற்ற வசதிகளையும் நிறையச் செய்து வருகின்றன.

அரிய வகை வெளவால்களைக் கண்டு பிடிக்க மலையுச்சிகளில் 5000 அடி வரை ஏறிச் செல்ல வேண்டும். சில சமயம் காடுகளில் 600 அடி செங்குத்துப் பள்ளங்களில் இறங்கிக் கூட ஆராய்ச்சிகள் செய்துள்ளோம். டார்ஜான் மாதிரி செடி கொடிகள் இணைந்த கயிறுகளைப் பிடித்துத் தாண்ட வேண்டும். வழுக்குப் பாறைகளில் கம்புகளை ஊன்றி ஏறி இறங்க வேண்டும். ஒருமுறை நாங்கள் ஆராய்ச்சி மேற்கொண்டிருந்த குகைக்கு அருகில் இலை தழைகளால் ஆன ஒரு கூடு இருந்தது. அதைப் பற்றி விசாரித்தபோது அதில் ஓர் இராஜ நாகம் இருப்பதாகவும், தினமும் இரை தேடி அதில் வந்து தங்கிக் கொள்வதாகவும் சொன்னார்கள். எனக்கு இதைக் கேட்டவுடன் பகீர் என்றது. இருந்தாலும் அடுத்த நாள் பயத்தை விடுத்து சற்று எட்ட நின்று அந்த இராஜநாகத்தை ரசித்தேன்.

**உங்கள் ஆராய்ச்சியின் அரிய கண்டு பிடிப்புகள் பற்றி...**

வெளிநாட்டு ஆராய்ச்சியாளர், லட்டின் சலீமலி என்பவர் லட்டின் என்ற ஓர் அரிய வகை வெளவாலைக் கண்டுபிடித்து அது இந்தியாவிலேயே கிடையாது என்று அறிவித்திருந்தார். ஆனால் குற்றாலம் பக்கம் ஆறு மாதங்கள் தொடர்ந்து பள்ளம், குகை, வழுக்குப் பாறைகள் பார்க்காமல் ஆராய்ச்சி செய்து இந்தக் கூற்றைப் பொய்யாக்கி

**உங்கள் எதிர்காலத் திட்டங்கள்...?**

வெளவால்கள் என்றாலே தீயசக்தி, கெட்ட சகுனம் போன்ற தவறான எண்ணங்கள் இருக்கிறது. ஆனால் இது ஓர் அன்பான, அரிய பாலூட்டும் பறவை இனம். இந்த அரிய வகையைப் பாதுகாக்க நாம் உறுதிகொள்ள வேண்டும். அதற்கான பணிகளில் ஈடுபட வேண்டும் என்பதே!

தொகுப்பு: **ஆர்.பாலா**

படங்கள் : **சினி லோக், நெல்லை.**

# பொங்கி வழிந்த அன்னம்!

நவம்பர்-2 அன்னாபிஷேகம்

தஞ்சாவூர் கண்டியூர் அருகே உள்ளது திருச்சோற்றுத்துறை திருத்தலம். கலியுகத்தில் ஒருமுறை கலியுகத்தில் கடும் பஞ்சம் ஏற்பட்டு மழையின்றி மக்கள் தவித்தனராம். இறைவனைப் பிரார்த்திக்க, காய்ந்த வயல்களில் எல்லாம் பயிர் செழித்து நெல் மணிகள் விளைந்து குலுங்கியனவாம்.

நெல்மணிகளை அறுத்து மாளவில்லை. கூலி கொடுத்து கதிர் அறுக்க பணமின்றி மக்கள் வருந்தினர். அன்னபூரணித் தாயாரிடமும் சர்வேஸ்வரனிடமும் "சோறாக்க வழியில்லையே, இறைவா... பொங்கியச் சோறாக விளைவித்துத் தருவாயா?" என வேண்டினராம். அதுபோலவே வயல்வெளிகளில் எல்லாம் சாதம் பொங்கி வந்ததாம். அதனால்தான் இந்த ஊருக்கு திருச்சோற்றுத்துறை என்று பெயர் வந்தது. இத்தலத்தில் நவம்பர் 2009 இரண்டாம் தேதி திங்களன்று அன்னாபிஷேகம் நடக்கிறது.

அந்த நிகழ்ச்சியின் நினைவாக சகல சிவாலயங்களிலும் ஐப்பசி மாத பௌர்ணமியன்று அன்னாபிஷேகம் நடைபெறும். கங்கை கொண்டசோழபுரத்தில் நூறு மூட்டை அரிசி அன்னாபிஷேகம் செய்யப்பட்டு வருகிறது. அன்னா பிஷேகத்தன்று நிச்சயமாக மழை பொழியும் என்பது ஐதிகம்.

— **எம்.மாலதிமணியன், புதுச்சேரி.**






**பரண் மீது பொருள்களை வைக்கும்போது, எந்தெந்த பொருள்களை, எந்தெந்த பெட்டியில் வைத்தோம் என்பதை ஒரு டைரியில் குறித்து வைத்துக் கொண்டால், தேவைப்படும்போது எடுக்க வசதியாக இருக்கும்.**

**- ஜெ.விஜயலக்ஷ்மி, சேலையூர்.**



ஒரு காட்டின் மரக்கிளையில்

சில புறாக்குஞ்சுகள் வளர்ந்து வந்தன

ஒரு நாள், ஒரு பருந்துக்குஞ்சை

கவ்வி வந்த ஒரு பறவை,

தவறுதலாக அந்தப் புறாக் கூட்டில் அதைப் போட்டுவிட்டது. புறாக்களோடு சேர்ந்து வளர்ந்து வந்த பருந்து, தன்னை புறா என்று நினைத்துக் கொண்டது. இதனால் அந்தப் பருந்துக்கு உயரப் பறக்கக்கூடிய தன் ஆற்றல் தெரியவில்லை. அங்கு வந்த ஒரு வழிப்போக்கன், அந்தச் சின்னப் பருந்தைத் தூக்கி அதன் சிறகுகளை விரித்துப் பறக்க உதவினான். பறக்கப் பறக்க, மற்றப் புறாக்களை விட பல மடங்கு உயரத்தில் தன்னால் பறக்க முடிவதை உணர்ந்து, பரந்த வானத்தினை அனுபவித்து உல்லாசமாய்ப் பறந்தது.

6 உஷா ராமகிருஷ்ணன்

என் நோயைப் பற்றித் தெரிந்து கொள்ள முனைந்ததுதான். விடுமுறைக்குக் குழந்தைகளோடு கணவரிடம் சென்றேன். அங்கே இன்டெர்நெட்டில் ஸ்லீ பற்றித் தேடி நிறையப் படித்தேன்.

அதைப் படித்த போது ஒரு பிரமிப்பு, பீதி என்னை ஆக்கிரமித்துக் கொண்டது. என்னவெல்லாம் என் உடலினுள் நடக்கிறது, என்னவெல்லாம் நடக்கத் தவறியிருக்கிறது என்ற விவரங்களைப் புரிந்து கொண்டபோது, எவ்வளவு பெரிய ஆபத்தான, உயிரைக் கொல்லக்கூடிய நோயில் சிக்கிக் கொண்டிருக்கிறேன் என்பதைப் புரிந்து கொண்டேன்.

# சாரதா பேசுகிறேன்!

கடவுள், மனிதர்களைப் படைத்ததே தன் மூளைத்திறனை வைத்துக் கொண்டு அவன் ஏதாவது சாதிக்க வேண்டுமென்பதற்காகத்தான். சவால்களைத் தாண்டி பயனுள்ள வாழ்க்கை வாழாதவர்கள், அந்த பருந்துக் குஞ்சைப் போல தன் வலிமையை உணராதவர்கள்தானே தவிர, திறமையில் குறைந்தவர்கள் அல்ல. அந்தப் பருந்து மாதிரி தன் இனத்தோடு பழகும் எல்லாருக்கும் அவர்கள் மூலம் ஒரு பாதுகாப்பு உணர்ச்சியும், மகிழ்ச்சியும் கிடைக்கிறது. இந்தத் தெம்புதான், என் குடும்பத்தோடு மட்டுமல்லாமல் சைபர் ஸ்லீ குடும்பத்துடனும் எனக்குக் கிடைக்கிறது.

ஹிஸ்ட்ரக்டமி அறுவை சிகிச்சை முடிந்து எழுந்து உட்கார்ந்தவுடன் நான் முதலில் செய்யத் தொடங்கியது,

இன்டெர்நெட்டில் ஸர்ச் செய்யும் போது, எனக்குக் கிடைத்த ஒரு அற்புதமான வரப்பிரசாதம், இந்த நோயால் பாதிக்கப்பட்டவர்களோடு கிடைத்த அறிமுகம். இந்த ஸிஸ்டமிக் ஸ்லீராஸிஸ் பொறுத்தவரையில், பாதிப்புக்குள்ளாகியிருப்பவர்கள் குறைவு. மருத்துவ உலகத்துக்கே இன்னும் புதிராக இருக்கக்கூடிய ஒரு நோய் இது. அந்த வகையில் நான் கோடியில் ஒருத்தி எனும்போது, இந்த இன்டெர்நெட் அறிமுகம் அவசியமாகப்பட்டது.

தீராத நோயோடு போராடும் ஒரு பெண்ணின் தன்னம்பிக்கை ததும்பும் உண்மைக் கதை!

டாக்டர். ஆஷா, பி.எச்.டி. (ஸ்லீராஸிஸ் நோயாளிகள் மனோ தத்துவம் பற்றி பிரத்யேக ஆராய்ச்சி செய்திருக்கிறார்)



ஸ்லீ பெரும்பாலும் பெண்களைத்தான் தாக்குகிறது என்பதால், வீட்டின் ஆண்கள், இவளது பிரச்னையைப் புரிந்து கொள்ளாத நிலையில், அப்பெண் மன வேதனை அடைகிறாள்.

இதற்கு என்ன வழி? நோயாளி பலவீனமடையாமல் தன் அறிவைப் பயன்படுத்தி, வாழ்க்கையை செம்மைப்படுத்திக் கொள்வதற்கான முயற்சி எடுக்க வேண்டும். மனம் விட்டுப் பேசக்கூடிய தோழியிடமோ தன்னைப் புரிந்துகொள்ளும் ஒரு ஜீவனுடனோ, தன் மனத்தாங்கல்களைப் பகிர்ந்துக்கொள்ளலாம். அப்படிச் செய்யும்போது கொந்தளிக்கும் தவிப்பு சற்றே அடங்குகிறது. அய்யோ இறப்பு வந்து விடுமே என்று கலங்காமல், ஒவ்வொரு நாளையும் தைரியத்தோடும், இறைவன் மீது அசைக்க முடியாத நம்பிக்கையுடனும் வாழ்வது சிறந்தது; அவளது குடும்பத்தினரும், வேதனைகளைத் தாண்டி அவள் புன்னகை பூப்பதற்கான எல்லா முயற்சியும் எடுத்தால், அவள் அதிர்ஷ்டசாலி.

இதே நோய் இருக்கும் மற்றொருவர் பற்றி அதிகம் தெரிந்து கொள்ள முதலில் பயம் இருந்தது என்னவோ உண்மைதான். ஆனால், அவர்களது மருத்துவர், மருந்துகள், மனரீதியாக அவர்கள் படும் அவஸ்தைகள் போன்றவற்றைத் தெரிந்து கொள்வது பெரிய உதவியாக இருக்கும் என்றும் தோன்றியது.

**இ**ன்று பல்வேறு கண்டங்களில் என் ஸ்லீ குடும்ப நண்பர்கள் இருக்கிறார்கள். ஒரு ராக்ஷஸ நோயாக இது இருப்பதால், நாங்கள் இதற்கு ஸ்லீரோ 'டெமன்' என்று பெயர் வைத்திருக்கிறோம். எங்களுக்குள் ஒரு விசித்திரமான ஒற்றுமை இருப்பதால், நேரிடையாகப் பார்த்துக் கொள்ளாமலேயே இவர்களோடு ஒரு பந்தம் ஏற்பட்டு விட்டது. நாங்கள் பரிமாறிக் கொள்ளும் அனுபவங்களும் உணர்ச்சிகளும் மிகப் பெரிய டானிக்காக அமைகிறது.

**ஒ**ருமுறை என் கணவருடன் வெளிநாடு போக நேர்ந்தபோது, அங்கு வாழும் ஸ்லீ லைபர் நண்பர்கள் வெகு தொலைவிலிருந்தெல்லாம் என்னைப் பார்க்க வந்தார்கள். நெருங்கிய குடும்ப நண்பர்களை முதல் தடவையாக நேரே பார்த்த பரவசத்தில் உண்மையிலேயே எனக்குப் புல்லரித்தது. அதில் ஒருத்திக்கு 17 வயதில் ஸ்லீ வந்திருக்கிறது, இப்போது அவளுக்கு வயது 55. மண்டையில் இரண்டு அறுவை சிகிச்சைகளும் இரண்டு கான்ஸர் அறுவை சிகிச்சைகளும் நடந்திருக்கிறது; பேரன் பேத்திகள் எடுத்திருக்கிறாள்.

அவளுடைய அனுபவம் எனக்குத் தெம்பை அளிக்கிறது. அவளது மனவலிமையால், பெரிய பளு தூக்கும் சாம்பியன்களைக் காட்டிலும் பலசாலியாக என் கண் முன் தெரிகிறாள். என் உடல் சொல்வதைக் கேட்க வேண்டும் என்பதை எனக்குப் புரிய வைத்தவள் அவள்தான். ''ஓய்வு தேவை என்று உடல் கேட்கிறதா, கொடுத்து விடு'' என்பாள்.

எங்களுடைய இந்த நட்பு, ஆராய்ச்சியாளர்களுக்கும் மருத்துவர்களுக்குமே உபயோகமாக இருக்கிறது. ஸ்லீ பற்றி எனக்கு விஷய ஞானம் இருப்பதால், என் மருத்துவரே, 'உங்க சப்போர்ட் க்ரூப்ல புதுசா என்ன சொல்றாங்க? வேற கண்டங்களில் புதுசா என்ன மருந்து பரிசோதனைல இருக்கு?'' என்று என்னைக் கேட்பார்.

***(பேசுவேன்)***





**கண்டிப்பாகப் பயன்படுத்த வேண்டிய பொருள்கள் : நூடுல்ஸ்+தக்காளி**

# குக்கரி

**ரூ.250/- பரிசு பெறும் ரெஸிபிகள்!**

## நூடுல்ஸ் மன்சூரியன்

தேவையான பொருள்கள்:

நூடுல்ஸ் - 200 கிராம்,
தக்காளி - 3,
குடைமிளகாய், கேரட், காலிஃப்ளவர் - தலா 50 கிராம்,
வெங்காயம் - 1,
பச்சை மிளகாய் - 4,
இஞ்சி, பூண்டு விழுது - 1 டீஸ்பூன்,
சோயா சாஸ் - 2 டீஸ்பூன்,
அஜினோமோட்டோ - ½ டீஸ்பூன்
மசாலாப் பொடி - 3 டீஸ்பூன்,
மக்காச்சோள மாவு - ¼ கப்,
கொத்துமல்லி, உப்பு, எண்ணெய் - தேவைக்கேற்ப.



**குக்கரி க்வீன் போட்டிக்கு வந்து குவிந்த சமையல் குறிப்புகளைப் பொறுமையாக அலசி, சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்துத் தந்த வசந்தாவுக்கு நன்றி!**

செய்முறை:

நூடுல்ஸை சிறு துண்டுகளாக்கி கொதிக்கும் நீரில் போட்டு ஐந்து நிமிடங்கள் மூடி வைக்கவும். குடைமிளகாய், கேரட், காலிஃப்ளவர் மூன்றையும் பொடியாக நறுக்கி துளி உப்பு சேர்த்து வதக்கிக் கொள்ளவும்.

ஒரு வாயகன்ற பாத்திரத்தில் நூடுல்ஸை (நீரை வடித்து) போடவும். இத்துடன் சோள மாவு, மசாலாப் பொடி, வதக்கிய காய்கறிகள் சேர்த்துப் பிசைந்து சிறு சிறு உருண்டைகளாக்கி சூடான எண்ணெயில் பொரித்தெடுக்கவும்.

தக்காளியை வதக்கி

விழுதாக அரைக்கவும். வாணலியில் எண்ணெய் விட்டுப் பொடியாக நறுக்கிய வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி-பூண்டு விழுது, தக்காளி விழுது, உப்பு சேர்த்து நீர் வற்றும் வரை வதக்கவும். இதில் பொரித்தெடுத்த நூடுல்ஸ் உருண்டைகளை முக்கி எடுத்து, சோயா சாஸ், அஜினோமோட்டோ சேர்த்துப் பிரட்டி பொடியாக நறுக்கிய கொத்துமல்லித் தூவி கடச்கட சுவைக்கவும்.



- விஜயலக்ஷ்மி,
பெங்களூரு-54.

எண்ணெய் விட்டு துண்டுகளாக்கிய தக்காளியைப் போட்டு வதக்கவும்.

★ உருளைக்கிழங்கை மசித்துப் போட்டு, உப்பு, மிளகாய்த் தூள், கரம் மசாலா கலந்து நூடுல்ஸ் தூளையும் சேர்த்து சிறு உருண்டைகளாக்கவும்.

★ தோசைக்கல்லில் வெண்ணெயைத் தடவி சூடாக்கவும். ஒவ்வொரு நூடுல்ஸ் உருண்டையையும் பொட்டுக்கடலை மாவில் இலேசாகப் புரட்டி எடுத்து பருமனான வடைகளாகத் தட்டவும். சூடான தோசைக் கல்லில் நடுப்பகுதியில் சுற்றிலும் இடைவெளி

# க்வீன்!

## மிக்ஸ் அண்ட் மேட்ச் சமையல் போட்டி முடிவுகள்!



### நூடுல்ஸ் தக்காளி டிக்கி

**தேவையான பொருள்கள்:**

நூடுல்ஸ்- 1 பாக்கெட்,
தக்காளி -2,
மிளகாய்த் தூள் - ½ டீஸ்பூன்,
கரம் மசாலா - ¼ டீஸ்பூன்,
வேகவைத்த உருளைக் கிழங்கு - 1,
பொட்டுக்கடலை - 1 டேபிள் ஸ்பூன், (ஒன்றிரண்டாகப் பொடி செய்யவும்)
உப்பு - தேவைக்கு.
எண்ணெய் - 1½ டீஸ்பூன்,
வெண்ணெய் - ½ டேபிள் ஸ்பூன்

**செய்முறை:**

★ நூடுல்ஸை வாணலியில் வறுத்து ரவை போல தூளாக்கவும். வாணலியில்

விட்டு டிக்கிகளை வைத்து (தோசைக் கல்லின் மத்தியில் குழிவிடத்தில் வெண்ணெயைப் போடவும்). திருப்பித் திருப்பிப் போட்டு, பொன்னிறமாக வேகவைத்து, சூடாக வெங்காயச் சட்னியுடன் பரிமாறவும்.

- பிரேமா ராவ்,
ஸ்ரீரங்கம்.

## நூடுல்ஸ் பப்ஸ்

*தேவையான பொருள்கள்:*
மைதா- ¼ கிலோ,
டால்டா (அ) நெய்- 50 கிராம்,
நூடுல்ஸ்- 1 பாக்கெட்,
தக்காளி, குடைமிளகாய் - தலா 1,
வெங்காயத் தாள் - 1 கட்டு,
மஞ்சள் பொடி, மிளகாய்ப் பொடி, தனியா, சீரகப் பொடி - தலா 1 டீஸ்பூன்,
உப்பு,எண்ணெய் - தேவையான அளவு

*செய்முறை:*
சலித்த மைதாவில், உப்பு சேர்த்து, சுடவைத்த நெய் கலந்து பூரி மாவு போல் பிசைந்து, ஆறு மணி நேரம் ஊறவைக்கவும். நூடுல்ஸை வேகவைக்கவும். பின்பு வாணலியில் நறுக்கிய வெங்காயத் தாள், குடைமிளகாய், தக்காளி என்று ஒன்றன் பின் ஒன்றாகப் போட்டு வதக்கவும். அதனுடன் பொடிகளையும், உப்பும் போட்டு நன்கு வதக்கவும். வதங்கிய விழுதுடன் வெந்த நூடுல்ஸை சேர்த்து வதக்கி நன்றாக ஆற விடவும்.

ஊறிய மைதா மாவை, வட்டமாக இட்டு பப்ஸ் செய்து (பப்ஸ் வரவில்லையென்றால் சோமாசி பண்ணுவது போல் செய்து) அதில் நூடுல்ஸை வைத்து தண்ணீர் தொட்டு மூடவும்.

பத்து நிமிடம் கழித்து எண்ணெயில் போட்டு, பொன்னிறமாக வந்தவுடன் பொரித்தெடுக்கவும். கொத்துமல்லி சட்னி, சாஸுடன் சூடாகப் பரிமாறவும்.

**- கே.லக்ஷ்மி, கொல்கத்தா.**




**தொண்டை கட்டிக் கொண்டு பேச முடியாமல் அவதிப்படுபவர்கள் சுத்தமான தேனுடன், சுண்ணாம்பு கலந்து இரவில் படுக்கப் போகும்போது தொண்டையில் இரண்டு, மூன்று முறை பரவலாக தடவி வர விரைவில் குணமாகும்.**
**- அ.ஆனந்தி, போடிநாயக்கனூர்.**

## டொமேடோ நூடுல்ஸ்

*தேவையான பொருள்கள்:*
நூடுல்ஸ் - 1 கப்,
வெங்காயம் - 4,
பெரிய தக்காளி - 5
பெரியகுடை மிளகாய் - 1,
கேரட் - 2, பட்டாணி - 100 கிராம்,
மிளகுத் தூள், மஞ்சள் தூள், பட்டை, லவங்கம், முந்திரி பருப்பு- தேவைக்கு,
தேங்காய்த் துருவல்- 1/4 கப்,
உப்பு, எண்ணெய்- தேவைக்கு,
பனீர்த் துண்டுகள் - 100 கிராம்,
சதுரமாக வெட்டிய உருளைக்கிழங்கு - 1 கப்.

*செய்முறை:*
ஒரு கப் நூடுல்ஸுக்கு நான்கு கப் நீர் சேர்த்து அகன்ற பாத்திரத்தில் வேகவிடவும். சிறிது எண்ணெய் சேர்த்து நூடுல்ஸை அதிகம் வேகவிடாமல், தொட்டால் ஒட்டாமல் வரும்படி வெந்ததும் நூடுல்ஸை ஒரு வடிகட்டியில் ஊற்றி, நீரை வடிய வைக்கவும்.

வாணலியில் எண்ணெய் காய்ந்ததும் பொடியாக நறுக்கிய வெங்காயத்தைச் சேர்த்து வதக்கவும். பிறகு பொடியாக நறுக்கிய கேரட், குடைமிளகாய், உருளைக்



வெளிநாட்டுப் பயணம் செல்ல விரும்புகிறவர்கள் விமான நிறுவனங்களை அவ்வப்போது தொடர்பில் வைத்திருக்கவும். ஏனெனில், விமானக் கட்டண விலை அதிரடியாகக் குறையும் நேரத்தில் நாம் பதிவுசெய்து கொண்டால் செலவு பெருமளவு குறையும். பயணமும் இனிக்கும். - வி.சுஜாதா, திருச்சிராப்பள்ளி.



கிழங்கு, பட்டாணி சேர்த்து, சிறிது நீர் தெளித்து வேகவிடவும்.

தக்காளியை மிக்ஸியில் அரைத்து, வெந்த காய்களில் சேர்க்கவும். மஞ்சள் தூள், உப்பு சேர்க்கவும். கலவை நன்கு கொதித்ததும் மிக்ஸியில் அரைத்த முந்திரி, தேங்காய் விழுதைச் சேர்த்து இறக்கவும்.

சிறிது எண்ணெயில் பட்டை, லவங்கம் வறுத்து, அதில் பனீர் கட்டிகளை இருபுறமும் பிரவுன் கலரில் புரட்டவும். பிறகு, தக்காளிக் கலவையில் சேர்த்து, மிளகுத் தூள், நறுக்கிய பச்சை வெங்காயத்தை மேலே தூவவும். இக்கலவையில் வெந்த நூடுல்ஸ் சேர்த்துப் புரட்டவும். சுவையான டொமேட்டோ சாஸ் நூடுல்ஸ் தயார்.

**-பத்மாசனி, சென்னை-101.**

## நூடுல்ஸ் பீட்ஸா

**தேவையான பொருள்கள்:**
நூடுல்ஸ் - 2 பாக்கெட்,
வெங்காயம், தக்காளி - தலா 5,
பசலைக்கீரை - 1 கட்டு,
கெட்டித் தயிர் - ½ லிட்டர்,
துருவிய சீஸ் - ¼ கிலோ,
மசாலாப் பொடி - 2 டேபிள் ஸ்பூன்,
இஞ்சி- 1 துண்டு, பூண்டு - 8 பல்,
சிவப்பு மிளகாய் - 5,
உப்பு, எண்ணெய் - தேவையான அளவு.

**செய்முறை:** முதலில் தயிரை ஒரு மெல்லியத் துணியில் கட்டி மூன்று மணி நேரம் தொங்கவிடவும். இஞ்சி, பூண்டு, மிளகாய் இவற்றை அரைத்துக் கொள்ளவும். பசலைக் கீரையை உப்பு, மசாலாப் பொடி சேர்த்து வதக்கிக் கொள்ளவும். நூடுல்ஸை சிறிது உப்பு, எண்ணெய் விட்டு வேகவைத்துக் கொள்ளவும்.

வாணலியில் எண்ணெய் காய்ந்ததும், இஞ்சி, பூண்டு விழுதைப் போட்டு வாசனை போகும் வரை வதக்கவும். நறுக்கிய வெங்காயம், தக்காளி, சிறிது உப்பு போட்டு வதக்கி தனியாக எடுத்து வைத்துக் கொள்ளவும். துணியில் கட்டி வைத்திருக் கும் தயிர், நீரெல்லாம் வடிந்து பனீர் போல் இருக்கும். அதை உதிர்த்து வைத்துக் கொள்ளவும்.

ஒரு கண்ணாடி டிரேயில் எண்ணெய் தடவி நூடுல்ஸைப் பரவலாக ஒரு லேயர் போடவும். அடுத்து தக்காளி, வெங்காய கலவையைப் போடவும். அடுத்து தயிரைப் போடவும். நான்காவதாக வதக்கிய கீரையைப் போடவும். கடைசி லேயராக துருவிய சீஸைத் தூவவும்.

ட்ரேயில் இடமிருந்தால் இதே மாதிரி இன்னொரு அடுக்கும் போடலாம். மைக்ரோஅவனில் ட்ரேயை (சீஸ் உருகும் வரை) இரண்டு அல்லது மூன்று நிமிடங்கள் வைத்து எடுக்கவும். சுவையான நூடுல்ஸ் பீட்ஸா தயார்.

**- பாமதி நாராயணன், பெங்களூரு-61.**

**சென்ற இதழின் சுருக்கம்...**

சிறு வயதில் தந்தையை இழந்து பாட்டியிடம் வளர்ந்தவள் கமலம். சீரும், சிறப்புமாய் திருமணம் முடிந்து மகன், மருமகள் சகிதம் நீண்ட நாட்களுக்குப் பிறகு தமது சொந்த ஊருக்கு வந்து கொண்டிருந்தாள். முகத்தில் பூரிப்பிருந்தாலும், தன்னையும், தன் தாயையும் ஏமாற்றிய பங்காளிகளின் சூது மனதில் சுடவே, மனபாரத்தோடு ஊருக்குள் நுழைந்தாள்...

பெரிய அரசமரத்தடி. அதைத் தாண்டியதும் அல்லிக்குளம். தூரத்தில் அம்மன் கோயிலின் கோபுரம் தெரிந்ததும், ''தாயே மகமாயி!'' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டாள் கமலம்.

அவர்களது கரும்புத் தோட்டம் இருந்த இடத்தில், பல வீடுகள் முளைத்திருந்தன. தென்னந்தோப்பு காய்ந்து கிடந்தது. அடுத்த திருப்பத்தில் தாத்தாவின் வீடு தென்பட்டது. மூன்று கட்டு

# இன்னா



விசாலமான வீடு. ஒருகாலத்தில் பள பளப்பான தூண்களுடன் பரபரப்பாக இருந்த வீடு, இன்றைக்கு சுண்ணாம்பு பூச்சே காணாமல் இருண்டு கிடந்தது. வாசலில் இரண்டொரு கோழிகளை தவிர நடமாட்டமே இல்லை.

''பெரியம்மா!'' என்று அழைத்தபடி உள்ளே நுழைந்தாள் கமலம்.

''வாம்மா கமலம்! வாங்க மாப்பிள்ளை!''

''பெரியப்பா போனப்போ வந்தே. பெரியம்மா. உட்காருங்க பேசுவோம். உங்க பிள்ளைங்க, பேரனுங்க எல்லாம் என்ன பண்றாங்க?''

''என்ன பண்ணுவாங்க? உப்பைத் தின்னவங்க தண்ணி குடிக்கிறாங்க. உன்னையும் உன் அம்மாவையும் ஏமாத்தின பாவம்.. என் வயித்துல பொறந்த எதுவும் விளங்கலை. குடி, கூத்தின்னு ஒருத்தன் அழிஞ்சான். இன்னொருத்தன், பெண்டாட்டி பேச்சைக் கேட்டு வயலை வித்து ஹோட்டல் வைச்சான். அதுவும்

# செய்தாரை...

## மினி தொடர் 2

இப்பவாவது வர தோணுச்சே!'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டாள் செல்லம்மா.

முதுகு கூன் போட்டு வளைந்து இருக்க, ஆளே துரும்பாகி விட்டிருந்தாள் செல்லம்மா.

''ஷி ஈஸ் நியரிங் எய்ட்டி ஃபைவ்!'' என்று பேத்தியிடம் கிசுகிசுத்தார் ராஜாராமன்.

கமலத்தின் பிள்ளைகளும் பெண்ணும், தத்தம் குடும்பத்தினருடன் தனது கால்களில் விழுந்து வணங்க, நெகிழ்ந்து போய் நின்றாள் செல்லம்மா.

பழம், பூ, இனிப்பு, வெளிநாட்டுப் பொருள்கள் என ஏதேதோ பரிசுகளை அவளது கையில் கொடுத்தாள் கமலம்.

''அண்ணனுங்க எங்க?'' விஜயகுமார் கேட்க...

''எல்லாம் கோயில்ல இருக்காங்க. காப்பி சாப்பிட்டு நாம்பளும் அங்க போகலாம்!'' என்றவளைக் கையமர்த்தினாள் கமலம்.

''ஒண்ணும் வேணாம் நஷ்டமாயிடுச்சு. மூணாவது பையன் எங்கிருக்கான்னே தெரியலை. ஏதோ பெரியவன் பையன், சின்னதா சைக்கிள் கடை வெச்சிருக்கான். அதுல வர்ற வருமானத்தில வயித்து பாடு ஓடுது!''

சூழ்நிலையின் கனத்தை கலைக்க விரும்பியவராய், ''ஏம்மா... இப்படியே உட்கார்ந்துட்டா எப்படி? மாரி அம்மன் உனக்காக காலையிலேயிருந்து ஆவலா வெயிட்டிங்!'' என்று ராம்குமார் சொல்ல சிறிய கலகலப்புடன் எல்லோரும் கிளம்பினர்.

வழியெங்கும் கமலத்துக்கு வரவேற்பு இருந்ததைப் பார்த்து ஆச்சர்யப்பட்டாள் மூத்த மருமகள் லக்ஷ்மி.

''சின்ன ஆண்டை பொண்ணு கமலம் வந்திருக்கு.''

''காரு வந்ததே! அவங்கதானா?''

''சின்னப் பொண்ணா பாத்தது.. இப்ப நிறைஞ்ச கழுத்துகாரியா பாக்கறேன்... நல்லா இரும்மா!''

ஊர் மக்களின், உறவுகளின் அன்பில் கரைந்து திளைத்தாள் கமலம்.

பி.காந்திமதி

**கோ**யில் நெருங்கியது. மாந் தோரணமும், பூ அலங்கரிப்புமாக அந்த இடமே களைகட்டியிருந்தது. மேள தாளம், பொங்கல் புகை, ரங்கராட்டி னம், ஐஸ் வண்டிகள், வளையல், பொரி கடை, பலூன் சத்தம், லவுட்ஸ்பீக்கர், காவடி, கரகம்...

கமலத்தின் பேத்திகளுக்கு எல்லாமே அதிசயமாய்பட்டது. ''இட்ஸ் எக்ஸைட் டிங் அப்பா.''

சன்னிதியின் முன்பாக நின்றார்கள். சர்வலோக நாயகியாக பராசக்தி சந்தன காப்பில், வைர நகைகளுடன் ஜொலித் துக் கொண்டிருந்தாள். அந்தக் கண்களும் முறுவலிப்பும் அம்மனை பேரழகியாகக் காட்டியது.

''எங்க ஊர் அம்மனைப் பாத்தீங் களா? எவ்வளவு அழகு? வைச்சக் கண்ணை எடுக்க முடியாது. கமலம், பக்தியில் பரிதவித்தாள்.

ஆலு மேத்தி (உருளைக்கிழங்கு - வெந்தயக் கீரை) செய்யும்போது, கடைசி யில் ஒரு கரண்டி பால் விட்டு வதக்க வேண்டும். வெந்தயக்கீரையின் கசப்பை, அந்தப் பால் எடுத்துவிடும்.

- பானுசந்தர், கோட்டூர்.



''அம்மா, உண்டியல்ல போட ணும்னு பணம் கேட்டீங்களே!'' என்ற படி, பத்தாயிரம் ரூபாய் நோட்டுக் கட்டு ஒன்றை நீட்ட கமலம், அதை வாங்கி கைப்பையில் வைத்துக் கொண்டாள்.

நேரம் போனதே தெரியாத பேச்சு. விருந்து, தாம்பூலம் எல்லாம் முடிந்தது. செல்லம்மாவின் பிள்ளைகளுக்கும் குடும்பத்தினருக்கும் கமலம் வந்ததில் அவ்வளவு மகிழ்ச்சி.

''அடிக்கடி வந்து போயிட்டிருங் கப்பா!'' என்று மனதார அழைத்தார்கள்.

''புறப்படலாமா கமலம், பூஜைக்கும் போயிட்டுக் கிளம்ப சரியாயிருக்கும்!'' என்று ராஜாராமன் குரல்கொடுக்கவும் கடைக்குட்டி பேத்தி ஜானகி, எல் லோருக்கும் குங்குமம் கொடுத்தாள்.

''ஜானி, நல்லா படிக்கிறா.. இந்த வருஷம் டவுன் ஸ்கூல்ல சேர்க்கணும்னு அடமா இருக்கா.. ம்... இங்க யாருக்கு அவ்வளவு வசதியிருக்கு?'' செல்லம்மா முணுமுணுத்தாள்.

**பா**லியெஸ்டர் பாவாடை. பஃப் வைத்த கை. நீண்ட ஜடை! குதித்து கும் மாளம் ஆடும் அந்தப் பத்து வயதுப் பெண்ணையே பார்த்த கமலம், தன் னைப் பார்ப்பது போலவே உணர்ந்தாள்.

தன் கைப்பையிலிருந்த பத்தாயிரம் ரூபாயை எடுத்து அவளது கையில் வைத்த கமலம், அன்புடன் இழுத்து அணைத்து முத்தமிட்டாள்.

''நீ நல்லா படி. எவ்வளவு வேணா படி. பாட்டி படிக்க வைப்பேன்!'' என்று உறுதியாகச் சொன்னாள் .

ராம்குமார், அம்மாவைத் திரும்பிப் பார்த்தான். காலையில் தீபங்களின் ஒளியில் தரிசித்த அம்மனின் முகத்தை விட, அந்த நிமிடத்து அம்மாவின் முகம், அழகாக இருப்பதாக அவனுக் குத் தோன்றியது.

(நிறைந்தது)

# ரூ.15,000 பரிசு

## சேலை சேலஞ்ச் - 1 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலிகள்!



விடைகள்:

1. பனாரஸ் பட்டு. 2. 60:40 3. நீலம் 4. 6.20 மீ 5. கர்நாடகம்

ரூ.1500 மதிப்புள்ள பாலம் சில்க்ஸ் வழங்கும் பரிசுக் கூப்பன்களை பெறும் அதிர்ஷ்டசாலிகள்:

1. வி.எஸ்.பத்மாவதி, சென்னை, 2. எஸ்.மீரா, வேலூர், 3. எஸ். விஜயலக்ஷ்மி, ஸ்ரீரங்கம், 4. பெ.சுமதி, கல்பாக்கம், 5. பி.சித்ரா, சின்ன காஞ்சிபுரம், 6. ஜி.லக்ஷ்மி, கிருஷ்ணகிரி, 7. இ.இந்திராணி, தஞ்சாவூர், 8. ஆர்.செண்பகவல்லி, சென்னை; 9. இந்திரா, பெங்களூரு; 10. எம்.மோகனா, திருவாரூர்.

நவம்பர் பதினைந்தாம் தேதிக்குள் பரிசுக் கூப்பன்கள் அனுப்பி வைக்கப்படும். தங்களுக்குக் கூப்பன் கிடைத்ததும் கடிதம் (அ) தொலைபேசி மூலமாக எங்களுக்கு தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம். (ஆர்.)

# வாழ்வேன் முதலாளியாய்!

**மை** போன்ற நிறத்துக்கு ஒரு லட்சம்
ஒன்றரைக் கண்ணுக்கு ஒரு
லட்சம் - எனது
தெற்றுப் பல்லுக்கு ஒரு லட்சம் என்று
விலை பேசும் விலைமகனே...
லட்சியமில்லா உன்னிடம்
லட்சங்களைக் கொடுத்து
அடிமையாய் வாழ்வதை விட
வங்கியிலே போட்டு - வரும்
வட்டியிலே முதலாளியாய்
வாழ்வேன் காலமெல்லாம்!




- ஏ.சக்திமதி, நாகை.

**இந்தியாவின் மிகச் சிறந்த பின்னணிப் பாடகிகளில் ஒருவர். கடந்த அறுபத்தைந்து ஆண்டுகளாகத் திரைப்படங்களில் பாடிக் கொண்டிருப்பவர். இருபத்தி ஐந்தாயிரம் பாடல்களுக்கு மேல் பாடி, கின்னஸ் புத்தகத்தில் இடம்பிடித்திருப்பவர். இருபத்தி இரண்டு மொழிகளில் பாடியவர். இந்தியாவின் மிக உயர்ந்த 'பாரத ரத்னா' விருது பெற்ற இரண்டாவது பாடகி.**

**இத்தனை பெருமைகளும் கொண்ட லதா மங்கேஷ்கர், அண்மையில் தனது எண்பதாவது பிறந்த நாளைக் கொண்டாடினார். இந்தித் திரைப்பட உலகமே இதனைக் கொண்டாடி மகிழ்ந்தது.**

**ல**தா மங்கேஷ்கர், மத்திய பிரதேசத்தில் இந்தூரில் பிறந்தவர். இவருடைய அப்பா தீனநாத் மங்கேஷ்கர் பாடகர் மட்டுமின்றி, நாடக நடிகரும் கூட. அம்மா பெயர் சுதாமதி. இவர்களின் சொந்த ஊர் கோவாவைச் சேர்ந்த மங்கேஷி என்பதால், ஹார்திகர் என்ற தமது குடும்பப் பெயரை மங்கேஷ்கர் என்று தீனநாத் மாற்றிக் கொண்டார்.

இந்தத் தம்பதியரின் மூத்தமகள் ஹிருதயா. ஆனால் தீனநாத் 'பாவ்பந்தன்' என்ற நாடகத்தில் நடித்தபோது அதன் கதாநாயகி லாதிகாவின் பெயரால் கவரப்பட்டு, ஹிருதயாவின் பெயரை லதா என்று மாற்றிவிட்டார். லதாவுக்கு ஆஷா, உஷா, மீனா என்று மூன்று தங்கைகள். ஹிருதயநாத் என்று ஒரு தம்பி.

**ஐ**ந்து வயதில் பள்ளிக் கூடத்தில் சேருவதற்கு முன்பிருந்தே தன் அப்பாவிடம் இசை கற்கத் தொடங்கிய லதா, பள்ளியில் சேர்ந்த முதல் நாள் வகுப்பில் மற்ற குழந்தைகளுக்கு பாட்டு சொல்லிக் கொடுக்க, அதைப் பார்த்த ஆசிரியர், லதாவை கோபித்துக் கொண் டார். ''இனிமேல் நான் ஸ்கூலுக்குப் போக மாட்டேன்'' என்று சொல்லிவிட்டார் லதா. ஆக ஒரு நாள் படிப்புடன் அவரது பள்ளி வாழ்க்கை முடிந்து விட்டது.

1942ல் லதா மங்கேஷ்கருக்கு பதின்மூன்று வயதான போது அவருடைய அப்பா, இதய நோய் காரணமாக இறந்துவிட்டார். அதன் பிறகு, 'நவயுகா' திரை நிறுவன உரிமையாளரும், மங்கேஷ்



கர் குடும்பத்துக்கு நெருங்கிய நண்பருமான வினாயக் தாமோதர் தான் அந்தக் குடும்பத்தை அக்கறையுடன் கவனித்துக் கொண்டார்.

வினாயக் தாமோதரின் கம்பெனி மும்பைக்கு இடம் பெயர்ந்தபோது, லதாவின் குடும்பமும் மும்பையில் குடியேறியது. லதா ஹிந்துஸ்தானி இசை கற்றுக் கொண்டார். இசை




யமைப்பாளர் ஹைதர், சசிதர் முகர்ஜி என்ற தயாரிப்பாளரிடம் லதாவை அறிமுகப்படுத்திய போது, ''குரல் கனீரென்று இல்லை'' என்று நிராகரித்துவிட்டார். ஆனால், ஹைதர் இசையில் மஜ்பூர் படத்தில் லதா மங்கேஷ்கர் பாடிய ''தில் மேரா தோடா' என்ற பாடல் அவரது வாழ்க்கையில் ஒரு பெரும் திருப்புமுனையாக அமைந்தது.

ஐம்பதுகளில் நௌஷத், ஷகர்-ஜெய்கிஷன், எஸ்.டி. பர்மன், ராமசந்திரா, சலீல் சௌத்ரி இவர்களின் இசையில் பாடத் தொடங்கிய லதா மங்கேஷ்கர் இன்று ஏ.ஆர். ரஹ்மான் வரை நூற்றுக்கும் மேற்பட்ட இசையமைப்பாளர்களின் படங்களில் பாடி விட்டார்.

1958-ல் சலீல் சௌத்ரி இசையில் மதுமதி படத்தில் பாடி, முதல் முறையாக ஃபிலிம்ஃபேர் விருது பெற்றார். 1969க்குள் நான்கு முறை ஃபிலிம்ஃபேர் விருது பெற்றவுடன், ''இனி எனக்கு விருது கொடுக்காதீர்கள்; திறமையான இளையதலைமுறையினருக்கு விருதளித்து ஊக்கப்படுத்துங்கள்'' என்று கூறிவிட்டார். பல்வேறு அமைப்புகளும், பல்கலைக்கழகங்களும் விருதுகளும், டாக்டர் பட்டமும் அளித்து லதா மங்கேஷ்கரை, கௌரவப்படுத்தி இருக்கின்றன. மகாராஷ்டிரா மற்றும் மத்தியப் பிரதேச அரசுகள் லதா மங்கேஷ்கரின் பெயரில் விருதுகளை ஏற்படுத்தியுள்ளன.

இந்தியாவுக்கும், சீனாவுக்கும் இடையில் போர் நிகழ்ந்த பின்னணியில் அன்றைய பிரதமர் நேருஜியின் முன்னிலையில், ராமசந்திரா இசையில், ''ஓ, என் நாட்டு மக்களே!'' என்ற பாடலைப் பாடியபோது, நேருஜி மனம் கசிந்து கண்ணீர் விட்டார்.

ராஜ்யசபா உறுப்பினராக லதா மங்கேஷ்கர், நியமிக்கப்பட்டார். ஆனால் அவர் ராஜ்யசபா கூட்டங்களுக்கு வருவதில்லை என்று விமர்சனம் எழுந்தது. அதற்குக் காரணம் தன் உடல்நிலை தான் என விளக்கம் அளித்ததுடன், ராஜ்யசபா உறுப்பினருக்கு உரிய ஊதியம் அலவன்ஸ் போன்றவற்றையும் அவர் பெற மறுத்துவிட்டார்.

2001 ஆம் வருடம் அவருக்கு பாரத ரத்னா விருது வழங்கப்பட்டது. அதே ஆண்டு, பூனாவில் தன் தந்தையார் பெயரில் ஒரு மருத்துவமனையைத் துவக்கினார். அறுபதுகளில் 'ஆனந்த் கான்' என்ற புனைபெயரில் ஐந்து மராத்தி திரைப்படங்களுக்கு இசையமைத்திருக்கிறார். அவற்றில் ஒரு படத்துக்கு மகாராஷ்டிரா அரசாங்கத்தின் சிறந்த இசையமைப்பாளர் விருதும் பெற்றிருக்கிறார். இது தவிர நான்கு திரைப்படங்களையும் தயாரித்திருக்கிறார்.

**-எஸ்.சந்திரமௌலி**

Only for Ladies

NO Pain
NO Strain
Only comfort

Rishithaa Slim & Caare

NO Gym Exercises
NO medicines
NO side effects

# உடல் பருமனில் இருந்து முழுமையான விடுதலை...

அழகாகவும் கவர்ச்சியாகவும் விளங்க விரும்புகிறீர்களா?
மனம் விரும்பும் ஆடைகளை அணிந்து மகிழ விரும்புகிறீர்களா?
மற்றவர்களின் மதிப்பையும் பாராட்டையும் பெற விரும்புகிறீர்களா?
உற்சாகத்துடன் வலம் வர விரும்புகிறீர்களா...?



**இவற்றிற்கு உங்கள் உடல் பருமன் தடையாக உள்ளதா...? கவலை வேண்டாம்...**

உங்களுக்கு உடல் பருமனில் இருந்து விடுதலை பெற்றுத் தரதயாராக இருக்கிறது

## ரிஷிதா ஸ்லிம் அண்ட் கேர்

உடற்பருமனுக்கு முழுமையான தீர்வு...

**Wholesome treatment on body, mind, soul... For fighting obesity...**

## ரிஷிதா ஸ்லிம் அண்ட் கேர்

இது ஒரு ஜிம் அல்ல... உடலை வருத்தும் உடற் பயிற்சிகள் இல்லை... சுலபமான, சுகமான, எளிதான சிகிச்சை முறைகளைக் கொண்டது...

Belly Reduction, Arm Reduction, Thigh Reduction...

தொப்பை ,தொடை, கைகள் போன்ற குறிப்பிட்ட பகுதிகளில் பருமன் குறைய, அந்தந்த பகுதிகளுக்கு மட்டும் தரப்படும் அற்புத சிகிச்சை... Tapping, Toning போன்ற தரமான சிகிச்சைகள் இம்போர்டெட் கருவிகள் மூலம் தரப்படும்...மேலும் Face Lifting எனப்படும் இளமைத் தோற்றத்திற்கான சிகிச்சை... மேலும் கண்களின் கீழுள்ள கருவளையங்களைப் போக்கும் சிகிச்சை...
உடல் பொலிவிற்கான மண் சிகிச்சை எனப்படும் Mud Therapy...

நடுத்தரவர்க்கத்தினருக்கும், வறுமையில் வாடுபவர்களுக்கும் வேலை ஒரு வரப்பிர சாதம். வெளியில் பலதரப்பட்ட மனிதர்களு டன் பழகும்போது தாய்க்குக் கிடைக்கும் பட்டறிவும், பரந்தமனப்பான்மையும் குழந்தை களுக்கும் பயன்படும்.

- மாலதி, மயிலாடுதுறை.

தாய்மார்கள் வேலைக்குப் போவதால் குழந்தைகளுக்குப் பயன்தான். தைரியமாக இருக்கப் பழகுவதோடு, நேரம் தவறாமையும் பழகுகிறார்கள். நட்புவட்டத்தை பெருக்கிக் கொள்கிறார்கள். புரிதல், விட்டுக் கொடுத்தல் போன்ற நல்ல பழக்கங்களும் குழந்தை

# தாய்மார்கள் வேலைக்குப் போவதால் குழந்தைகளுக்




சகோதரிகள் அவரவர் அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டிருக்கின்றனர். சில ருக்கு, 'இக்கரைக்கு அக்கரை பச்சையா'கத் தோன்றுகிறது. அவரவர் தரப்பை வலுப் படுத்த சுட்டிக்காட்டப்பட்ட கருத்துக்கள் ஒவ்வொன்றும் அருமையாக இருக்கிறது. வீட்டிலிருக்கும் தாய்-குழந்தை உறவில் பாசப்பிணைப்பும் பராமரிப்பும் வலுவாக இருக்கும். குழந்தை யின் உடல்நலம், கல்வி என ஒவ்வொன் றையும் அருகிலிருந்து கவனிக்க முடியும் என்கிறது ஓர் அணி. இரட்டிப்பு வருமானத்தால் தரமான கல்வி அளிக்க முடி யும். பல கலைகளையும் கற் பிக்க முடியும். குழந்தைகள் பொறுப்பாக வளருவார்கள் என்கிறது மற்றொரு அணி.

இரண்டு தரப்பிலும் நல்லதும் உண்டு, அல்லாததும் உண்டு என்பதால் தீர்ப்பு சொல்வது கடினம்தான். வேலைக்குப் போகாத பெண்கள் சிலர் வெட்டிப் பொழுது கழித்து, தொலைக் காட்சிப் பெட்டியில் தொலைந்து போவதை யும், வேலைக்குப் போகும் பெண்கள் சிலர், வெகு திறமையாக குடும்பத்தையும், வேலையையும் சமாளிப்பதையும் நாம் பார்த்திருக்கிறோம்.

வருங்காலத்தில் வேலைக்குப் போகும் பெண்களின் எண்ணிக்கை இன்னும் அதி கரிக்கும். இன்றையச் சூழலில் வீடு, வேலை இரண்டையும் அழகாக நிர்வகிக்கும் ஜாலத்தை அவர்கள் கற்றுக் கொள்ள

வந்து குவிந்த கடிதங்களைப் படித்து, நடுவராக இருந்து, அருமையான தீர்ப்பு சொன்ன பிருந்தா ஜெயராமனுக்கு ஜே!

களுக்கு ஏற்படுகிறது.

- லக்ஷ்மி ரங்கநாதன்,
சென்னை-18

**நா**ணயத்துக்கு இரு புறம் போல, நல்லது, தீயது கலந்துதான் இருக்கும்.



**பயன்**

குழந்தைகள் தங்கள் வேலைகளைத் தானாகவே செய்யப் பழகுவதோடு, பொறுப்புணர்வு, தன்னம்பிக்கை வளர்கிறது. எதிர்பாராமல் வரும் ஆபத்துகளை, தைரியமாக எதிர்கொண்டு, சமாளிக்கத் தெரிந்து கொள்வது பயன்தானே!

-உமா நடராஜ், சென்னை-61

# ...யனா? பாதிப்பா?

வேண்டிய நிர்ப்பந்தம். குழந்தை வளர்ப்பில் வரும் சவால்களைச் சமாளிக்கப் பெண்கள், தங்களைத் தயார் செய்துகொள்ள வேண்டும்.

குழந்தையின் உணர்வுப்பூர்வமான தேவைகளைப் புரிந்து கொண்டு அவற்றைப் பூர்த்தி செய்தால்தான் குழந்தையின் ஆரோக்கியமான வளர்ச்சிக்கு அடிகோல முடியும். சரியான வளர்ப்பு முறை, ஆரோக்கியமான வீட்டுச் சூழலை அமைத்துக் கொடுத்தல், நல்ல முன் உதாரணமாகச் செயல்படுதல், இவை ஒரு தாய்க்கு அவசியம். இப்படித் தயார் செய்து கொண்ட தாய், குழந்தைகளைப் பொறுப்பாகவும், தன்னைச் சார்ந்து வாழாமலிருக்கவும் பழக்குவாள். இதற்கு வீட்டில்தான் இருக்க வேண்டும் என்று அவசியமில்லை. குழந்தைகளைப் புரிந்து கொண்டாலே போதுமானது. குழந்தைகளுடன் செலவழிக்கும் நேரம் கொஞ்சமே என்றாலும் உறவை பலப்படுத்திக் கொண்டு, வழி காட்டுதலும் செய்வாள்.

**தா**ய் வேலைக்குப் போகும் பட்சத்தில், தந்தையின் அல்லது தாத்தா, பாட்டியின் பங்களிப்பு மிக அவசியம். அது இயலாதென்றால், நல்ல 'ப்ளே

**இ**ல்லத்தரசியாக வீட்டில் இருந்தபடியே டியூஷன், தையல், இசை கற்றுக் கொடுப்பதுடன், கணவரையும், மற்றவர்களையும் கவனித்து மகிழ்ச்சியுடன் இருக்கலாம். தாய்ப்பாசத்தை ஊட்டி வளர்த்த குழந்தைதான் நமது எதிர்கால இந்தியா.

- ஆர்.மல்லிகா, பல்லடம்.

'**ப**ணம்' எனும் மூன்றெழுத்துக்காக வேலை, வேலை எனும் இரண்டெழுத்தின் பின் ஓடி ஓடி களைத்து, அன்பு, பாசம், சுகம் எனும் மூன்றெழுத்துக்களையும் 'நிம்மதி' எனும் நான்கெழுத்தையும் 'தொலைப்பது'தான் நிதர்சன உண்மை. தாய்மார்கள் வேலைக்குச் செல்வதால் குழந்தைகளுக்கு குழந்தைப் பருவம் முதல், அனைத்துப்



**பாதிப்பு**

ஸ்கூல் 'க்ரீச்' ஆகியவை குழந்தையின் வளர்ச்சிக்கு உதவும். தந்தைகள் 'ஈஸிசேரி'ல் உட்கார்ந்துகொண்டு பேப்பர் படிக்காமல் குடும்பப் பொறுப்புகளில் ஐம்பது சதவிகிதம் ஏற்றாக வேண்டும்!

**இ**ன்றைய இளையதலைமுறைக்கு வாழ்க்கை எளிதாக இருக்கப் போவதில்லை. படிப்பறிவை விட பட்டறிவு நிறைய கற்றுக் கொடுக்கும். தாய் வேலைக்குப் போகும்போது, கடினமான வாழ்க்கையை எதிர்நோக்க, அவர்கள் பயிற்றுவிக்கப்படுகிறார்கள். தனியாகச் சூழ்நிலை களைச் சமாளிக்க நேரும்போது தவறுகள் செய்தாலும், அது பாடம் கற்றுக் கொள்ளும் சந்தர்ப்பமாக அமையும்.



தாய்மார்கள் வேலைக்குப் போவதால் சின்னச் சின்னப் பாதிப்பு இருந்தாலும் நாள டைவில் குழந்தைகளுக் குப் பெரிய நன்மை களையும், இனிய வாழ்க் கையையும் அமைத்துக் கொடுக்கும்போது சந்தோஷமே இருக்கும். எனவே, என்னு டைய கருத்து... படித்ததில் உங்களுக்கே புரிந்திருக்குமே...



**கு**ழந்தைகள் கிணற்றுத் தவளை களாகி விடாமல் சிந்தித்துச் செயல் பெறுவதற்கு வேலைக்குச் செல்லும் தாய் உதவுகிறாள் என்பதை மறுக்க முடியுமா?

**- ராஜேஸ்வரி கிட்டு, பெங்களூரு.**

**க**ல்வி அறிவு வளர, விளையாட்டில் சிறந்து விளங்க, கலைகளில் தேர்ச்சி பெற என்று பல வகுப்புகள் இப்போது உண்டு. குழந்தைகளின் புத்திசாலித்தனத்தைப் பட்டைத் தீட்டி வைரமாக ஜொலிக்க வைக்க, தாய்மார்களும் வேலைக் குச் சென்று பணம் சம்பாதிப்பதால் தானே முடிகிறது?

**- கீதா, மைலாப்பூர்**

பருவங்களிலும் பாதிப்புதான் என்பதே என் ஆணித்தரமான கருத்தாகும்.

**- எஸ்.விஜயலக்ஷ்மி, ஆதம்பாக்கம்**

**தா**ய் வேலைக்குச் செல்வதால் அந்த வயதில் கிடைக்க வேண்டிய அன்பும், அர வணைப்பும், ஆதரவான பேச்சும் இல் லாமல் குழந்தை பிடிவாதக்கார னாகவும், சுயநலமுள்ளவனாக வும் மாறுவதைப் பல இடங் களில் பார்க்கிறோம். குழந்தை களுக்குத் தேவையான வயதில் அவர்களுடன் இல்லாமல் சம் பாதிப்பது அவனுக்காகத்தானே என்ற



வாதம் சரியல்ல.

**-சரஸ்வதி, செகந்திராபாத்.**

**எ**திர்காலம் எதிர்காலம் என்று எதிர்காலத் திற்காகச் சேமிக்கிறார்கள். நிகழ்காலத்தில் குழந்தைகளைப் பட்டினி போட்டு, எதிர் காலத்தில் தலைவாழை இலை போட்டு வகை வகையாய்ப் பரிமாறுகிறேன் என்று சொல்லும் பொறுப்பற்ற செயல்தான் வேலைக்குச் செல்வது!

**- லட்சுமி சுதாகரன், திருச்சி-21.**

**தா**ய்மார்கள் வேலைக்குப் போவதால் குழந்தைகள் தாயின் அரவணைப்புக்கும், அன்புக்கும் ஏங்கி விடுவார்கள். டென்ஷன், எரிச்சல். பணமா, பாசமா என்றால் பாசம்தான் தேவை.

**- ஜெயா, ராஜபாளையம்.**



# இதப்படிங்க முதல்ல!

**வரதட்சணைக் கொடுமை, குடும்ப வன்முறையிலிருந்து பெண்களைப் பாதுகாத்துக் கொள்ளும் சட்டம் பற்றிய கட்டுரையைப் படித்தேன். இது வீட்டிற்கு உள்ளே நடக்கும் கொடுமை. வீட்டிற்கு வெளியே ஒரு பெண், தன்னைப் பாதுகாத்துக் கொள்ள சட்டம் என்ன சொல்கிறது?**

**ச**மீபத்தில் பூனாவில் நடந்த சம்பவம் இது. மாலை நேரத்தில் ஒரு பையனும், இளம்பெண்ணும் ஸ்கூட்டரில் வந்து கொண்டிருந்தபோது, ஒரு போலிஸ் அதிகாரி அவர்களை நிறுத்தி (மஃப்டியில்) லைசென்ஸ் கேட்டிருக்கிறார். லைசென்ஸ் இல்லாததால் அவனை லைசென்ஸ் கொண்டு வரும்படி அனுப்பிவிட்டு அந்த இளம் பெண்ணை போலிஸ் ஸ்டேஷனுக்கு வரும்படி உத்தரவிட்டார். பயந்துபோன அந்தப் பெண், அதிகாரியின் பின்னால் சென்றிருக்கிறாள். ஆனால், அவளை போலிஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லாமல் தவறான இடத்துக்கு அழைத்துச் சென்றிருக்கிறார்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் நீங்கள் மாட்டிக் கொண்டால் என்ன செய்ய வேண்டும்?

★ மாலை ஆறு மணியிலிருந்து காலை ஆறு மணி வரை பெண்களைக் கைது செய்யக்கூடாது. அதனால் வர முடியாது என்று மறுக்கலாம்.

★ ஒரு பெண்ணைக் கைது செய்ய மற்றொரு பெண் போலிஸ் அதிகாரிக்குத்தான் (அரெஸ்ட் வாரண்ட் இருந்தால்) அனுமதி உண்டு. அப்படியே கைது செய்தாலும், மகளிர் காவல் நிலையத்திற்குத்தான் அழைத்துச் செல்ல முடியும்.

★ ஆண் போலிஸ் அதிகாரி, அரெஸ்ட் வாரண்டுடன் வந்தாலும் கூடவே ஒரு பெண் போலிஸ் இருக்கிறாரா என்று கவனிக்க வேண்டும். மாலை நேரத்தில் ஒரு பெண்ணை மிரட்ட எந்த போலிஸ் அதிகாரிக்கும் உரிமை இல்லை. பெண்களுக்கு வீட்டிற்குள்ளே மட்டுமல்ல. வெளியேயிருக்கும் பாதுகாப்பு பற்றியும் அறிந்திருக்க வேண்டியது நமது கடமை.

**- சியாமளா சுவாமிநாதன், திருவனந்தபுரம்.**

**வாசகர் பூமராங்**



• ஸ்ரீ தண்டாயுதபாணி

ஈரோடு மாவட்டம், பெருந்துறை வட்டம், சென்னி மலையில் உள்ளது அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில். சுமார் 3000 ஆண்டுகள் பழமைவாய்ந்த வரலாற்று புகழ்பெற்ற மலைக்கோயிலில் ஸ்ரீ முருகப்பெருமான், தண்டாயுதபாணி கோலத்தில் பாலமுருகனாக வீற்றிருந்து அருள்பாலித்து வருகிறார்.

உலகெங்கும் உள்ள மக்கள் யாவரும் தினசரி பாராயணம் செய்யக்கூடிய ஸ்ரீ கந்தர் சஷ்டி கவசம், ஸ்ரீ பாலன் தேவராய சுவாமிகளால் "சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக" என அழைத்து அந்நூலை இத் திருத்தலத்தில் அரங்கேற்றம் செய்துள்ளார்.

18 சித்தர்களில் ஒருவரான புன்நாக்கு சித்தர் வாழ்ந்து முக்தியடைந்த சிறப்பும், 12



• சூரசம்ஹாரம்

# சிரசுப்பூ தரு

• தைப்பூசத் திருவிழா





★ வள்ளி, தெய்வானையுடன் ஸ்ரீமுருகன்

# ரகிரிவேலவன்!

ஆண்டுகளுக்கு ஒருமுறை பொங்கும் மாமாங்க தீர்த்தம் அமைந்துள்ள சிறப்பும், ஸ்ரீ அருணகிரி நாதரால் பாடப்பெற்ற சிறப்பும் கொண்டது. மூலவர் அபிஷேகத் துக்கு 1320 திருப்படிகள் வழியே எருதுகள் மூலம் திருமஞ்சனம் கொண்டு செல்லும் வழக்கம் இங்குண்டு. கடந்த 12.02.1984 அன்று உலகமே வியக்கும்வண்ணம் இரட்டை மாட்டு வண்டி படியேறிய அதிசயம் நடை பெற்ற பேறுகொண் டது இச்சென்னி மலை.

**பெயர்க் காரணம்:**

அனந்தன் என்ற நாகார்ஜுனனுக்கும் வாயு தேவனுக்கும் பலப்பரீட்சை நடந்தது. அனந்தன் மகாமேரு மலை யைச் சுற்றிப் பிடித்துக் கொள்ள வாயு தேவன் கடுமையாக வீசி அனந்தன் பிடி யிலிருந்து மேருமலையை விடுவிக்க முயன்றான். அப்போது மேருவின் சிகரப் பகுதி முறிந்துப் பறந்து சென்று பூந்துறை நாட்டில் விழுந்தது. அச்சிகரப் பகுதியே சிரகிரி, சிகரகிரி, புஷ்பகிரி, மகுடகிரி,



சென்னிமலை என்றும் வழங்கலாயின. சென்னி மலை என்றால் தலைமையான மலை என்று பொருள். இது மேருவின் ஒரு பகுதி என்பது ஐதிகம்.



### தல வரலாறு

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு இப்பகுதியில் பண்ணையக்காரர் ஒருவருடைய பெரும் பண்ணையில் நூற்றுக்கணக்கான பசுமாடுகள் இருந்தன. அதில் ஒரு வளம்மிக்க காராம் பசுவும் இருந்தது. தினம் பசுக்கள் மேய்ப்பவன் அடைத்து வைப்பது வழக்கம். சில நாட்களாக காராம்பசுவின் மடியில் பால் இல்லாமல் இருந்து வந்ததை வேலையாள் தன் பண்ணையாரிடம் தெரிவித்தான். பண்ணையாரும் பல நாட்கள் இதை கவனித்து வந்தார். தினசரி மாலையில் ஆவினங்கள் கூட்டாகத் தொட்டிக்குத் திரும்பி வரும்போது, காராம்பசு மட்டும் பிரிந்து சற்றுத் தூரத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தன் மடியில் உள்ள பால் முழுவதையும் தானாகவே சொறியவிட்டு பின் மறுபடியும் மாடுகள் கூட்டத்தில் சேர்ந்து வருவதை கவனித்து ஆச்சரியமடைந்தார்.

அந்தக் குறிப்பிட்ட இடத்தில் மண்ணைத் தோண்டிப் பார்க்கச் செய்தார். அங்கே எல்லோரும் அதிசயத்தக்க பூர்ண முகப் பொலிவுடன் ஒரு கற்சிலை தென்பட்டது. பண்ணையார் தன்னை ஆட்கொண்ட இறைவனே வந்து விட்டதாகப் புளகாங்கிதம் அடைந்தார்.

அந்த விக்ரஹத்தை ஆராய்ந்தபோது விக்ரஹத்தின் இடுப்புவரை நல்ல வேலைப்பாடுடனும், முகம் அதிஅற்புத பொலிவுடனுமிருக்க இடுப்புக்கு கீழ்,

பாதம் வரை சரியான வேலைப்பாடில்லாமல் கரடு முரடாக இருந்தது. அதை ஒரு குறையாக எண்ணிய அவர், அந்தப் பாகத்தை சிற்பியைக் கொண்டு செதுக்கச் சொல்ல, அந்த இடத்தில் இரத்தம் பீறிட்டது.

ஆண்டவர் இப்படியே இருக்கப் பிரியப்படுகிறார் என்று அறிந்து பயபக்தியுடன் பக்கத்திலுள்ள குன்றின் மேல் பிரதிஷ்டை செய்தனர். அதுவே சென்னி மலை தண்டாயுத பாணி திருவுருவமாக அருள்பாலித்து வருகிறது.

**நவக்கிரகக் கோயில்:**

சென்னிமலை ஆண்டவர் நடுநாயக மூர்த்தியாக செவ்வாய் கிரகமாக அமைந்திருக்கிறார். மூலவரைச் சுற்றி நவக்கிரகங்களில் எட்டுக் கிரகங்களும் அழகிய தேவ கோஷ்டங்களில் பாங்குடன் அமைந்து அருள்பாலிக்கின்றனர். இங்கு மூலவரை வலம்வந்து வணங்கினாலே நவக்கிரகங்களையும் வழிபட்ட பலன் உண்டு. இத்தலம் செவ்வாய்ப் பரிகார ஸ்தலமாகும்.

**தேவியர் இருவருக்கும் தனிக்கோயில்:**

முருகன் சன்னிதிக்குப் பின்புறம் உள்ள தனிக்கோயிலில், அருள்மிகு ஸ்ரீ வள்ளி, ஸ்ரீ தெய்வானை என தேவியர் இருதிருவுருவங்களும் ஒரே கல்லில் பிரபையுடன் அமைக்கப்பட்டுள்ளது. பெண்கள் குழந்தை வரம் வேண்டி, பச்சை மாவிடித்து தீபம் ஏற்றி வழிபடுவதும், சுமங்கலிப் பெண்கள் சன்னதி முன்பு தாலி சரடு கட்டிக் கொண்டு, மாங்கல்ய பலம் வேண்டுவதும் வழக்கம்.

**சிரசுப்பூ உத்திரவு கேட்டல்:**

பக்தர்கள் நிலம், வீடு, திருமணம், வேலை, தொழில், வியாதி முதலான அனைத்து முக்கிய விஷயங்களையும் முடிவு செய்ய, சென்னிமலை ஆண்டவருக்கு அர்ச்சனை செய்து சிரசுப்பூ உத்திரவு கேட்கின்றனர். நல்ல உத்திரவு கிடைத்த பின் மனநிறைவுடன் செயல்பட்டு மகிழ்வது தொன்றுதொட்டு நடந்து வரும் அற்புதமாகும்.

**- பெ.தனபாலன், செயல் அலுவலர், இந்து சமய அறநிலையத் துறை, ஈரோடு.**

## ஏழு கோடியில் திருப்பணி!

**''இத்தனைச் சிறப்புவாய்ந்த இம் மலைக் கோயிலில் 1973, மற்றும் 1992ல் மஹாகும்பாபிஷேகம் நடத்தப்பட்டன என்றாலும், திருப்பணிகள் எதுவும் செய்யப்படவில்லை. தற்போது 700 ஆண்டுகளுக்குப் பின்னர், மிகப் பெரிய அளவில் கட்டுமானப் பணிகள் நடந்து வருகின்றன. ஐந்து நிலைகள் கொண்ட இராஜ கோபுரம், பதினான்கு அடி உயரத்தில் மதில்சுவர், பரிவார மூர்த்திகளுக்குப் புதிய சன்னதிகள், பக்தர்கள் இளைப்பாறும் மண்டபம், அன்னதானக் கூடம் போன்றவை அதில் முக்கியமானவை. முருகனின் அருளாலும், பக்தர்களின் பெரும் ஆதரவாலும், சுமார் 7 கோடி ரூபாய் மதிப்பில் திருப்பணிகள் நடைபெற்று வருகின்றன. அனைவரும் அரும்பெரும் பணியில் பங்கேற்று, சிரகிரி வேலவன் திருவருளைப் பெற வேண்டுகிறோம்'' என்றார் அறங்காவல் குழுத் தலைவர் யு.ஆர்.சி, கனக சபாபதி.**



# நல்லது செஞ்சே மகனே!

ஒருவன் 'ஹாட் டாக்ஸ் (பர்க்கர் போன்ற ஒரு தின்பண்டம்) தயாரித்து விற்றுப் பிழைப்பை நடத்திக்கொண்டிருந்தான். அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. அதனால் செய்தித்தாள்கள் படிக்க மாட்டான். காது கேட்காது; அதனால் வானொலி கேட்க மாட்டான். கண் பார்வை மந்தம் என்பதால் டீ.வியும் பார்க்க முடியாது. ஆனால் தன் தொழிலை ஆர்வத்துடன் நடத்தினான்.

கவர்ச்சிகரமான திட்டங்களை அறிவித்து, வியாபாரத்தைப் பெருக்கினான். அதிக அளவில் பொருள்களைத் தருவித்து, இன்னும் ஹாட் டாக்ஸ் விற்றான். உதவிக்குச் சில ஆட்களை நியமித்துக்கொண்டான். நாளடைவில் பெரிய நவீன அடுப்பை வாங்கினான். வியாபாரம் செழித்தது. சமீபத்தில் கல்லூரியில் படித்து பட்டம் வாங்கியிருந்த அவன் மகனும், தந்தைக்கு உதவியாக வந்தான்.

மகன் சொன்னான், ''அப்பா, மிகப் பெரிய மந்தநிலை உருவாகிக் கொண்டிருப்பதை நீங்கள் அறிந்து கொள்ளவில்லையா?'' ''இல்லை, எனக்கு அதைப் பற்றிச் சொல்'' என்றான் தந்தை. ''உலகின் பொருளாதார நிலை பயங்கரமாக உள்ளது. நம் நாட்டு நிலை அதைவிட மோசம். நாமெல்லாம் வரப் போகிற நெருக்கடி நிலைக்குச் சித்தமாக இருக்க வேண்டும்'' என்று விளக்கினான் மகன்.

மகன் கல்லூரியில் படித்தவன். நாளிதழ்களைப் படிக்கிறான், ரேடியோ கேட்கிறான், டீ.வி. பார்க்கிறான். அவன் சொன்னால் சரியாகத்தான் இருக்கும் என்றெண்ணிய தந்தை அவன் அறிவுரையை சீரியஸாக எடுத்துக் கொள்ளக்கூடாதென்று முடிவு செய்தான். அதனால், அடுத்த நாளிலிருந்து பொருள்களைக் குறைவாகவே வாங்கினான்; வாசலில் தொங்கிய அழகான போர்டை அகற்றினான்.

வாடிக்கையாளருக்கு அளித்துவந்த பரிசுத் திட்டங்களை நிறுத்தினான். வேலையாட்கள் சிலரையும் நிறுத்திவிட்டான். அவனிடம் ஹாட் டாக்ஸ் வாங்க வந்து கொண்டிருந்தவர்கள் எண்ணிக்கையும் குறைய ஆரம்பித்தது; அப்படியே அவன் லாபமும் சுருங்கிற்று.

இப்போது தந்தை சொன்னான்: ''மகனே, நீ சொன்னது சரிதான். நாம் பெரிய மந்தநிலை, மற்றும் நெருக்கடியில் இருக்கிறோம். நீ என்னை முன்னதாகவே எச்சரித்தது நல்லதாயிற்று.''

ஏட்டுச் சுரைக்காயை மட்டும் நம்பி... அனுபவ அறிவு இழந்தது. இதுபோல எத்தனையோ!

- நியூ இண்டியன் எக்ஸ்பிரஸில் படித்துத் தமிழில் எழுதியது:
கே.நிருபமா, புனே

# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

கோபு உனக்கு விஷயம் தெரியுமா? கல்கியில...

தெரியும்... தெரியும். கன்டினியூனா... நிறைய ஸ்பெஷல்ஸ் பண்றாங்க...






உங்கள் சேவையில் 22-ம் வருடம்

# கேன்ஸர் நோயா?

## கவலைப்பட வேண்டியதில்லை.



Dr. K. Sri Sridar

**ஹெர்பல் ஆன்காலஜியோடு மெடிக்கல் ஆன்காலஜி, சர்ஜிகல் ஆன்காலஜி, ரேடியோ தெரபி அனைத்தும் குருபாலாவில்**



10-02-2009

CT Scan findings consistent with multiple skeletal mets from Ewing's Sarcoma.

14- வயது பெண்ணுக்கு இடுப்பு பகுதியில் ஏற்பட்ட Pelvic PNET புற்றுநோய் எலும்புகளில் பரவியதை காட்டும் CT ஸ்கேன் படம்.



01-08-2009

Absence of Viable Tumour

டாக்டர்கள் கைவிட்ட நிலையில் 29.04.09 அன்று ஹெர்பல் ஆன்காலஜி சிகிச்சை துவங்கி மூன்று மாதங்களில் ஆச்சர்யமான முறையில் புற்றுநோய் முற்றிலும் குணமானதை காட்டும் PET SCAN.



04-09-2009

No Focus abnormally increased FDG uptake to suggest metabolically active disease on the present study.

சந்தேகத்திற்கு இடம் கொடுக்கக்கூடாது என்பதற்காக டாக்டர் கே. ஸ்ரீ. ஸ்ரீதர் அவர்களின் அறிவுரைப்படி மும்பை டாடா மெமோரியல் மருத்துவமனையில் ஒரு மாத இடைவெளியில் மீண்டும் எடுத்த PET SCAN படம் புற்றுநோய் முற்றிலும் குணமானதை காட்டுகிறது.

## CA. BREAST TO LUNGS (மார்பக புற்றிலிருந்து நுரையீரல் புற்றுநோய்)



Before Treatment

NODULAR OPACITIES SEEN IN BOTH LUNG FIELDS METASTATIC DEPOSITS

Chest X-ray *Date. 08.06.05*

சென்னையை சேர்ந்த 43 வயது பெண்மணிக்கு மார்பகத்திலிருந்து நுரையீரலுக்கு பரவிய புற்றுநோய் ஹெர்பல் ஆன்காலஜி சிகிச்சைக்குப்பின் எடுத்த டெஸ்டில் புற்றுநோய் இல்லை என்பதை காட்டும் X-ray படம்.



After 68 days Herbal Oncology

NORMAL STUDY

Chest X-ray *Date. 09.[illegible]9.05*

## கை விடப்பட்ட கேன்ஸரா ? கவலை வேண்டாம்

GBM, CA. Oesophagus, Lung, Liver, Cervix, Bone, Prostate, Rectum, Ependymoma, Astro cytoma, Glioma, AML, CML போன்ற அனைத்து வகை புற்றுநோய்களுக்கும் சிறப்பு சிகிச்சை அளிக்கப்படுகிறது. [illegible] Herbal Oncology [illegible] 40% [illegible] Herbal Oncology [illegible]

**கேன்சர் என்று தெரிந்தவுடனே நோயாளியை நேரில் அழைத்து வாருங்கள். முறையாக ஒருங்கிணைந்த கேன்சர் சிகிச்சையை பெறுங்கள்.**

Royale Apartment, 6, Mannar Reddy Street,
(Opp. Street to T.Nagar Bus Terminus)
T.Nagar, (Next to Krishnaveni Theatre),
Chennai - 600 017.
Weekdays : 10.00 am to 5.30 pm. Sunday Holiday
Clinic: Ph: 044-24339596, 24363835
Cell: 99400 58809

**NO**
METALS
MERCURY
STEROID
POISON

PURE HERBS BRINGS MIRACLE

Gurubalaa™ Clinic



Speciality Clinic for Herbal Oncology and Asthma

**Treatment given by Qualified & Experienced Doctors.**

**We have no branches**

த்தகம்-2 என்றும் உங்களுடன் நவம்பர் 2009

# மங்கையர் மலர்

## திருமண மலர்





றெழுதி அதைச் சுருட்டி, மஞ்சள் கயிற்றிலே கோத்து மணமகள் கழுத்திலே அணிவிப்பர். தால ஓலையில் எழுதிக் கட்டியதால் அதற்குத் தாலி என்ற பெயர் வந்தது.

நாகரிகம் வளர்ந்த பிறகு [பனையோலை தண்ணீர் பட்டு நைந்து போவதால்] தாலியைத் தங்கத்தினால் செய்து அணிந்தனர். மனைவிக்கு மணவாளனே தெய்வம் என்பதால், திருமாங்கல்யத்தைக் கணவருடைய இரு பாதங்கள்போல் செய்து நெஞ்சில் படும்படி அணிந்தனர்.

# தாலி மகிமை!

**ப**ழங்காலத்தில் தங்கம் பற்றிய நாகரிகம் இல்லாதிருந்தபோது, பனை ஓலையில் தாலி செய்தனர். ‘தாலம்’ என்பது பனையோலையைக் குறிக்கும். பனையோலையை ஒழுங்கு செய்து, மஞ்சள் தடவி அதில் பிள்ளையார் சுழியிட்டு, ‘இன்னாருடைய மகளை, இன்னாருடைய மகன் மணந்து கொண்டார். வாழ்க!’ என்

**பெ**ண்களுக்கு இந்த மங்கல நாண் உயிரினும் சிறந்தது. பெண்கள் எந்த அணிகலனைக் கழற்றினாலும் திருமாங்கல்யத்தைக் கழற்றக்கூடாது. ராவணன், சீதாதேவியைக் கடத்திக் கொண்டு போகும்போது, திருமாங்கல்யம் மட்டும் அவள் கழுத்தில் அணி செய்து கொண்டிருந்ததாம்!

**– ஜி. ஜெயலக்ஷ்மி கோபாலன், சென்னை – 64**



**திருமண வாழ்க்கை மகிழ்ச்சியாக அமைய...**

**ச**ரியான ஜோடியைத் தேர்ந்தெடுப்பதன் மூலம், மணவாழ்க்கை மகிழ்ச்சியாக அமையும் என்று நினைப்பது தவறு. சரியான ஜோடியாக வாழ்வதன் மூலம்தான் மகிழ்ச்சியான மணவாழ்க்கை கிடைக்கும்.

**– ராபி பிரீக்னர்**

**தகவல்: சியாமளா ராஜகோபால், சென்னை–64.**



தாத்தா : எம்.இராமச்சந்திரன்
பாட்டி: திலகம் இராமச்சந்திரன்
பேத்தி : ஆர்.எஸ்.சம்யுக்தா



தாத்தா : ஆர்.கோபாலகிருஷ்ணன்
பாட்டி: பாக்கியலக்ஷ்மி
பேத்தி : எஸ்.அபர்ணா



தாத்தா : ப. ஜெயராமன்
பாட்டி: சிவகாமசுந்தரி
பாட்டி: ச.பார்வதி
குழந்தைகள் :
எஸ்.பிரக்ஞா ஸ்ரீகிருஷ்ணன்
எஸ். பிரணவ் ஸ்ரீகிருஷ்ணன்

# என் செல்லமே!



தாத்தா: சு.அருணாசலம்
பாட்டி: சரோஜா
பேத்தி: வ. வர்ஷா







தாத்தா : அ.ஸ்ரீதரன்
பாட்டி : மீனாட்சி
பேரன் : சாத்விக்
பேரன் : சஷாங்க்

# என்றுமே நீதான்!

கவிதை



மா. [illegible]ர்த்தி, திண்டுக்கல்.

கணவனாய் வருபவனைக் காதலனாய்
காதலிக்கக் காத்திருக்கையில்
காற்றாய் உள் நுழைந்தாயே
உயிரைப் பறிக்கத்தானோ?

காதல் பரிசுகளாய்
நீ ஏற்படுத்திய காயங்களும்
சுடு வார்த்தைகளும்
சந்தேகப் பார்வையும்தான்
எனக்குக் கிடைத்தன!

இவற்றையும் தாண்டி உன்னுடன்
வாழக் காரணம்
இப்போதும் உன்னைக் காதலித்துக்
கொண்டிருப்பதால்தான்...

நான் என் காதலை
நம்புகிறேன் - அது உன்னை
மாற்றும் என்று!

நீ அடித்தாலும்
நீ அணைத்தாலும்
நீ அழவைத்தாலும்
மனம் ஏற்றுக் கொள்கிறது!
நீ என் கணவனாகிய காதல் என்பதால்!

என் காதல்
உனக்குப் புரிந்தாலும், புரியாவிட்டாலும்
என்றுமே என் உயிர் நீதான்!



யிருந்தது. "இது அசாத்தியமான காரியம். ஒரு தவளை கூட கோபுரத்தின் உச்சியை அடையாது!"

இன்னும் பல தவளைகள் களைப்படைந்து, மேலே ஏறும் முயற்சியைக் கைவிட்டன. அவற்றில் ஒன்று மட்டும், மேலே ஏறிக் கொண்டேயிருந்தது. இது தன் தீர்மானத்தில் உறுதியாக இருந்தது.

கடைசியில் மற்ற எல்லாத் தவளைகளும் விட்டுவிட்டுப் போன பிறகு இந்தத் தவளை மட்டும் மிகுந்த முயற்சிக்குப் பின் கோபுரத்தின் உச்சியை அடைந்து விட்டது. மற்றத் தவளைகளுக்கும், கூட்டத்திற்கும் ஒரே வியப்பு. இதனால் மட்டும் எப்படிச் சாத்தியமாயிற்று?

போட்டியில் கலந்து கொண்டிருந்த தவளைகளில் ஒன்று,

# காதுகளை மூடுங்க!

ஒரு குளத்தினருகில் தவளைக் கூட்டம் ஒன்று வசித்து வந்தது. ஒருநாள் தவளைக் கூட்டம் பந்தயத்திற்கு ஏற்பாடு செய்தது. உயரமான கோபுரத்தின் உச்சியை அடைய வேண்டும் என்பதே பந்தயத்தின் லட்சியம். பந்தயத்தைப் பார்க்கவும், தவளை வீரர்களை உற்சாகப்படுத்தவும், ஒரு பெரிய கூட்டமே திரண்டிருந்தது.

பந்தயம் ஆரம்பித்தாயிற்று. உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் இந்தச் சின்னஞ்சிறு தவளைகள், கோபுரத்தின் உச்சியை எட்டிப் பிடிக்குமென்று கூட்டத்தில் ஒருவர் கூட நம்பவில்லை.

"ரொம்பக் கஷ்டம்! இந்தத் தவளைகளால் முடியாது!" போன்ற பேச்சுக்களே கூட்டத்திலிருந்து ஒலித்தன. சின்னத் தவளைகள் களைப்படைய ஆரம்பித்தன. சில தவளைகள் மட்டும் புது உற்சாகத்துடன் ஏறிக் கொண்டிருந்தன. "மேலே மேலே" கூட்டம் கத்திக் கொண்டே

வெற்றியடைந்த தவளையிடம் அதன் வெற்றியின் ரகசியம் என்னவென்று கேட்டது. அந்தத் தவளை பதிலே சொல்லவில்லை. கடைசியில் பார்த்தால் அது பிறவிச் செவிடு. அதற்குக் கூட்டத்தினரின் எதிர்மறை எண்ணங்கள் கேட்கவே இல்லை!

அதனால் மற்றவர்களின் மதிப்பீட்டின் மேல், நம் திறமைகளை நிர்ணயிக்கக் கூடாது. ஏனெனில் அவர்கள் நம் மனத்திற்கு மிக நெருங்கிய கனவுகளையும், ஆசைகளையும் தகர்த்தெறிவதிலேயே குறியாக இருப்பர். வார்த்தைகள் மிகவும் சக்திவாய்ந்தவை. நாம் கேட்பதும், படிப்பதும் நம் மேல் மிகப் பெரிய பரிணாமத்தை ஏற்படுத்துகின்றன.

எப்போதும், ஆக்கப்பூர்வமாகவே சிந்திக்க வேண்டும். நம் கனவுகள் அடைய முடியாதவை என்று மற்றவர்கள் விமர்சிக்கும்போது காதைச் செவிடு ஆக்கிக் கொள்ள வேண்டும்! இதுதான் லட்சியத்தை அடையும் வழி!

- கே.நிருபமா, புனே.

சிந்தனைத் துளி

# மங்கையர் மலரின்

# திருமண மலர்

## திருமண மலர் விளம்பரக் கட்டண விவரங்கள்

முதல் முப்பது வார்த்தைகளுக்கு ரூ. 500/-

30க்கு மேற்பட்ட வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும் தலா ரூ. 15/-

**வண்ணத்தில்** ஹைலைட் செய்ய கூடுதல் கட்டணம் ரூ. 100/-

**1" X 1"** அளவில் வண்ணப் புகைப்படத்துடன் 30 வார்த்தைகள் அடங்கிய விளம்பரத்துக்கு ரூ. 800/- (அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ 15/-)



வண்ணப் புகைப்படத்துடன் விவரங்கள் அடங்கிய அரை பக்க **Profile** விளம்பரம் ரூ. 2500/-

வண்ணப் புகைப்படம் அனுப்புபவர்கள், தெளிவான புகைப்படமாக, பாஸ்போர்ட் அளவில் இரண்டு பிரதிகள் அனுப்பவும். புகைப்படங்களை திருப்பி அனுப்ப இயலாது.

கட்டணத்தை நேரில் ரொக்கமாகவோ அல்லது சென்னை செக்காகவோ, வெளியூர் டிமாண்ட் டிராப்டாகவோ, **மங்கையர் மலர்** என்ற பெயரில் எடுத்து அனுப்பவும்.

விவரங்களுக்கு தொடர்பு கொள்க:

## மங்கையர் மலரின் திருமண மலர்

47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.
தொலைபேசி: 4343 8888 Fax : 044 - 4343 8899
email: marketing@kalkiweekly.com

# மணமகள் தேவை

**◆◆ V.K.SURESH**



Iyengar, Vadagalai, Bharatwajam, Thiruvonam, 41 years, BCS, 150 cm, Officer in Tamil Nadu Govt. in Coimbatore seeks Iyengar girl. Subsect no bar. Own House. No Sisters. Mother House-wife. Contact : Srimathy 0422 2493069. Cell:98940 33313. Box No. 16274



**எஸ்.சரவணன்**

◆ வீரசைவலிங்காயத்து, திருவாதிரை, 29, 6', தனியார் பள்ளி ஆசிரியர், எம்.காம்., எம்.ஃபில்., ரூ.8,000 மாத வருமானம், சொந்த வீடு உள்ளவருக்கு, நன்கு படித்த, குடும்பப்பாங்கான, பணிக்குச் செல்லும் தகுதியுடைய மணமகள் தேவை. ஃபோன்:9487141012, 9486241160 பெட்டி எண்:16242

◆ Thirunelveli Iyer, Vadamal, Kousikam, Ashwini, Mesha Rasi, 20.06.1979, 5.6', B.B.A., Own Catering Business (Mount Catering) Rs. 8 Lakhs per annum, Having Own House, Two Cars very charming Boy, Physically Challenged. Ph:044-24320699/9941342269 Box No. 16235

◆◆ J.Rajesh, Iyer, Vadamal, 31,5'10", Gauthama Gothram, Avittam, B.E., HP (USA) SW Engineer, seeks graduate bride with Computer Knowledge. T.M.964332, Contact:22333571, 9840663872 Box No. 16236

◆ Tamil Iyer, Vadama, Athreyam, Pooram, 29.05.74, B.E., MBA, employed TCS Chennai, Legal Divorcee, Unconsumated Marriage, no cohabitation, immediate separation seeks any Brahmin graduate girl. Divorcee without issue welcome. Box No. 16237

◆◆ Iyer, Vadama, Srivatsa, Revathi IV, (Sutha Jadhagam), April 1973, Rich/Affluent, Substantially earning, Propertied Businessman, Builder & Promoter of Residential Flats, B.Com.,/ 170cms, seeks graduate girl, from a good family background. 7th & 8th place in horoscope must be vacant. Refer TM ID M1488503/Ph : 9884256058/ brgpal@gmail.com Box No. 16238

◆ Vadamal, Bharathwajam, Visakam, 34/186cm, MBA, self employed, Rs. 6 Lakh per annum. Seeks graduate homely girl. Contact: 45012443. Box No. 16239

◆ Palakkad Iyer, Brahacharanam, Koushika, Makam, 12.08.1980, 5.10', B.Com., MFT, Manager MNC Bank at Jaipur seeks slim, good-looking, well educated employed girl, height preferably above 5.3' Box No. 16240

◆ Kerala Iyer, Kausikam, 40 years, Uthirattadhi, employed in Sundaram Finance, Legally divorced without encumbrance seeks suitable home-loving bride widow with or without child. Contact: 2474 2439 Cell No. 98400 98286. Box No. 16241

◆ ஐயங்கார், உத்திரட்டாதி, 35/174 செ.மீ., திருச்சி, அரசு மருத்துவர், தோல் நோய் நிபுணருக்கு, அய்யங்கார்/அய்யர் மணமகள் தேவை. தொடர்புக்கு: 9994193382. பெட்டி எண் : 16243

◆ Iyer, Brahacharanam, Srivatsam, Ayilyam, April 1979, 170cm, BBM employed BPO in Chennai seeks qualified girl employed in Chennai/unemployed. Subsect no bar. 97898 39973 044-2362 2628 Box No. 16244

◆ **Delhi-based, Iyer, Vadama, Kowsikam, Punarpoosam(1st), 1976, 5.8', MBA, employed reputed Pvt. Bank, handsome salary, seeks good-looking bride. Iyengars welcome. Contact: 011-26646821, Cell: 9999282777, email: tnravi.99@gmail.com Box No. 16245**

◆ Remarriage, Thenkalai, Iyengar, Kousikam, Pooradam, 35/175cm, B.Com., DBM-CBA, well employed in Hyderabad. Legal Divorcee without any encumberance. No issues, any Brahmin Caste acceptable. Ph:040-6590 9320. Box No. 16246

◆ Iyer, Brahacharanam, Haritham, Pooratadhi, 35/5.4', B.A. L.I.C. Agent, Owns hotel at Kallakurchi, seeks homely bride. Contact: Mrs. Vaidehi. 9894877323. Box No. 16247

◆ Iyer, Ashtasahasram, Kasibha Gothram, Mesham, Karthigai, Sept. 1983, (MBA), Reliance Life Insurance employee seeks suitable employed/non-employed girls subsect no bar. Father Retired Bank employee Mother State Govt. employee only son early marriage preferable. Box No. 16248

◆ ஐயர், வடமாள், பூரட்டாதி, ஸ்ரீவத்ஸ கோத்திரம், வயது 29, BCA, 5.10', சென்னையில் சாஃப்ட்வேர் நிறுவனத்தில் பிஸினஸ் அனலிஸ்டாக வேலை, மாத வருமானம் 33,000/- உள்ள வரனுக்கு பொருத்தமான மணமகள் தேவை. ஃபோன்: 044-6521 9339, 98414-41442 பெட்டி எண்:16249

◆ Madhva Deshasta, Marathi Kashyapam, 30 years, MIM, Poosam, Kataka Rasi, Multinational Company, Bangalore 20,000/- p.m., Legal Divorcee needs bride below 28 years Graduate Marathi Kannada Contact Sunder Rao, Pondicherry. 0413-2277869 Box No. 16250

◆ Sridhar BE, (MBA), Tamil Brahmin, Iyer, Poorthmanushya, Poo-

radam, 28, 185 cms, Assistant Manager in Private Company, Chennai, (Rs.25,000 p.m.) seeks suitable graduate bride. Only younger sister married, settled abroad. Contact:Dr. Janardhanan, Phone: 04286-256448, 256456 Box No. 16251

◆ பிராமின், விச்வாமித்திர, கேட்டை, வடமாள், சிவப்பு, 35, 5.8', பி.காம்., நல்ல உத்தியோகம், 20,000/- மாதச் சம்பளம், பெங்களூரில் வீடு, மனை உள்ளது. சொந்தமாக Dental Lab உள்ளது. தகுந்த மணமகள் எந்த பிராமின் பிரிவும் சம்மதம். பெட்டி எண்: 16252

◆ Iyer, Vadama, Vadhula, Revathi, 38/168 cms, Smart, Manager MBA, MNC, Chennai 15 lacs p.a. seeks qualified preferably employed girl below 34 years. Subsect no bar. Photo returnable/horoscope. Box No. 16253

◆ ஐயர், வடமாள், விஷ்ணுவிருத்தி, வயது 34, M.Com., ICWA, ஆசிரியர் பணி, 23,000/- சொந்த வீடு உள்ள தாய், தந்தை இல்லாத பையனுக்கு தகுந்த மணமகள் தேவை. விவாகரத் தானவர் தொடர்பு கொள்ள வேண்டாம். 94430 27531, 94433 19924 பெட்டி எண் : 16254

◆ Iyer, Brahacharanam, Athreya, Anusham-4, 1982/174, B.E. Software Professional, Bangalore, 4.25 lakhs p.a., seeks Prof. qualified employed. Subsect no bar. S.S.Matri. 56355 Contact: 0-99860 18584 sgirish12@rediffmail.com Box No. 16255

## திருமண மலர் - விளம்பரக் கட்டண அறிவிப்பு

திருமண மலர் விளம்பரக் கட்டணம் முதல் 30 வார்த்தைகளுக்கு ரூ.500/-
அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ.15/-
வண்ணத்தில் 'ஹைலைட்' செய்ய ரூ.100/- கூடுதலாக அனுப்பவும்.
வண்ணப் புகைப்படத்துடன் (1" x 1") வெளியிட ரூ.800/-
இத்துடன், www.mangayarmalaronline.com என்கிற
மங்கையர் மலரின் இணையதளத்திலும் சேர்த்து
விளம்பரம் வெளியிட, கூடுதல் கட்டணம் ரூ. 100/-

◆ **Tamil Iyer, Brahacharanam, Kousikam, Ayilyam, B.Com., ICWA, CA(Inter), working as a Senior Accounts Executive in a MNC, 32 years, 5.11', fair seeks traditional girl. (SS-MATRI-56808) Ph : 044-24404904, 98404 26380, 9444224151 Box No. 16256**

◆ வாத்திமாள், வாசிஷ்ட, உத்திரம்-4, நவம்பர் 75, 165, B.E.,/Project Manager SWE, விவாகரத்தானவர், (Innocent Divorcee by Mutual Consent) இவருக்கு குடும்பப்பாங்கான வேலையில் உள்ள/இல்லாத பட்டதாரி பிராமணப் பெண் தேவை. ஃபோன்: 9894890215 பெட்டி எண்: 16257

◆◆ **Tamil Iyer, Vadama, Naidrupa Kashyapa, Punarvasu-II, B.Com., 39/180/18,000. very fair, very handsome, young looking, employed in Indian Overseas Bank. Seeks employed/unemployed bride. Subsect no bar. Divorcees, widowers excuse. Box No. 16258**

◆ Iyengar, Thengalai, Athreyam, Pooratathi, Meenam, 36, 5.6', fair, slim, Diploma in Hotel Management and Catering Technology, Faculty in NGO, 18,000/- p.m., seeks bride middle class, +2, Diploma, Degree employed. Contact: 044-2246 3006 Box No. 16259

◆ Iyer, Brahacharanam, Athreyam, Rohini-1, 33/165 MCA SWE Chennai 5.4 L - Innocent Legal Divorcee (very short marriage life unconsumated) seeks issueless divorced girl/widow. Any Brahmin section contact. Ph:9443645590 Box No. 16260

◆ Iyer, Brahacharanam, Koundanya, Poorattadhi II Padam, BE/32/184 Tech Mahindra Pune seeks employed/unemployed bride ready to relocate Mobile: 09884525400 Box No. 16261

◆ Iyer, Vadamal, Bharathwajam, Hastham, 1980/5.11', B.E., M.S., C.T.S. seeks good-looking qualified good family background. Ph:044-28140392/9840218833 email:kamalambal1950@yahoo.co.in refer:ssmatri.com ID57987 Box No. 16262

◆ ஐயர், பிரஹசரணம், சங்க்ருதி கோத்திரம், சித்திரை-2, பி.டெக்., எம்.பி.ஏ. 23.09.1979, 5.10', 8.4Lp.a. சென்னையில் வேலையிலுள்ள

பையனுக்கு வேலை பார்க்கும், படித்த, குடும்பப்பாங்கான பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். போன்: 9445489466 044-42033294 பெட்டி எண்:16263

◆ Tamil Iyer, Vadamal, Magam, Koundinyam, 33, B.Com., DCA (MBA), Dy. manager, HDFC Bank, Chennai, Salary Rs. 29,000/- p.m. + seeks suitable educated employed bride. Contact Ph:044-6544 6849. Box No. 16264

◆ Vadagalai, Bharathwajam, Chithirai-2, Jan. 74, 5.6', B.Com., Diploma in Refrigeration & Airconditioning, Running Own Service shop earning Rs. 15,000/- p.m., and owns a house in Chennai seeks working/ unemployed bride. Contact:K.P. Duraikutti 044-2248 5348. kalai no bar. Box No. 16265

◆◆ Ganesh, Vadamal, Bharadwajam, Sadhayam 4th, June 1975, 5.7', B.Com., PGDCA, MNC Chennai, Rs. 3 lakhs per annum, only son seeks +2/ or any degree employed/ unemployed girl with age difference of 2 to 7 years. Simple marriage enough Narayanan, 044-2464 1342/9840319297 Box No. 16266

◆ Tamil Iyer, Brahacharanam, Kousikam, Swathi May 1972, 167 cm, Post-graduate, Diploma Marketing Management, Computer Literate employed in Reputed Chemical Company, Raipur, North India. Own House, Annual Income Rs. 1,80,000/- seeks good looking Graduate/Post-graduate girl from Iyer/Iyengar/Andhra/Karnataka

இந்த இதழில் பிரசுரமாகும் பெட்டி எண் விளம்பரதாரருக்கு பதில்கள் அனுப்ப கடைசி தேதி : 10.12.2009. பதில்கள் அனுப்ப வேண்டிய முகவரி : பெட்டி எண் : ............ C/o மங்கையர் மலர், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

Brahmin family. Age 29 to 35. No Expectations. Contact:0788-2279577 Mobile:09200328632. Box No. 16267

◆◆ ஐயர், 1981, பிரஹசரணம், லோகித கோத்திரம், திருவாதிரை, பி.ஈ., சென்னை டாடா கன்சல்டன்சி சர்வீஸ், ரூ. 40,000 (தற்காலிகமாக Canada Deputation) தகுந்த மணமகள் தேவை. தொடர்பு செல்: 98657 65550 (அ)0451-2436 960 பெட்டி எண்:16268

◆ Iyer, Vathimal, Bharathwajam, Pooratadhi, 29/177, B.E., Central Govt. Dept. of Posts Rs. 20,000 p.m., seeks girl from good family preferably employed. Contact: 09487158025. Box No. 16269

◆ ஐயர், வடமாள், வாதூலம், 1.10.1970, சித்திரை, 5.7', சொந்த மாக டிராவல்ஸ் (K.R.Sankaran, New Delhi) தொழில், டில்லியில் சொந்த வீடுள்ள வரனுக்கு, குடும்பப்பாங்கான பெண் தேவை. வேலைக்குச் செல்லத் தேவையில்லை. தொடர்பு: 044-2616 4921 உமா பாண்டுரங்கன் பெட்டி எண் : 16270

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜம், மூலம், 27.6.1980, 180cm, D.M.E., B.B.A., P.G.D.C.A. (MBA), (Analyst Standard Chartered Bank, Chennai). மாத வருமானம் ரூ. 25,000/- உள்ள ஒரே மகனுக்கு டிகிரி படித்த சென்னையில் வேலை பார்க்கும் பெண் தேவை. ஃபோன்:22652775 பெட்டி எண்:16271

◆ Tamil Iyer, Ashtasahasram, Srivatsam, Pooradam, June'77, 176cm, B.Sc., M.C.A. employed in CTS, Chennai, Owns Flat at Valasaravakkam, seeks educated, good-looking, employed girl, subsect no bar. Contact:92821 26352, Ph:6526 0607, 2476 2744 Box No. 16272

◆ Iyer, Vadama, Bharadwajam, Ayilyam 34, 5.9', Fair, B.C.A. Team Quality Officer of Perot Systems Ambattur, Rs. 40,000/- p.m., Own Flat seeks graduate employed girl. Subsect no bar. Contact:044/2253 1443 9884052745 Box No. 16273

◆ Iyer, Brahacharanam, Sadamarshnam, Thiruvadirai, fair, 28/6', B.Sc., P.G.D.A.S. M.B.A., P.G.D.M.M., L&T, Pondicherry, 3.50 LPA, seeks qualified employed/ unemployed girl. Subsect no bar. Contact:0491-2880173, 09895196658. Box No. 16275

◆ Vadamal, Vadhula, Bharani, 11.7.1977/163cm, M.Com., (MBA), 2.5 Lac per annum, MNC, Bangalore, seeks suitable bride. Contact:044-24452639, 9841465791. Mail ID vtvenkataram@gmail.com Box No. 16276

◆ Iyer, Vadamal, Bharatwajam, Rohini(3), B.Com., GNNIT, Aug 76, 173 cm, Asst. Manager, Telecom BPO (ICICI group), Coimbatore, 4 Lakhs per annum, seeks fair, graduate girl. Tel: 26630096 Box No. 16277

◆ **Iyer, Brahacharanam, Haritha, Moolam, 57/165, PUC, Government Employee, Rs. 30,000/- p.m., widower, without encumbrance, seeks educated, Brahmin Girl unmarried/Divorcee/ widow without issue aged 48 to 56 employed/unemployed for Mutual Companionship. Box No. 16278**

◆ Tanjore Iyer, Vadamal, Srivatsam, Hastham II, 74 Born, 180cm, working in Carnival Cruise Line, U.S. 7.5 LPA seeks home-loving god fearing, employed/unemployed bride. No Expectations. Decent Marriage. Boy Owns a House at Chennai. Boy coming 1st week of Nov. 09 and stay for 3 months. Contact Box No. 16279

◆ தென்கலை, ஐயங்கார், ஸ்ரீவத்ஸம், பூராடம், 31 வயது நிரம்பிய B.A., MDCA, A/C Technology படித்து சுயதொழில் செய்து மாதம் ரூ.30,000/- சம்பாதிக்கும், சொந்த வீடுள்ள ஒரே பையனுக்கு டிகிரி படித்த நல்ல மணமகள் தேவை. 10 வருட கால மாக தொழில் செய்து வருகிறான். ☏போன்:22653761, 9884003137. பெட்டி எண்:16280

◆ மணமாகாத ஐயர், ரோஹிணி-1, அஷ்டசாஸ்திரம், வாதூலம், 34/164, Diploma Tele Communication, DEE, DECE, வெளிநாட்டில் Qatar-Doha-வில் அரசுப் பணி, வருட வருமானம் ரூ.12 லட்சம் வரனுக்கு +2

திருமண மலர் பகுதியில் இடம்பெறும் விளம்பரங்கள் அனைத்தும் விளம்பரம் செய்பவர்களின் கையொப்பத்துடன் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. மணமகள் அல்லது மணமகன் பற்றிய வயது, வருமானம், அந்தஸ்து உள்ளிட்ட இதர விவரங்கள் விளம்பரதாரர் தரும் குறிப்புகளின் அடிப்படையில் பிரசுரிக்கப்படுகின்றன. இந்த விவரங்களைக் கொண்டு தொடர்பு கொள்ளும் பெற்றோர்கள் அவை சரியான விவரங்களா என்று தனிப்பட்ட முறையில் விசாரித்து உறுதிசெய்து கொள்வது நல்லது. மேலும் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும்பொழுதே மருத்துவப் பரிசோதனையும் மேற்கொண்டால் பிறவிக் குறைபாடுகளுடன் குழந்தைகள் பிறப்பதைத் தடுக்கலாமே! - *பதிப்பாளர், மங்கையர் மலர், சென்னை 600 032*

/ டிகிரி படித்த கம்ப்யூட்டர் அறிந்த பெண் தேவை. ஐயர் உட்பிரிவு, ஐயங்காரும் சம்மதம். எதிர்பார்ப்புகள் எதுவும் இல்லை. கோயிலில் எளிமையான திருமணம். குழந்தை இல்லாத சட்டப்படி விவாகரத்தானவர்களும் விண்ணப்பிக்கலாம். ஃபோன் 9444890157 பெட்டி எண் 16281

◆◆ ஐயர், பிரஹசரணம், ஸ்ரீவத்ஸம், 43, ரோகிணி, சட்டப்படி விவாகரத்தானவர், மத்தியரசு பொதுத் துறை, 13,000/- விவாகரத்தானவர் தவிர்க்கவும். 2) 34-திருவோணம், 18,000/- பன்னாட்டுப் பணி. +2/ டிகிரி படித்த பெண் தேவை. வரதட்சணை தேவையில்லை. உட்பிரிவுகள் சம்மதம். ஃபோன்:044-22471451/ 9283255351/9677249976/ 9283170322/9283182816. பெட்டி எண் : 16282

◆◆ Vadakalai Iyengar, Athreyam, Mirugasreesham, 35/166cm, B.A., Own Business, 15,000/- p.m., Own House & Two grounds in Chennai seeks suitable bride +2 & above. Subsects no bar. Iyer accepted. Ph:24720795 Box No. 16283

◆ Iyer, Vadama, Bharadwajam, Kettai-I, 37, 5.10", B.Com., ICWAI, working in Dubai as DGM (Finance) good Salary. Seeks graduate or post-graduate girl. Subsect no bar. Contact: 044-2246 2778. vivenkatraman@gmail.com. Tamil Matrimony M700125. Box No. 16284

◆ Iyer, Vadamal, Bharathwajam, Chittirai, 40/180, MBA, MNC, Managerial Position, 6 Lakhs p.a. + Own Flat in Chennai Bachelor seeks suitable bride. Contact: 044-4358 6463, 9444110340. Box No. 16285

◆ ஐயர், பிரஹசரணம், சடமர்ஷணம், திருவோணம், 32 வயது, slim, L&T Chennai, 7ல் செவ்வாய் & குரு உள்ள வரனுக்கு மணப்பெண் தேவை. ஏழை நடுத்தர குடும்பப்பெண் மற்றும் எளிய திருமணம் சம்மதம். தொடர்புக்கு:9940 67783/94444 47487/98403 8481 பெட்டி எண்: 16286

◆ Iyer, Vathiama, Kasiyapa, Mirugasirisham, 1.7.81, 5-10ht, MCA working IT. Pvt. Co., 3,00,000 p.a seeks good-looking, graduate girl Subsect no bar. Contact 9840996943. Box No. 16287

◆ Iyer, Vadamal, Kousigam, Uthiram-I, B.E., 32/177, MNC, well settled Innocent Legal Divorcee without Issue (Short-lived Marriage), Clean habits seeks graduate, Good-looking, Home-loving, Middle Class, Iyer Girl, Divorcees without Issue also welcome. No expectations. Subsect Ok. Box No. 16288

◆ Vadamal, Garga, Ashwini(2), Sep. 74/165/15,000 B.Com., +Compr. Administrative Officer, Banaras Hindu University (Central Govt) Varanasi seeks any Brahmin bride. Padmasree-93823 16483 or Panchapakesan 9840330531 web: www.ssmatri.comID57142 Box No. 16289

◆ Brahacharanam, Kousigam, Poorattadhi(1), Sep.60/160/20,000+ B.Sc., B.Ed., Teacher, Govt. School, Cheyyar (Father Retd Engineer) Job Optional. Divorcee, widow excuse. Parameswaran, -04182/222548/044-28441627 or Panchapakesan 9840330531 web: www.ssmatri.com ID58162 Box No. 16290

◆ Brahacharanam, Moudgalyam, Moolam(2), Feb.83/170/50,000 B.E., SWE, Chennai (Also leading Violinist) seeks Iyer bride. Talent/Interest in Carnatic Music welcome. Sridharan-044/2445 1436 or 45018960 or Panchapakesan 98403 30531. web.www.ssmatri.comID 56400 Box No. 16291

◆ ஆத்ரேயம், வடமாள், திருவோணம், 37/5.7'/30,000/- M.A., PGDCA ஒரே மகன், மத்திய அரசுப் பணி சென்னையில், சொந்த வீடுள்ள வரனுக்கு படிக்காத/படித்த வேலைக்குப் போகாத/போகும் குடும்பப்பாங்கான பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். எதிர்பார்ப்புகள் இல்லை. தொலைபேசி: 044-65641552 பெட்டி எண் : 16292

◆ Smartha, Kannada, Gowthama, Pooradam, 27/5.9', Good-looking, BE M/S Daimler Hero, Chennai

(German Coy), 8 lacs p.a. seeks graduate, Homely fair girl. Madwa, Vadamal acceptable. 9894230556. Box No. 16293

◆ Iyer, Ashtasagasram, Haritham, Revathi, 31/174, CCIE (Highest Qualification in Net Working), Network Consulting Engineer MNC, Bangalore, Attractive Salary very fair & Handsome seeks qulaified Lean Good-looking, home loving girl. 09448993099, 080-25702847 Box No. 16294

◆ Iyer, Vadamal, Bharadwajam, Hastham, 28, 171 cm, M.Sc., (Chemistry), Manager, Reputed Company, Chennai, Annual Income 4.6 Lakhs, Middle Class family, seeks girl, employed preferably Chennai, Minimum Graduate. Contact Phone: 04364-228808 Box No. 16295

**◆ Om Namo Venkatesaya My dear son Iyer, Srivatsam, 36/166 cm, Manager (Admin) MNC, Chennai, good-looking, smart healthy, impressive, pious deserves smart, nice looking, healthy girl from simple very respectable vegetarian family. Om Sathyasai Contact:(044) 2452 9303, Cell: 99401 75356. Box No. 16296**

◆ Iyer, Vadamal, Athreya, Chithirai, 4th padam, 23.11.1981, B.E., MNC at Bangalore. Seeks suitable employed girl. Subsect no bar. Ph:044-24899336, 98402 98191 Box No. 16297

◆ Tamil Iyer, Vadama, Kowsiga, 46, Uthrattadhi, S.S.L.C., Good Job, 12,000/- p.m., Issueless Widow and Divorce acceptable. Wanted Tamil Iyers only. Janaki Mahadevan, 080-2566 3117, 99805 12052 Box No. 16298

◆ கன்னி ராசி, உத்திரம், 22.5.1972, எம்.எஸ்.சி., பி.எட்., ஆசிரியர், நிரந்தரப் பணி, மாதம் ரூ.23,000/- தாயார் மட்டும் ஐயர். தந்தை இல்லை. ஐயர், ஐயர் கலப்பு மற்றும் சுத்த சைவம் தேவை. பெண் பட்டதாரியாக இருத்தல் நலம். எதிர்பார்ப்புகள் இல்லை. ஃபோன்:0431-2423504 பெட்டி எண்: 16299

◆ வட ஆர்காடு ஐயர், வடமாள் 20.6.1982, 5.6', கௌசிகம் ரோஹிணி, பி.ஈ., சாஃப்ட்வேர் இன்ஜினியர், பெங்களூர் வரனுக்கு வடமாள் பட்டதாரிப் பெண் தேவை. வேலை பார்க்க வேண்டிய கட்டாயம் இல்லை. ஃபோன்:044-24733065/9445342769 பெட்டி எண்: 16300

◆ Bride wanted from a Vadamal Family for a Software Professional U.S.A. earning US$5000/- p.m., Star Makam, Koushika Gothram, 2.10.1975, 5.4', Phone:044-24733065/9445342769 Box No. 16301

◆ Iyer, Vadamal, Bharadwajam, Uthirattadhi, 26, 5.7', B.E. (Instrumentation) employed in MNC, 6.00 Lacs p.a. fair, seeks suitable fair graduate bride employed/unemployed. Contact:9962899059/24897293 Box No. 16302

◆ Iyer, Brahacharanam, Bharadwajam, Hastham Nov.77, 5.11',

20,000/- p.m., M.Com., PGDCA, pursuing MBA, working with Tata group, good-looking, clean habits, divorced seeks Brahmin homely divorced girl (without issue). Subsect no bar. Contact with photo and horoscope. 0755-2414021, 09893284349. Muhurtham Id-1553046 Box No. 16303

◆ Iyengar, Kowshigam, Avittam, 37, BBA, fair, slim, 60 kg, working in Railways Chennai, seeks +2/Graduate girl from any Brahmin Community. (Inter Caste Accepted). Ranganathan. 9445181122, 044-26170837 Box No. 16304

◆ மாத்வா கன்னடம், 43, 175 செ.மீ., ஆத்ரேயம், சுவாதி, BA(Eco), (ICWA), தனியார், 17,000 மாத வருமானம், +2/ பட்டப்படிப்பு படித்த வேலைக்குச் செல்லும்/செல்லாத முப்பத்தேழு வயதுக்குட்பட்ட பெண் தேவை. ஐயர்/ ஐயங்கார் பெண்கள் சம்மதம். பெட்டி எண்: 16305

◆ Iyer, Vadamal, Srivatsam, Moolam, 39 years, 165 cm(BA), Business, 15,000/- p.m., seeks employed/ unemployed girl. Subsect no bar. S. Lakshminarayanan, 6/26, Second Bharathiar Street (South), Pallavanthangal, Chennai-600 114. Cell:99402 66465.

◆◆ Iyer, Brahacharanam, Srivatsam, Rohini, 31/165, M.B.A., Assistant Manager, ICICI Bank, Coimbatore, Rs. 37,000/- p.m., Own Flat at Chennai, seeks UG/PG employed/unemployed girl. SNB Send horoscope: N. Gopalakrishnan,

**டிசம்பர் 2009 மாத இதழுக்கான திருமண மலர் விளம்பரங்கள் எமது அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 5.11.2009**

2976, East IIIrd Street, Pudukkottai-622001. Ph:04322-228512.

◆ ஐயர், உத்திரம், உத்சவ கோத்திரம், 33, 5.5, ஐடிஐ படித்து, டிரைவராகப் பணிபுரியும் வரனுக்கு, மணமகள் தேவை. Contact: 9092882637, G.Bavani, G2, Plot No. 10 & 11, Boopathy Avenue, Kundrathur, Chennai-600 069.

◆ ஐயர், பூரட்டாதி, காஸ்யப, 39, 5.7', ITI Electrical, Oman L&T Junior Engr, Rs.50,000/- p.m., குழந்தை இல்லாத சட்டப்படி விவாகரத்தான வரனுக்கு, படித்த பெண் தேவை. ஐயர் உட்பிரிவு சம்மதம். குழந்தையில்லாத, சட்டப்படி விவாகரத்தானவர்களும் விண்ணப்பிக்கலாம். Contact: 9092882637. G.Bavani, G2, Plot No. 10 & 11, Boopathy Avenue, Kundrathur, Chennai-600 069.

**◆ Wanted Iyengar bride for 35 year old M.Sc., M.Phil., Ph.D., Groom, Bharadwaja/ Moolam/ 35 years, employed in Benguluru as Scientist. Send Horoscopes to Mr. Srinivasan, 151/2, Agraharam, Thuvariman, Via Ellis Nagar, Madurai - 625 010.**

◆ Iyer, Vadamal, Pooram, 38 age, 170cm, B.Com., Bharathwajam, Own Flat, Rs. 15,000/- employed/ unemployed home loving. Brahmin girl. Contact: Ph:9226270151 R.V.Swamy, C16, Jhulelal Complex, Bhat Nagar Road, Pimpri, Pune-411 017.

◆ Wanted any Brahmin bride for Tamil Iyer, Vadamal, Naidruvakasyapa, Ashwini, Sudha Jadhagam, 1967, B.Sc., Electronics, MBA, employed Pune Rs. 48,000/- p.m., 1 year difference accepted. Contact: Flat 21, Anuradha Complex, Bhaupatil Road, Kirkee, Pune-411 020. Phone:020-2581 8702, 9890001857

◆ ஐயர், வடமாள், கௌசிகம், ஆயில்யம்(4), 42, M.A. M.Phil., B.Ed., (Tamil), PG. Asst. Rs. 16,000/-p.m., சொந்த வீடு, ஒரே பையனுக்கு படித்த பெண் தேவை. பிராமணப்பிரிவு எதுவாயினும் சம்மதம். எதிர்பார்ப்பு இல்லை. அனந்தராமன், 4/13, 'சி' செக்டார், விஜிராவ் நகர், வேலூர்-632 007. 0416/2247982

◆ Iyengar, Koundinyam, Avittam, 10.04.1972, B.A., Own Business seeks employed/unemployed bride of any Brahmin Community R. Sathyamoorthy, A3/33, Mambalam High Road, T.Nagar(N), Chennai-600 017. Ph:2814 2491/9444 994 995

◆◆ Tamil Iyer, Vathima, Haritha Gothram, Pooradam, 16.10.1980 5.11', very fair, MS, MNC-Bangalore seeks suitable bride from good family background. Contact Mr. A. Sangameswaran, "Sai Kudil", 16,Ganapathipuram, Contonment, Trichy-620 001. Ph: 9994034895, 9884165342, 0431-2400637. email: sangameswaran39 @yahoo.com

◆ Thengalai, Bharadwajam, Bharani(3), 34/5.7', 20,000/- B.Sc., PGDCA, Executive(0) Sundaram Finance Chennai, Own Flat seeks suitable alliance Kalai no bar. Iyer also accepted. Simple marriage. Contact: V.Raghavachari, 7, Shaw Wallace Colony, Chitlapakkam, Chennai - 64. Cell: 9840608147

◆ Iyer, Vathiyamal, Bharadwajam, Thiruvonam 2nd padam, B.E. (Mech), Senior Engineer, TVS Brakes India Ltd., Chennai 4.5 lacs p.a. SS Matri 57238 seeks Professionally qualified employed good-looking girl with good family background. Subsect no bar. Expect horoscope with family details. Contact: Yagnanarayanan.G. 9/21, Sourashtra Nagar 7th Street, Choolaimedu, Chennai-600 094. Cell:9486635628. email: yng1950@gmail.com

◆ Iyer, Vadamal, Avittam 32 years, Mouthgalyam, SSLC, employed in Singapore (Rs.50,000 p.m.) seeks suitable girl. Subsect no bar. N.Subramanian, 34, East First St., Mannargudi-614 001. Ph:254221. Mob:9486319850 & 94449 80365.

◆ Iyer, Vadamal, Kousikam, Moolam, July 1979, 177 cm, B.Sc., Computer Science, Manager in Private Bank, Chennai. 7 Lakhs p.a. seeks suitable employed graduate girl. Contact: Sethu Raman, 10/28, Ambedkar St., Karunanidhi Nagar, Nanganallore, Chennai - 61. Ph:044-65382900 Cell: 9787690012

# இனிய கௌரவம்!



எங்களது திருமணம், வெகு விமரிசையாக நடந்தது. திருமணத்துக்கு வந்து வாழ்த்தியவர்களை நினைவுபடுத்தும்விதமாக புகைப்படங்கள், மற்றும் வீடியோவைப் பதிவுசெய்தோம். எல்லாம் நிறைவுறும் சமயம் எனது கணவர், மேளக்காரர்கள், மேடை அமைத்தவர், புகைப்படக்காரர், வீடியோ படம் எடுத்தவர், சமையல்காரர்கள் என்று அனைவரையும் எங்கள் அருகில் நிற்கவைத்து வீடியோ, புகைப்படம் எடுத்தார்.

அதற்கு அவர் சொன்ன விளக்கம். ''நமது திருமணம் இனிதே நடக்க முக்கியப் பங்காற்றிய அவர்களையும் கௌரவிப்பதே முறை''- இனி, இக்கலைஞர்களையும் மேடைக்கு அழைத்து மதிக்கலாமே?

– இ.ராஜேஸ்வரி,
வெண்ணாரணைக்கோட்டை.

## மணமகன் தேவை

◆ **Kousika, Brahacharanam Iyer girl, Pooratathi, April 1987, 5.4', fair, B.Sc., (Comp.sc) MBA, Chennai employed seeks post-graduate Engineer/MBAs aged 26-27 years, working abroad/India. Contact: email: weejay_r@hotmail.com/0422-2414125/Bharat Matrimony ID M 1195577. Box No. 20451**

◆ Telugu Smartha Brahmin girl, 25, 5.3', Star Anuradha, Kousika Gothram, B.Com., PGDHRM, employed in Bangalore, 15,000/- p.m., seeks Bangalore based alliance 30 year and below. Phone:080-2364 6306. Box No. 20452

◆ **ஐயர், வடமாள், ஸ்ரீவத்ஸம், கிருத்திகை, ரிஷபம், 24 வயது, பட்டதாரி, தனியார் நிறுவனம், மாதம் ரூ.10,000/- தந்தை இல்லை (heredity white patches appearing in hands and legs only) பெண்ணுக்கு பரந்த மனப்பான்மை யுள்ள மணமகன் தேவை. 98415-26567, 98417-57186 பெட்டி எண்: 20453**

◆ Iyer, Vadamal, Sankruthi, Vishakam, 24 years, 5.7' M.Sc., Software Engineer, Legal Divorcee with no issues seeks Iyer groom. well employed professionals. Box No. 20454

◆ Vadamal Bharathwajam, Revathy Sept. 80/29/150 B.E. M.S.(U.S.A.) girl seeks suitable bridegroom. Phone:0431-2771536 Box No. 20455

◆ ஐயர், வடமாள், ஸ்ரீவத்ஸ கோத்திரம், மகம், 22, 5.3', ஆயுர்வேதம், BAMS படித்துள்ள மணமகளுக்கு, நல்ல வேலையிலுள்ள, நல்ல குணமுள்ள, நல்ல குடும்பத்திலிருந்து மணமகன் தேவை. ஃபோன்: 04322-222157, செல்:98424 78929. பெட்டி எண்: 20456

◆ Iyer, Vadamal, Bharadhwajam, Mirugasersham, 1980/5", B.Com., PGDBA, Asst. Manager Pvt. Bank seeks suitable groom TM M 1645601 Phone:044-22237316 Box No. 20457

◆◆ **சட்டப்படி விவாகரத்து பெற்று, 13 வயதில் மகன் உள்ள 39 வயது பிராமணப் பெண்ணுக்கு, முற்போக்கு எண்ணங்கள் கொண்ட 45 வயதுக்குட்பட்ட, நல்ல வேலையில் உள்ள பிராமண வரன் தேவை. பெண்ணுக்கு சொந்த வீடு, உத்தியோகம் உள்ளது. rao_sriram@hotmail.com பெட்டி எண் : 20458**

◆◆ குறியிட்ட திருமண விளம்பரங்களை மங்கையர் மலரின் இணைய தளத்திலும் காணலாம். இதமுடன் சேர்த்து இணையதளத்திலும் வெளியிட கூடுதல் கட்டணம் ரூ. 100/- மட்டுமே
Our website : www.mangayarmalaronline.com

◆ Widow, issueless, Tamil Iyer, Vadamal, Srivatsam, Revathi, 30 years, Wheatish 5.3', working MNC, seeks suitable groom. widowers without issues can also apply. Contact: S.V. Gopalakrishnan, 040-2389 8923/ 9490752814/040-27052392. vauhini18@gmail.com Box No. 20459

◆ **Wanted Iyengar groom, aged 32-34 years for a Vadagalai Girl. Koundanya/Maham/28/154/40k p.m., working Nights. Parents separated. If Interested, please Contact: pv_1977@hotmail.com Box No. 20460**

◆ Vadamal, Kousigam, Visagam(4), June 83/163/BE SWE Chennai, V.fair, Music Talented seeks Iyer professional Chennai/Bangalore Ganesh-09443885826 or Panchapakesan 98403 30531 web.www.ssmatri.com ID 81718 Box No. 20461

◆ Iyer, Vadama, Koundinya, Thiruvonam, Oct-81, 165, Rs. 60,000/- p.m., BE, MNC, Chennai seeks, Professionals. Subsect no bar. Mail Venkatgeetha.bk@gmail.com Ph: 22234403, 98405 83801. Box No. 20462

◆ ஐயர், வட ஆர்காடு, வடமாள், பாரத்வாஜம், அஸ்வினி, 1982, 5.4', B.E., MNC, 55,000/- சென்னையில் வேலையிலுள்ள, 29-30 வயதில் தகுந்த Non-IT Professional மணமகன் தேவை. ஃபோன்: 044-24723791 செல்: 9789929813 பெட்டி எண்: 20463

◆ **Iyer, Brahacharanam, Gowthama, Thiruvadhirai-4, very fair, 26 years, 165cms, MBA(HR) Assistant Manager in Pvt Company at Hyderabad/seeks well qualified employed, clean habit groom upto 31 years. Contact Father: S.Venkataramana, 563/ 8, Railway Officers Quarters, OCO Compound, St.John Road, Secunderabad-500 025. Phone: 040-27823952.**

◆ **Iyer, Vadamal, Srivatsam, Ayilyam, 25 years/5.3', M.A. M.Phil., working as Professor, seeks BE/ MBA bridegroom. A.B.S. Shivaraman, No.14, Pushpah Villa, 2nd Floor, Manpada Road, Dombivli East, Mumbai. Phone: 0251-2874615**

## மணமகன் மணமகள் தேவை

◆ God fearing, 1965 born, Moolam 3rd pada, Vadama, Bharathwaja, B.Com. with CA, Articles completed running a Cottage Industry & a shop income Rs. 40,000/- appx. requires Brahmin girl of any subsect. Simple & early marriage and A girl (sibling) with minor ailment in the heart 1968 born, Pooradam, B.A. History requires educated boy who doesn't want child and willing to settle down at Tanjore to support the above business. Contact: Ph.No.9443397293/42668645 Box No. 30002

குறும்பு கலாட்டா



# “மீட் மை ஃபிரெண்டு ஜிம்மி!”

என் இரண்டாவது அக்கா, உஷாவுக்குத் திருமணம் நிச்சயமானது. நிச்சயத்திற்கு வந்திருந்த கஸின் பட்டாளத்தோடு எங்கள் வீட்டின் மதில்சுவரை ஒருநாள் குத்தகைக்கு எடுத்து, எங்களது ஆங்கில சங்கீத ஞானத்தை, "Jimmy please say you will wait for me" என்ற ரொமேன்டிக் பாடலைப் பாடி, அதிரவைத்துக் கொண்டிருந்தோம்.

அப்போது, எங்கள் வீட்டின் முன் சர்ர்ரென்று கார் ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து இறங்கி வந்தது வேறு யாருமல்ல. உஷா அக்காவின் ஹீரோ, கல்யாணப் பிள்ளை நந்தகுமார்தான். கூடவே ஒரு அழகான நாயும் வந்தது. 'தபதப' என்று மதில்சுவரிலிருந்து நாங்கள் வானரக் கூட்டம் போல் குதித்து, விருந்தாளிகள் முன் பக்கெட் பக்கெட்டாக அசடுவழிய நின்றோம்.

''மீட் மை ஃபிரண்டு ஜிம்மி'' என்று மாப்பிள்ளை சார், அவரது செல்லத்தை எங்களுக்கு அறிமுகப்படுத்த, ''ஹா, ஹா ஹிஹி'' என்று எங்கள் கூட்டமே குஜராத் நிலநடுக்கத்தைத் தோற்கடிக்கும் வகையில் அதிர்ந்தது. விஷயம் தெரிந்ததும், எங்கள் சிரிப்பலையில் அவரும் கலந்துகொள்ள வீடே கல்யாணக் குறும்பு களைகட்டி அமர்க்களப் பட்டது.

கஸின்கள் மத்தியில், அவ்வைசண்முகி படத்தில் கமல்ஹாசன் பாடும் 'ருக்கு ருக்கு' பாடலைப் போல் இப்போதும் கல்யாணம் என்றாலே "Jimmy please say you will wait for me"தான் எங்களது ஃபேவரிட் நலுங்குப் பாடல்!

- மித்ரா முரளீதரன், நியூமும்பை.



# சீதைக்கு

''**சீ**தா கல்யாண வைபோகமே'' என்ற கட்டுரை (மங்கையர் மலர் - திருமண மலர் - ஆகஸ்ட் 09) படித்தேன். ஜனகமகாராஜா, சீதையை ஸ்ரீராமருக்குக் கன்னிகாதானம் செய்த போது சொன்ன சுலோகத்தின் அர்த்தம் இதுதான்:-

''இந்தச் சீதை என் பெண். உன்னுடைய ஒவ்வொரு தர்மத்தையும் கூடவேயிருந்து நிறைவேற்றுபவள். ஆதலால் இவளைப் பெற்றுக் கொள். உனக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும். உனது கையால் அவளது கையைப் பற்றிக்கொள். தனது கணவன்தான் தனக்குக் கதி என்று கருதும் குணமுள்ளவள். மகாபாக்கியவதி. உனது நிழலைப் போல, உன்னை விட்டுப் பிரியாதவள்'' என்று சொல்லியவாறு ஜனகமகாராஜா மந்திரங்களைப் பாவனமான தீர்த்தத்தை வார்த்தார். இவற்றிற்கேற்பவே சீதாதேவியும் நடந்து கொண்டாள்.

**வ**னவாசத்திற்கு ஆயத்தமாக இருக்கும்போது கௌசல்யாதேவி, சீதையிடம், ''பெண்கள் தங்கள் கணவர்களால் நன்கு கௌரவிக்கப்பட்டாலும், கணவன் சிரமதசையில் இருக்கும்போது அவனை வெறுப்பார்கள். அதுவரை சுகமனுபவித்திருந்தாலும், கணவன் செல்வமிழந்து சிரமப்படும்போது குறைகூறி, அவனை விட்டு விலகி விடுவார்கள்.

''ஆனால் நற்குடியில் பிறந்த, நன்னடத்தையுள்ள ஒரு பெண்ணோ, அவளது குடும்பத்தின் நற்பெயரைக் காத்து, தன் கணவன், எந்த நிலையில் இருந்தாலும், அவன்தான் தன்னால் மதிக்கப்படவேண்டியவன்; தன்னால் பக்தி செலுத்தப்பட வேண்டியவன்

என்று உணர்ந்து செயல்படுவாள்.

''அதனால் சீதையே, என் மகன் ராமன், கானகம் சென்றாலும் அவனை நீ ஒருபோதும் அவமதித்து விடாதே. அவனுக்குப் பொருள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவனே உன் கடவுள்'' என்று கூறினார்.

*(அயோத்யாகாண்டம் 39/20-25)*

அதற்கு சீதாதேவி, ''அம்மா! தாங்கள் கூறும் அறிவுரைகளைக் கட்டாயம் கடைப்பிடித்து நடப்பேன். என் கணவரிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது எனக்குத் தெரியும்; என் பெற்றோர்கள் எனக்குச் சொல்லி இருக்கிறார்கள். என்னைப் பாமரப் பெண்ணோடு ஒப்பிட

# அட்வைஸ்!

வேண்டாம். எவ்வாறு சந்திர ஒளி சந்திரனை விட்டு அகலாதோ அவ்வாறே என்னாலும் என் உத்தமமான குணங்களை விட்டு விலகி இருக்க முடியாது.

''தந்தி இல்லாத வீணையும், சக்கரம் இல்லாத ரதமும் என்ன பயன்? நூறு மகன்கள் இருந்தாலும் ஒரு மனைவிக்குத் தன் கணவன் இல்லை என்றால் என்ன பயன்? தந்தையால், ஒரு பெண்ணுக்குச் சிறிதளவு சந்தோஷம்தான் தர முடியும். ஒரு சகோதரனானாலும், மகனானாலும் அவ்வாறே. ஆனாலும் தனக்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தரும் கணவனை எந்த மனைவியால்தான் போற்றாமல் இருக்க முடியும்? ஆதலால் என்னைக் குறித்துச் சந்தேகிக்க வேண்டாம்.''

*(அ.கா 39/26-31)*

ஒரு நல்ல மனைவியின் இயல்பை, இதைவிட விளக்கமாகச் சொல்ல முடியுமா?

**- டி.எம்.சுந்தரராமன், சென்னை.**



**க**ஸ்தூரிபா தென்னாப்பிரிக்காவிலிருந்த போது உடை விஷயம், சங்கடமாகயிருந்தது. இந்திய ஆண்கள், மேற்கத்திய உடையை ஏற்றுக் கொண்டதால் காந்திக்கு பிரச்னையில்லை. ஆனால், கஸ்தூரிபா இந்தியப் பண்பாட்டை இழக்காமல் மேற்கத்திய பாணியில் நீளமான புடைவை, முழுக்கை ரவிக்கை, காலணி, காலுறை போன்றவற்றை அணிந்து கொண்டார்.

இதுகுறித்து, கஸ்தூரிபா கிண்டலாகச் சொன்ன விஷயம் இக்காலப் பெண்களுக்கும் பொருந்தும். கஸ்தூரிபா சொன்னது என்ன தெரியுமா?

''பெண்கள் நாகரிகமானவர்கள் என காட்டிக் கொள்வதற்கு, எத்தனை விலை கொடுக்க வேண்டியுள்ளது!''

**- மல்லிகா அன்பழகன், சென்னை-78.**

# "எத்தனை விலை!"

# கிரைண்டர் சாமி!



அம்மா வீட்டில், ஒரு பூஜைக்காக சென்றோம். அனைவரும் சாமி கும்பிட பூஜையறைக்கு விரைந்தோம். ஆனால் எனது இரண்டரை வயது மகள் கிர்த்தனா, வேகமாகச் சமையலறைக்குப் போய், அங்கிருந்த கிரைண்டரைக் கும்பிட்டாள். எல்லோரும் 'சட்' என சிரித்து விட்டோம்.

விஷயம் இது தான். நாங்கள் இருந்த வீட்டில், கிரைண்டருக்கு மேலே இருக்கும் ஷெல்ஃபில்தான் சாமிப் படங்கள் இருக்கும். பூஜை, பண்டிகையின் போது, கிரைண்டருக்கு முன்புதான் படையல் போடுவோம். அதனால்தான் கிரைண்டரை சாமியாக நினைத்துக் கொண்டிருக்கிறாள் என்பது புரிய, சிரிப்புவெடி நிற்கவில்லை.

- எஸ். ஹேமலதா சுவாமிநாதன்,
பொள்ளாச்சி.

எங்கள் வீட்டில் எப்போதுமே மண் பானை நீர்தான். ஒருநாள், என் மகன் விளையாடி விட்டு வந்து பானை நீரை எடுத்துக் குடித்தான். அவனுக்கு ஜலதோஷம் பிடித்திருந்தது. என் அம்மா, "குளிர்ந்த நீரைக் குடிக்காதே மூக்கு ஒழுகும்!" என்றார்.

அதற்கு அவன், "மூக்கு எப்படி பாட்டி ஒழுகும்? மூக்கில் சளிதானே ஒழுகும்" என்றானே பார்க்கலாம்!"

- ராஜி நாதன்,
புனே-14.

என்னுடைய தம்பிப் பெண் சஞ்சனா, படுசுட்டி. அவர்கள் வீட்டில் வேலை செய்யும் ராஜம்மா, நான்கு நாட்களாக வேலைக்கு வராமல் முகமெல்லாம் வீங்கியபடி அன்றுதான் வந்தாள்.

விசாரித்தபோது, "எனக்கும், என் கணவனுக்கும் சண்டை. தற்கொலை செய்துக்கலாம்னு கொசுவத்திச் சுருளை உடைச்சுச் சாப்பிட்டேன். அப்படியும் இந்த உசிரு போகலை" என்று அழுது கொண்டே கூறினாள்.

அவள் பேசுவதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த சஞ்சனா, "கொசுவத்திக்கு கொசுக்களே சாகறதில்லை. நீங்க எப்படிச் செத்துப் போவீங்க?" என்று மழலையில் கேட்க, ராஜம்மா உட்பட நாங்கள் அனைவரும், சிரித்து விட்டோம்.

- ச. ஜெயலக்ஷ்மி,
அரும்பாக்கம்.



குட்டீஸ் லூட்டி

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

நவம்பர் 2009 இதழுடன் இணைப்பு



✈ சொந்த வேலையோ, சுற்றுலாவோ, அலுவலக நிமித்தமோ, வணிகப் பயணமோ... உங்கள் வெளிநாட்டுப் பயணத்தைத் திட்டமிடுவதற்கான சுலபமான முதல் வழி இன்டர்நெட் புக்கிங்தான்!

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ www.yatra.com, www.travelguru.com போன்ற எத்தனையோ வெப்சைட்டுகள் உள்ளன. எங்கே போவது, எப்படிப் போவது, பட்ஜெட் என்ன என்பதையெல்லாம் தீர்மானித்த பிறகு, ஜஸ்ட் எ க்ளிக் மட்டுமே செய்யுங்க!

எந்த விமானத்தில் எந்த வழியில், என்ன கட்டணம் முதற்கொண்டு, ஹோட்டல், பேக்கேஜ் டூர்கள், ஷாப்பிங் டிப்ஸ் வரை தகவல்கள் 'தடதட' என்று வந்து குவியும். உங்களுடைய தேவை, பட்ஜெட், விடுமுறை முதலியவற்றை ஆலோசித்து நீங்கள், உங்கள் விமானப் பயணத்தைத் தேர்வு செய்யலாம்.

# வெளிநாட்டுப் பயணம் 64!




✈ ஆன்லைனில் புக்கிங் செய்ய, உங்களிடம் அதிகாரப் பூர்வமான வங்கிகளின் கிரெடிட் கார்டோ, டெபிட் கார்டோ இருக்க வேண்டும். அதைப் பயன்படுத்தி உலகின் அனைத்துப் பகுதியிலிருக்கும் எல்லா சேவைகளையும் திறம்படப் பெற்றுக் கொள்ளலாம். அதுவும் வீட்டிலிருந்தபடியே!


✈ விமான டிக்கெட், ஹோட்டல் புக்கிங், டூர் புக்கிங் போன்றவை உறுதியானதும், அந்த கன்ஃபர்மேஷன் தாள்களை ப்ரிண்ட் அவுட் எடுத்து, பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளுங்கள்.
வெளிநாட்டுப் பயணம் 64!



✈ கல்லூரிச் சுற்றுலா, குடும்பச் சுற்றுலா, அலுவலக நண்பர்களின் உல்லாசச் சுற்றுலா, தேனிலவு, விடுமுறை சுற்றுலா, புனித யாத்திரை என விதவிதமான பயணங்கள் உள்ளன. அவற்றுக்கு ஏற்றது போல உங்களது பயணம் மாறும். எனவே முறைப்படி திட்டமிடுதல் அவசியம்.

✈ ஐரோப்பா, அமெரிக்கா போன்ற நாடுகளுக்குச் செல்லும் போது, உள்ளூர்ப் பயண விதிகளும், கட்டுப்பாடுகளும் வேறுபடும். உதாரணத்துக்கு... சில ஏர்லைன்ஸ்களில் கையில் எடுத்துச் செல்லும் லக்கேஜுக்குக் கூட எடைக்கு ஏற்ற கட்டணம் வசூலிப்பார்கள். எனவே, குறைந்த சுமை; நிறைய மகிழ்ச்சி!

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ காமிரா, ஸ்பேர் பாட்டரி, ஃபோன் சார்ஜர்கள், மாத்திரைகள், புத்தகம், தொப்பி, சிறு குடை போன்றவற்றை எப்போதும் கைப்பையில் வைத்திருங்கள்.

வெளிநாடு செல்லும்போது மிக மிக முக்கியமாகப் பாதுகாக்க வேண்டியது பாஸ்போர்ட். மூன்று நகல்கள் போட்டோஸ் டாட் எடுத்து ஒன்றை வீட்டிலும் மற்ற இரண்டை இரண்டு பெட்டிகளில் தனித்தனியாகவும் வைப்பது நல்லது.

# வெளிநாட்டுப் பயணம் 64!




✈ பாஸ்போர்ட்டை பிளாஸ்டிக் கவரில் ரப்பர் பேண்டு போட்டு வைத்துக் கொள்ளவும். கணவன்-மனைவி இருவரும் சேர்ந்து செல்கையில் பாஸ்போர்ட்டை ஆண்கள் சட்டையின் உள் பாக்கெட்டிலும், பெண்கள் தனியாகச் செல்லும்போது, பாஸ்போர்ட்டை கைப்பையிலும் வைத்துக் கொள்ளுங்கள்.

✈ உங்களது பெயரை யார் கேட்டாலும் பாஸ்போர்ட்டில் உள்ளபடியே சொல்லுங்கள். உதாரணமாக உங்களது பெயர் எஸ். ஜெயந்தி என்றும், பாஸ்போர்ட்டில் சீனிவாசன் ஜெயந்தி என்றும் குறிப்பிட்டிருந்தால், சீனிவாசன் ஜெயந்தி என்றே எப்போதும் சொல்லுங்கள்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ உங்களது பாஸ்போர்ட் எண்ணை மறக்காமல் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். பாஸ்போர்ட்டை அனாவசியமாக வெளிநபரிடம் கொடுக்காதீர்கள். பாஸ்போர்ட்டை பத்திரமாக வைத்திருந்தாலே பயணம் இனிதாகவும் கவலையில்லாமலும் அமையும்.

✈ பயணம் செய்யப் போகும் விமான எண், நாள், நேரம், தங்கும் ஹோட்டலின் விலாசம், தொலைபேசி எண், அந்த ஊரில் உள்ள உறவினர், நண்பர்களின் விலாசம், அவரது தொலைபேசி எண், உங்களது வீட்டு விலாசம், அவசர தொலைபேசி எண் ஆகியவற்றைக் குறிப்புப் புத்தகத்தில் எழுதி, உங்கள் கையிலேயே வைத்துக் கொள்ளுங்கள்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ பயணத்தின் போது நீங்கள் எடுத்துப் போகும் பெட்டியின் நிறம், பெயர், அளவுகள் ஆகியவற்றைக் குறித்துக் கொள்ளுங்கள். ஏர்போர்ட்டில் பெட்டி தொலைந்துவிட்டால், ஏர்போர்ட் அதிகாரிகளிடம் புகார் செய்ய வசதியாக இருக்கும்.

→ நீங்கள் போகும் இடங்களைப் பற்றிய செய்திகள், குறிப்புகள் போன்றவற்றை முன்கூட்டியே எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அப்போதுதான் தவறாமல் எல்லாவற்றையும் பார்க்க முடியும். தவிர, உங்கள் அடையாள அட்டையையும் உடன் வைத்திருங்கள்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ உங்களது பயணத்தின் போது பயண வழிகாட்டி (அ) குழுத் தலைவரின் தொலைபேசி எண்ணை எழுதி வைத்துக் கொண்டால், பயணத்தின் போது திசைதிரும்பினாலும் இவை கைகொடுக்கும். தவிர, கேமரா, வீடியோ போன்றவற்றின் எண்களையும் மற்ற விவரங்களையும் உடன் எழுதி வைத்துக் கொள்ளுங்கள்.

✈ பயணத்தின் போது சக்கர வசதிகள் கொண்ட இரண்டு பெட்டிகளை எடுத்துச் செல்லுங்கள். ஒன்று செக்-இன்-லக்கேஜ், மற்றொன்று கேபின் லக்கேஜ். முக்கியமானவற்றை கேபின் பெட்டியில் வைத்துக் கொள்ளுங்கள். லிப்ட், போர்ட்டர் வசதியில்லாத போது இரண்டு பெட்டிகளையும் கையாள்வது எளிதாக இருக்கும்.

# வெளிநாட்டுப் பயணம் 64!




✈ நீங்கள் கொண்டு செல்லும் பெட்டியின் எடை, விமானத்திற்கேற்றவாறு 40-45 கிலோ எடைக்குள் இருக்க வேண்டும். அப்படி இல்லாமல் அதிகமாக இருந்தால் அதற்குத் தனியாக பணம் கட்ட நேரிடும். கையில் வைத்திருக்கும் பையில் ஏழு கிலோ வரை வைக்கலாம்.

✈ பயணத்தின்போது எடுத்துச் செல்லும் பெட்டி மிகவும் உறுதியாகவும் அதன் கைப்பிடி மிகவும் வலுவுள்ளதாகவும் இருக்கட்டும். பெட்டிகளின் இரண்டு சாவிகளில் ஒன்றை நீங்களும் மற்றதை தங்களது கணவரிடம் கொடுத்து வையுங்கள்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ பெட்டியை எளிதாக அடையாளம் காண வித்தியாசமான நிறத்தில் பெட்டி இருப்பது நல்லது. உங்கள் பெயர், முகவரியுடன் கூடிய ஒரு பெரிய ஸ்டிக்கரை பெட்டியின் அடிப்பகுதியில் ஒட்டி விடுங்கள். ஸ்டிக்கர் கிழியாமல் இருக்குமாறு டேப் ஒட்டிக் கொள்ளுங்கள்.

✈ பயணத்துக்காகப் பெட்டியின் நிறத்தைப் பார்த்துப் பார்த்து வாங்கினாலும் ஒரே நிறத்தில் ஒரே மாடலில் பல பெட்டிகள் இருக்க வாய்ப்பிருப்பதால், பெட்டியின் கைப்பிடியில் கலர் ரிப்பன் கட்டிக் கொள்ளலாம். இது மற்ற பெட்டிகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டும்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ ஏர்போர்ட்டில் தங்களது குழுவில் இல்லாதவர்களிடம் எந்தச் சூழ்நிலையிலும் தங்களது பெட்டியைக் கொடுக்காதீர்கள். அதேபோல மற்றவர்களின் பெட்டியையும் எக்காரணம் கொண்டும் வாங்கி வைத்துக் கொள்ளாதீர்கள். இது மிகவும் முக்கியம்.

✈ பெட்டியைப் பரிசோதனை செய்யும்போது, அடையாளத்திற்காக இரண்டு ஸ்டிக்கர்கள், ஒன்றை பெட்டியிலும் இன்னொன்றை போர்டிங் பாஸ்-ல் ஒட்டுவார்கள். இதைப் பத்திரமாக வைத்துக் கொள்ள வேண்டும். பெட்டி தொலைந்து விட்டால் நமக்குக் கொடுக்கப்பட்ட எண்ணை வைத்துத்தான் கண்டுபிடிக்க முடியும்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ முதலில் விமான நிலையத்தில் நுழைகிறீர்கள். உங்களுடைய ஏர்லைன்ஸ் கவுண்டர் சென்று டிக்கெட்டைக் காண்பித்து போர்டிங் பாஸ் வாங்கிக் கொள்ளுங்கள். உங்கள் பெட்டியைப் பரிசோதனை செய்தபின் உங்கள் கைப்பைக்கு டேக் (tag) போட்டுக் கொள்ளுங்கள்.

✈ இமிகிரேஷன் ஃபார்மை பூர்த்தி செய்து அதை இமிகிரேஷன் கவுண்டரில் கொடுத்து உங்கள் பாஸ்போர்ட்டில் சீல் வாங்கிக் கொள்ளுங்கள். அந்த நாட்டிற்குச் செல்ல அனுமதி அதுதான். பின்னர் கஸ்டம் கிளியரன்ஸ் செய்து கொள்ளுங்கள். அதன்பின், செக்யூரிட்டி செக் செய்து உங்கள் விமானத்தில் நுழையலாம்.

# வெளிநாட்டுப் பயணம் 64!





✈ விமான நிலையத்துக்குச் செல்லும்போது, குறிப்பிட்டுள்ள நேரத்துக்கு, முன்ன தாகவே சென்று விடுங்கள். ஏனென்றால் சில சமயங்களில் போக்குவரத்து நெரிசலில் மாட்டிக் கொள்ளலாம்.

✈ விமான பயணத்தின் போது காது வலி உள்ளவர்கள், வீட்டிலிருந்தே பஞ்சை எடுத்துச் செல்லுங்கள். சில சமயங்களில் விமானத்தில் கிடைக்காது. விமானத்தில் பயணிக்கும்போது, கால்களுக்கு சாக்ஸும், காதுகளுக்கு Ear plug- ம் அணிவது நல்லது.



✈ விமான பயணத்தின் போது அளவாகச் சாப்பிடுங்கள். முடிந்தவரை அசைவ உணவைத் தவிர்த்து, நிறைய தண்ணீர் அருந்துங்கள். தொலைதூரப் பயணமென்றால் விமானத்தில் அவ்வப்போது உள்ளேயே நடப்பதும் காலை அசைத்துக் கொண்டு சிறிய பயிற்சியையும் மேற்கொள்ளுங்கள்.

✈ சில நாடுகளில் சில பொருள்களை எடுத்துச் செல்வது தடைசெய்யப்பட்டுள்ளது. நியூஸிலாந்தில் பழங்கள், தண்ணீர் பாட்டில், தாவரங்கள், உணவுப் பொருள்கள் ஆகியவை கொண்டு செல்லக்கூடாது. எனவே செல்லும் இடங்களைப் பற்றி முன்னதாகத் தெரிந்துகொண்டு அதற்கேற்ப பொருள்களை எடுத்துச் செல்வது நல்லது.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ ஹோட்டல் அறைக் கதவுகள் கார்டு (அ) சாவி மூலமாக திறப்பதாக இருக்கும். அதே போல் பாத்ரூம் கதவுகளில் ஆட்டோமேடிக் பூட்டு இருக்கும். ஹோட்டல் வரவேற்பு, தொலைபேசி எண் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். தற்செயலாக பாத்ரூமில் மாட்டிக் கொண்டால் பாத்ரூமில் உள்ள ஃபோன் மூலம் உதவி கேட்கலாம்.

✈ குளிக்கும்போது பாத் டப்பில் உள்பக்கம் ஸ்கிரீன் வரும்படி வைத்துக் கொண்டு குளித்தால், தண்ணீர் வெளியே வராது. தண்ணீர் தரையில் பட்டு, கார்பெட் நனைந்து விட்டாலும், முகத்துக்கு மஞ்சள் பூசுபவர்கள் ஹோட்டலில் கொடுக்கும் துண்டில் முகத்தைத் துடைத்து விட்டாலும் அபராதம் கட்ட நேரிடும்!

# வெளிநாட்டுப் பயணம் 64!




✈ ஹோட்டலை விட்டு ஊர் சுற்றிப் பார்க்க வெளியே செல்லும்போது ஹோட்டலின் விசிட்டிங் கார்டை வாங்கி, அதன் பின்புறம் உங்கள் அறை எண்ணையும் எழுதி வைத்துக்கொள்ளுங்கள். அது எப்போதும் உங்களுடனேயே இருக்கட்டும்.

✈ அறையில் லாக்கர் இருந்தால் சில முக்கியமான பொருள்களை அதில் வைத்துக் கொள்ளலாம். விலையுயர்ந்த பொருள்களை வைப்பதற்கு முன்னால், சாதாரணமான பொருள்களை உள்ளே வைத்துப் பிறகு வெளியே எடுத்து, லாக்கரின் செயல்பாடுகளை சோதித்தபின்னர் பொருள்களை வைக்கவும்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ அறையில் உள்ள குளிர்சாதனப் பெட்டியில் சில உணவுப் பொருள்களை வைத்திருப்பார்கள். அது ஒவ்வொன்றுக்கும் பணம் கட்ட வேண்டுமா என்று தெரிந்துகொண்டு பின்னர் உபயோகியுங்கள்.

✈ அறையிலிருக்கும் தொலைக்காட்சி பெட்டியில் சில சேனல்கள் கட்டணத்திற்குரியதாக இருக்கும். இது தெரியாமல் நிகழ்ச்சிகளைப் பார்த்து, அறையைக் காலி செய்யும்போது பில்லைப் பார்த்து அதிர்ச்சி அடையாதீர்கள்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ நீங்கள் தங்கும் ஹோட்டலிலேயே காலையில் டிபன் தருவார்கள். கடல் போல் உணவு பஃபே சிஸ்டமில் வைத்திருப்பார்கள். உணவைத் தேர்ந்தெடுக்கும்போது ஜாக்கிரதையாகச் செய்யுங்கள். எல்லாப் பொருள்களையும் தட்டில் எடுத்து வைத்து, அதன் சுவை பிடிக்கவில்லை என்று வீணாக்காதீர்கள்.

✈ உணவு அருந்தும் போது அங்கு வைத்திருக்கும் பழங்கள், பிஸ்கட்டுகள் அல்லது மற்ற உணவுப் பொருள்களை அறைக்குக் கொண்டு செல்வது நல்ல பழக்கமல்ல.

# வெளிநாட்டுப் பயணம் 64!




✈ தனியாக பேருந்து, டாக்ஸியில் செல்லும்போது அதன் எண்ணை குறிப்புப் புத்தகத்தில் குறித்துக் கொள்ளுங்கள். பேருந்தில் குப்பை போடுவதோ, சாப்பிடுவதோ வேண்டாம். பேருந்து பயணம் நீண்டதாக இருந்தால், எளிய உணவை எடுத்துக் கொள்ளுங்கள்.

✈ பேருந்தில் பயணம் செய்யும்போது, கண்களை விரித்து இயற்கைக் காட்சிகளை ரசியுங்கள். அதை விட்டுவிட்டு பேருந்தில் ஏறியவுடனேயே தூங்கி விடாதீர்கள். இந்தப் பயணம் மறுபடியும் அமையுமா எனத் தெரியாது.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ கடைகளில் அனாவசியமாகப் பேரம் பேசாதீர்கள். அதே போல எல்லாப் பொருள்களையும் வாங்க வேண்டும் என்று நினைக்காதீர்கள். நமது ஊரில் கிடைக்காத சில அரிய பொருள்களை மட்டும் வாங்குங்கள்.



✈ சில அத்தியாவசியப் பொருள்களை வாங்கும்போது, நமது பணத்தின் மதிப்போடு அதை ஒப்பிட்டுப் பார்க்காதீர்கள். ஒரு காப்பி ரூ. 240 ஆகவும், ஒரு தடவை கழிவறையை உபயோகப்படுத்தினால் ரூ. 65 ஆகவும் இருக்கலாம். ஒப்பிட்டுப் பார்த்து அதிர்ச்சியடைந்து, பிறகு ஒன்றுமே வாங்க மாட்டீர்கள்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ அந்தந்த நாட்டினுடைய இயற்கைக் காட்சிகள், கலாச்சாரம் ஆகியவற்றைப் பிரதிபலிக்கும் சி.டி.களை வாங்கிக் கொள்ளலாம். பின்பு வீடு வந்ததும் நண்பர்களிடம், குடும்பத்தாரிடம் போட்டுக் காட்டலாம். இது வாழ்நாள் முழுவதும் ஒரு ஞாபகார்த்த பொருளாக அமையும்.

✈ ஷாப்பிங் செய்யும்போது பெண்கள் தனியாகச் செல்வதைத் தவிர்க்கவும். 'டூரிஸ்ட்ஸ்' மூலம் செல்கையில், ஷாப்பிங்கிற்காக ஓர் இடத்தில் நிறுத்தி, திரும்ப அதே இடத்துக்கு வரச் சொல்வார்கள். அந்த இடத்தை நன்றாக ஞாபகப்படுத்தி வைத்துக் கொள்ளுங்கள்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ வெளிநாட்டினர் தங்கள் அருகில் தும்முவதையோ இருமுவதையோ விரும்ப மாட்டார்கள். அதே போல் வரிசையில் நிற்கும் போது, தங்களை மற்றவர்கள் இடித்துக்கொண்டு போவதையும் விரும்புவதில்லை.

✈ வெளிநாட்டினர் அடிக்கடி நன்றி கூறுகிறார்கள். அந்தப் பழக்கத்தை நாமும் கடைபிடிப்போம். அவர்களைப் பார்த்து, நமது மொழியில் கேலி செய்யாதீர்கள். இது மிகவும் தவறான செயல்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ சேலை கட்டியப் பெண்களுக்கு வெளிநாட்டினர் மிகவும் மரியாதை தருகின்றனர். அதனால் இயன்றவரை நம்ம ஊர் ஆடைகளில் வளைய வாருங்கள்.

✈ அங்குள்ள பொது தொலைபேசி, பணம் அல்லது கார்டு மூலம் பேசுவதாக இருக்கும். குழப்பத்தைத் தவிர்க்க இன்டர்நேஷனல் சிம் கார்டு நம் செல்ஃபோனில் பொருத்தி உபயோகப்படுத்துவது நல்லது. ஹோட்டலில் உள்ள ஃபோனில் பேசினால் செலவு மிக அதிகம்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ வெளிநாடு செல்ல விரும்புபவர்கள், அந்த நாட்டின் தட்பவெப்ப நிலையை அறிந்து அதற்கேற்ப ஆடை அணிய திட்டமிட்டால் பயணம் இனிமையாகவும் சந்தோஷமாகவும் அமையும்.

✈ செல்ஃபோன் சார்ஜ் செய்ய வசதியாக இங்கிருந்தே தகுந்த 'அடாப்டர்' கொண்டு செல்லலாம். அல்லது ஹோட்டல் ரிசப்ஷனில் வாங்கி உபயோகப்படுத்தி மறக்காமல் திருப்பித் தரலாம்.



# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ தங்களுக்கு வேண்டிய மருந்து மாத்திரைகள் தவிர காய்ச்சல், வயிற்று வலி, இருமல், ஜலதோஷம் போன்றவைகளுக்கு மருத்துவர்களின் ஆலோசனைகளுடன் மாத்திரைகள் எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். தவிர, முன்னெச்சரிக்கையாக டி.டி., டைஃபாய்டு ஊசி போட்டுக் கொள்வதும் நல்லது.

✈ பயணத்தின் போது புதிய ஷூவையோ காலணியையோ உபயோகிக்காதீர்கள். ஏற்கெனவே பழகியதை உபயோகிப்பது நல்லது. இதனால், பயணத்தின் போது கால்களில் ஒவ்வாமை, அரிப்பு போன்ற சிரமம் ஏற்படாது.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ பயணத்தின் போது அதிக பணத்தைக் கையிலெடுத்துச் செல்லாதீர்கள். இங்கிருக்கும் பணம் பரிமாற்றம் (Money Exchange) சென்று பயணிகள் காசோலையாக (Traveller's Cheques) மாற்றி, காசோலையில் இருக்கும் எண்ணை மறக்காமல் குறிப்புப் புத்தகத்திலும் எழுதுங்கள். காசோலை தவறினாலும், அந்த எண்ணை வைத்துப் பணம் பரிமாற்றத்தை நிறுத்த முடியும்.

✈ பயணிகள் காசோலை (Traveller's Cheques)யை அந்தந்த நாட்டின் கரன்சியாக மாற்றும்போது ஹோட்டலிலோ (அ) விமான நிலையத்திலோ மாற்றாதீர்கள். கொடுக்கப்படும் விலை அதிகமாக இருக்கும். அங்குள்ள பணம் பரிமாற்றம் (Money Exchange) (அ) வங்கியில் மாற்றுவது நல்லது. தனிப்பட்ட தரகர்களிடம் வாங்க நேரிட்டால் ஜாக்கிரதையாக இருங்கள்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



→ கேமரா பேட்டரி, மெமரிகார்டு போன்றவற்றை நம்மூரிலிருந்தே வாங்கிச்செல்லுங்கள். அங்கு வாங்கிக் கொள்ளலாம் என்று நினைக்காதீர்கள். இங்கு விற்பதை விட பல மடங்கு, அங்கு விலை அதிகம்.

✈ ஒருநாட்டிலிருந்து வெளியேறுவதற்கு முன்பு அந்த நாட்டின் காசுகளை அங்கேயே செலவழித்து விடுங்கள். கையில் எப்போதும் அமெரிக்கன் டாலர் சில வைத்திருப்பது நல்லது. அதற்கு எங்குச் சென்றாலும் மதிப்பு உண்டு.

# வெளிநாட்டுப் பயணம் 64!





→ அல்ட்ரா வயலட் கதிர்களினால் கண்கள் பாதிக்கப்படாமல் இருப்பதற்காக கருப்பு கண்ணாடியை எடுத்துச் செல்லுங்கள். அதுபோல சருமத்தைப் பாதுகாக்க லோஷன்களையும் எடுத்துச் செல்லுங்கள்.



நாம் செல்லும் இடங்களைப் பற்றிய தகவல்களை முன்னதாகவே அறிந்து கொள்ளுங்கள். கண்ணில் கண்டதையெல்லாம் ஃபோட்டோ எடுத்து மாட்டிக் கொள்ளாதீர்கள். சில நாடுகளில் அரசுக்குச் சொந்தமான கட்டடங்களைப் புகைப்படம் எடுக்க அனுமதி யில்லை. எடுத்தால் சிறைத் தண்டனை கூட உண்டு.

# வெளிநாட்டுப் பயணம் 64!




✈ பயணத்திற்குத் தயாராகும் போது தங்களது பெயர் பிரிண்ட் செய்யப்பட்ட ஸ்டிக்கர்களை தயார்படுத்திக் கொள்ளலாம். தங்களது கேமரா, வீடியோ கேமராவில் எளிதில் அடையாளம் கொள்ளும் வகையில் தங்களது பெயர் பொறித்த ஸ்டிக்கர் ஒட்டி வைத்துக் கொள்ளுங்கள்.

✈ விமானப் பயணத்தின் போது கையில் வைத்துக் கொள்ளக்கூடாத கத்திரிக்கோல், கத்தி, ஷேவிங் ரேசர் போன்ற கூர்மையான பொருள்களையும் பாடி ஸ்ப்ரே போன்ற வாசனை திரவியங்களையும் check-in Baggage-ல் வைத்துக் கொள்ளலாம்.

# வெளிநாட்டுப் பயணம் 64!



✈ மூக்குக் கண்ணாடி ஒன்றைக் கூடுதலாக வைத்துக் கொள்ளுங்கள். தவிர, பயணத்தின் போது பெண்கள் அதிக நகைகளை அணிந்து, மற்றவர்கள் கவனத்தை ஈர்க்காமல் இருப்பது நல்லது.

✈ பயணத்தின் போது அத்தியாவசியமான குறைந்த ஆடைகளையே எடுத்துச் செல்லுங்கள். ஹோட்டலில் அயர்ன் பாக்ஸ் வைத்திருப்பார்கள். தேவைப்பட்டால் அயர்ன் செய்து கொள்ளலாம்.



# வெளிநாட்டுப் பயணம் 64!

# சுருக்காமல் முழு பெயரையும் எழுது



✈ இமிகிரேஷன் படிவத்தில் எழுதும் போது தங்களது ஊரின் பெயரை சுருக்காமல், அதாவது திருச்சி, கோவை என்று எழுதாமல் திருச்சிராப்பள்ளி, கோயமுத்தூர் என்று முழுதாக எழுதவும். அதே போல் ஃபோன் நம்பர் எழுதும் போது உதாரணமாக திருச்சிராப்பள்ளி தொலைபேசி எண். 2462232 என்று இருந்தால் 091-431-2462232 என்று பின்கோடு (Country code, STD Code) நம்பரையும் சேர்த்து எழுதவும்.

✈ பயணத்திற்குத் தேவையானவை: பாஸ்போர்ட், குறிப்புப் புத்தகம், டூப்ளி கேட் சாவிகள், பெயர் ஸ்டிக்கர், கறுப்புக் கண்ணாடி, மருந்துகள், டாக்டரின் பிரிஸ்கிரிப்ஷன், ஸ்கின் லோஷன், பஞ்சு, சாக்ஸ், கேமரா, சிம்கார்டு, மெமரி கார்டு, சார்ஜர், பேட்டரி, அடாப்டர், ஐ.டி. கார்டு.



தொகுப்பு:
பி.கே.அருணா, D.A.A.(Hons)
இரண்டாமாண்டு பி.ஈ.,
பண்ணாரியம்மன்
இன்ஸ்டிட்டியூட் ஆஃப்
டெக்னாலஜி, சத்தியமங்கலம்.
கார்ட்டூன்ஸ்: பிள்ளை

# வெளிநாட்டுப் பயணம் 64!

Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN / CC (S) DN / 170 / 09 - 11 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 103 / 09 - 11* Registered as a
Newspaper in Srilanka. Supplement to the Mangayar Malar November 2009 issue

நாம் ஒரு நாட்டுக்குச் செல்லும்போது, நமது நாட்டின் பெயரைக் கெடுக்காதபடி நமது நடை, உடை, பாவனை, பேச்சு அமைந்திருத்தல் அவசியம். அதே போல், நம் நாட்டுக்குத் திரும்பும்போது, நமது நாட்டை அவர்களுடன் ஒப்பிட்டுப் பேசாதீர்கள். நம்மிடமும் பண்டையக் கலாச்சாரம், போற்றத்தகுந்த விஷயங்கள் நிறைய உள்ளன. நம்மையே நாம் குறைகூறுவதற்கு பதில் நம் நாடு முன்னேற நாமும் ஒரு வழிகாட்டியாக இருப்போம்.

என் மகன், தனது குடும்பத்தினருடன் என்னையும் வெளிநாடு அழைத்துக் கொண்டு சென்றிருந்த போது, என் கணவர், தனியாக சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். குடும்பத்தாருடனும், குழந்தைகளுடனும் கலகலப்பாக இருந்தவர் இப்போது தனிமையில் இருக்கிறாரே என்றெண்ணி, பக்கத்து ஊரிலிருக்கும் எனது தங்கை அவள் வீட்டில் சாப்பிட



# உண்ணாமல் கெடும்!

அழைத்திருக்கிறாள். ஆனால், என் கணவரோ சாப்பிடுவதற்காகப் போக வேண்டுமா என்று நினைத்துப் போகாமலிருந்து விட்டார்.

நாங்கள் திரும்பி வந்ததும் என் தங்கை, எங்களைப் பார்க்க வந்தாள். "மாமாவை ஒரு மாறுதலுக்காக எங்கள் வீட்டிற்குச் சாப்பிடக் கூப்பிட்டேன். அவர் வரவில்லை. இதுதான் உண்டு வயிறு கெடும். உண்ணாமல் உறவு கெடும் அப்படிங்கிறது" என்று ஒரு போடு போட்டாள். எங்களுக்கு மிக வருத்தமாகி விட்டது.

"இனி நீங்கள் சாப்பிடக் கூப்பிட்டால் கட்டாயம் வருகிறேன்" என்று சமாதானப்படுத்தினார் என் கணவர். சாப்பிட வாங்க என்பது வயிற்றுக்கு உணவு இட மட்டுமல்ல, உறவையும் பலப்படுத்திக்கத்தான்! இத்தருணத்தில் உணவுக்கும் உறவுக்கும் மதிப்பினைக் கொடுப்போம் என்று எனக்குப் பாடத் தோன்றியது சரிதானே?

- எஸ்.ஜம்பகலக்ஷ்மி,
கிழக்கு தாம்பரம்.



புனேயில் திருமணங்களைப் பதிவுசெய்யப் போகும் தம்பதிகளிடம், 'சுற்றுச்சூழலைப் பாதுகாப்பதற்கு எங்களால் ஆவன செய்வோம்' என்று உறுதிமொழி வாங்கிக் கொள்கின்றனர். புதுமையான, அருமையான ஐடியா! மற்ற ஊர்களிலும் பின்பற்றலாமே!

- கே.நிருபமா, புனே.

Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN/CC(S)DN/170/09-11 - Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN/CC(S)DN/103/09-11 - Registered as a Newspaper in Srilanka

# தோகை மயில் கோலம்



19-1 வரிசை (நேர்புள்ளி)

ஆர்.சாந்தா, சென்னை.